

# திருவெள்ளறை



ஆசிரியர்

வெ. வேதாசலம், M.A., Dip. Epgy. & Arch.

அருங்காட்சியகக் காப்பாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

# திருவெள்ளறை



வெ. வேதாசலம், M.A., Dip. Epgy. & Arch.
அருங்காட்சியகக் காப்பாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

தமிழ்நாடு அரசு
தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு
1977

# அணிந்துரை

பாரத பூமி பழம் பெரும் பூமி. இம்மாதவம் புரிந்த நாட்டின் கோயில்கள், கலைகள் கல்வெட்டுகள், சமுதாயம், சமயம், இலக்கியம் ஆகிய அனைத்தையும் ஒருங்கே இணைத்து அறிந்து போற்றும் இளைஞர் சமுதாயத்தை உருவாக்க தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, கல்வெட்டு நிறுவனம் ஒன்றை நிறுவிப் பயிற்சியளித்து வருகிறது. அதில் ஓராண்டு பயிற்சி பெறும் மாணவர்கள் தங்கள் பயிற்சியின் அங்கமாக ஒரு குறிப்பிட்ட கோயிலையும், அது இருக்கும் ஊரையும் பற்றி ஒரு நெடும் ஆராய்ச்சி எழுத்துரை இயற்ற வேண்டும். அந்த வரிசையில் இந்நிறுவன மாணவர் திரு வெ. வேதாசலம் எழுதிய இந்நூல் திருச்சிக்கு அருகிலுள்ள திருவெள்ளறையைச் சித்தரிக்கிறது. நல்ல ஆராய்ச்சித் திறனோடு பல செய்திகளைத் திரட்டியும், சிந்தித்தும், எழுதியுள்ள எமது மாணவர் நூலை வெளியிடுவதில் பெருமை கொள்கிறோம்.

இவர் வருங்காலத்தில் நல்ல ஆராய்ச்சியாளராக மலருவார் என்பதில் ஐயமில்லை. இந்நூல் திருவெள்ளறையைப் பற்றி முழுமையாக அறிய உதவும். இதுபோல் வரலாற்று சிறப்பு நிறைந்த ஊர்களைப் பற்றி நூல்கள் வெளியிடுவதே எம் துறையின் குறிக்கோள்.

இரா. நாகசாமி

# முகவுரை

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை மாணவனாக இருந்தபோது என் உடன் பயின்ற மாணவர்களுடன் திருச்சிக்கு அருகிலுள்ள திருவெள்ளறைக்குச் சென்றிருந்தேன். முதன் முதலாக அவ்வூரைப் பார்த்தது அப்போதுதான். இரண்டு பல்லவர் காலத்துக் குடைவரைகள்; சிவனுக்கும் திருமாலுக்கும் தனித்தனியே இரண்டு கோயில்கள். வியக்கத்தக்க வடிவில் பல்லவர் காலத்துக் கிணறு ஒன்று. கண்களில் ஒற்றிக் கொள்ளலாம், அப்படி பாறைகளில் பண்டைச் சோழர் கல்வெட்டுக்கள். பல இடங்களில் கன்னியர் கோயில்கள். எங்கும் நீர்நிலைகள். ஊரெங்கும் சிதறிக் கிடக்கும் பண்டைக் காலத்துச் சிற்பங்கள், தூண்கள், கோயில் மண்டபத்து விதானங்களில் ஓவியங்கள். அங்கிருக்கும் ஹொய்சளர் கோபுரத்தின் செம்மை; கம்பீரம். இவை என் மனத்தைச் சிறையிட்டன. வாழ்ந்து அழிந்தவனை நினைவூட்டின.

"ஆதிதிருவெள்ளறை" என்று அங்குள்ள ஒருவர் சொன்னது என் சிந்தையைத் தூண்டியது. ஊரை விட்டு வெளியேறும் போது என் ஆய்வுக் கட்டுரைப் பொருளாக திருவெள்ளறையைத் தேர்வு செய்தேன். என் முடிவை இயக்குநர் எந்தவித மனத்தடங்கலும் இன்றி ஏற்றுக் கொண்டார். அன்றிலிருந்து இப்பொருளில் என் மனம் லயித்துப் போயிற்று.

கர்ணபரம்பரைக் கதைகள், புராணம், ஓலைச் சுவடிகள், இலக்கியம், கல்வெட்டுக்கள், வெள்ளறை யைப் பற்றிப் பேசும் நூல்கள் இவை போன்ற பிற வற்றிலிருந்தும், வெள்ளறைக்காரர் வாக்கிலிருந்தும், அனைத்துக்கும் மேலாக என் காட்சியில் விளைந்த சிந்தனையிலிருந்தும் பிறந்ததே, " திருவெள்ளறை " என்ற பெயரில் இன்று உங்கள் கரத்தில் நூலாகத் தவழ்கின்றது.

ஒரு காலத்தில் மழநாட்டைச் சார்ந்த தனி ஊராக வெள்ளறை இருந்தது. சங்க காலத்திலும், பல்லவர், பாண்டியர், சோழர் காலத்திலும் மழவர்கள் தமிழ் நாட்டு அரசியலில் தனியிடத்தைப் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றனர். புகழ்பெற்ற அரசியல் அதிகாரி களையும் பேரரசின் தேவியரையும் பெற்று மழகுலம் விளங்கிற்று. இத்தகு சிறப்பு வாய்ந்த மழநாட்டைச் சார்ந்த திருவெள்ளறை பண்டைய அரசியல் வரலாற் றில் பெற்ற இடமும், பெயரும் பெரியது. சிறப்பிற் குரியது.

திருவெள்ளறையைத் திருப்பைஞ்ஞிலிக் கல் வெட்டு 'தனியூர்' என்றே குறிப்பிடுகிறது. சிற்றரசர் அரசியல் பிரிவில், பேரரசர் வளநாட்டுப் பிரிவில் கூற்றம், நாடு முதலிய பிரிவுகளில் வெள்ளறை மாறி மாறி இருந்து வந்திருக்கின்றது. சேலம்மாவட்டம், திருச்சிமாவட்டம், சமயபுரவட்டம், லால்குடி வட்டம் என்ற தற்காலத்திய நாட்டுப் பிரிவுகளில் கூட மாறி மாறி இது இருந்து வந்திருக்கிறது.

வெள்ளறையின் புகழ் தமிழகமெங்கும் பழங் காலத்திலேயே பரவியிருந்தது. வெள்ளறைக்காரர்கள் வேற்றூர்களுக்குச் சென்று சிறப்பு மிக்க பதவிகளில் அமர்ந்திருக்கின்றனர். தங்கள் ஊருக்கென்று அமைந்த அளவைகள், கலைகள் முதலியவற்றைக் கொண்டிருந்த னர். பல நிலக்கொடைகளைப் பெருங்கோயில்கட்குச் சென்று அளித்துள்ளனர்.

பிற்காலச்சோழர் காலத்திலிருந்து வெள்ளறை வைணவ வரலாற்றில் சிறப்புக்குரிய இடத்தைப்பெற்று விட்டது. திருவரங்கத்திலிருந்து வந்த இராமானுசரின் சிந்தனைக்கு இடங்கொடுத்தது. இங்கு தான், அவர் திருவரங்கத்துக் கோயில் வழிபாட்டு முறைகளை ஒழுங்கு செய்து 'பத்துக்கொத்தை' வகுத்தார். இராமானுஜருக்கென்று வெள்ளறையில் விஜயநகரர் காலத்தில் எடுக்கப்பட்ட தனிக்கோயில் ஒன்றுண்டு. வைணவப்பெரியார்கள் உய்யக்கொண்டாரும், எங்க ளாழ்வாரும் பிறந்த இடம் வெள்ளறையே ஆகும். நூற்றெட்டுதிருப்பதி, திருவந்தாதி, அம்மானை, தாலாட்டு போன்ற சிற்றிலக்கியங்களிலெல்லாம் இது சிறக்கப் பேசப்பட்டுள்ளது. இத்திருப்பதியைப் பெரி யாழ்வாரும், திருமங்கை மன்னனும் மங்களாசாசனம் செய்திருக்கின்றனர்.

திருவெள்ளறைக் கைபீதுகள் என்ற பெயரில் சில ஓலைச்சுவடிகள் மெக்கன்சி திரட்டில் உள்ளன. இவை 17, 18, 19-ஆம் நூற்றுண்டுகளில் நிலவிய வெள்ளறைப் பெருமாள்கோயில் நிர்வாகத்தையும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் அறியத் துணை நிற்கின்றன.

வெள்ளறைப் பெருமாள் கோயில் கட்டிடக்கலை வரலாற்றைக் காலவாரியாகத் தெளிவாக அறிந்து கொள்ள இயலாத வகையில் பிற்காலத்தார் அதன் பழமையான பகுதிகளைக் குலைத்திருக்கின்றனர். இதனால் காலவாரியாக அதைத் தொகுத்துச் சொல்வதில் மயக்கம் ஏற்படத்தான் செய்கிறது. வெள்ளறைப் பெருமாள் கோயில் குடைவரை தமிழ்நாட்டில் பழமையான கண்ணன்-ருக்மணி வழிபாட்டை முதன் முதலில் கல்வெட்டு மூலமாகத் தெரிவிக்கின்றது. இங்குள்ள ஹொய்சளர் கோபுரம் நமக்கு திருவரங்கம் குழலூதும் பிள்ளை கோவிலுக்கு அடுத்துக் கிடைத்த ஹொய்சளர் கலைச்செல்வம்.

சிவன் குடைவரைக்கோவில் பிற்காலப் பல்லவர் காலத்தில் தோன்றி, முதற்பராந்தகன் காலத்தில் உன்னத நிலையை அடைந்து, பிற்காலச்சோழர் காலத்தின் இறுதியில் வெள்ளறைப் பெருமாள் கோயில் வைணவவரலாற்று எழுச்சியில் மங்கிப் போயிற்று. இவ்வூரிலுள்ள குடைவரைகள் எல்லாம் முத்தரையர் பாணியைப் போல் இருக்கின்றன என்று கலைப் பெரியார்கள் கூறிச் சென்றுள்ளனர். இதுதான் என்னை ஸ்வஸ்திக வடிவக் கிணறும் ஏன் முத்தரையர் பணியாக இருக்கக்கூடாது என்று எண்ண இடம் தந்தது. இந்த எண்ணத்திற்குக் காரணங்கள் உள்ளே தந்திருக்கிறேன். இக்கிணற்றின் அமைப்பு வியக்கத்தக்க முறையில் உள்ளது. இதன் கீழ்ப்படிக்கட்டுகளில் பத்து வரை பொறிக்கப்பட்டுள்ள பல்லவர் காலத்துத் தமிழ் எண்களின் வரிவடிவங்கள் வெளியுலகு அறிய வேண்டிய ஒன்றாகும்.

வெள்ளறையில் பல்லவர் காலந்தொட்டு இன்று வரை சங்கிலித் தொடர்போல் அழியாது விளங்கும் வழிபாடு சப்தமாதர் வழிபாடு ஒன்றேயாகும். மற்றவை ஒரு காலத்தில் வளர்ந்தும், ஒரு காலத்தில் தேய்ந்தும் இருந்து வந்திருக்கின்றன. எல்லாக் காலத்தையும் சார்ந்த சப்த கன்னியர் உருவங்களை இன்றும் இங்கே காணலாம்.

இங்கு கட்டிடக் கலையில் நிகரேர்த்தியானவையாய் ஸ்வஸ்திக வடிவக் கிணறும், சிற்பங்களுக்குள் மிகச் சிறந்தவையாய் பெருமாள் கோயில் அதிட்டானச் சிற்பங்களும், ஸ்வஸ்திக வடிவக் கிணற்றில் கூறபத்தியில் அமைந்த சிற்பங்களும் விளங்குகின்றன. வெள்ளறைக் கோயில்களின் உள்ளே நாம் பார்க்க வேண்டியதை விட வெளியே பார்க்க வேண்டியது மிக முக்கியமாகும். சிவன் கோயிலுக்குத் தெற்கே கிடக்கும் முற்காலச் சோழர் காலத்துச் சூரியன் முகமும், உடையார் குளத்தின் நடுவில் இருக்கும் பெருமாள் உருவமும், செல்லியம்மன் கோயில் சப்த மாதர் உருவங்களும், கன்னிமார் கோயிலுக்கு எதிரே கம்பீரமாய் அமர்ந்திருக்கும் நந்தியின் எழிலும் என்றும் நினைவை விட்டு அகலாத கலைப் படைப்புகள். இச்சிற்பங்களையெல்லாம் வெள்ளறையிலுள்ள கற்களைக் கொண்டு வெள்ளறையைச் சார்ந்த சிற்பிகளே செய்திருக்க வேண்டும்.

பெருமாள்கோயில் சித்திரமண்டப விதான ஓவியங்கள் இராமாயணக் காட்சியைச் சித்தரிக்கின்றன. வெள்ளறைச் சமூக வரலாற்றுய்வு முத்துராஜாக்களுக்கு உள்ள இடம் பெரிதெனக் காட்டு

கின்றது. இன்றும் வெள்ளறையில் அதிகம் வாழ்பவர் முத்துராஜாக்கள் தாம்.

இப்படி பலவாருகப் பல செய்திகளேயும், என் முடிவுகளேயும் இந்நூலாய்வில் இன்னும் விரிவாக உள்ளே தந்திருக்கின்றேன். என் முடிவுகளே முடிவுகள் அல்ல. பின் வருவோர் தரும் சான்றுகள் என் முடிவு களே வலுவூட்டவும் செய்யலாம். மாற்றவும் செய்யலாம். திருவெள்ளறை என்ற தமிழ்நாட்டுக் கலேயூரின் முழு மையான, உண்மையான வரலாற்றினைத் தருவதில் நான் எந்த அளவு வெற்றி பெற்றிருக்கின்றேன் என்ற முடிவை உங்களிடத்தில் விட்டு விடுகின்றேன்.

இந்நூலினேச் செவ்வனே அச்சிட்ட திரு. செங்கல்வராயன் முதலிய தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை அச்சுப் பிரிவினர் அனைவருக்கும் என் அன்பு நன்றிகள்.

இந்நூலே உருவாக்க பல்லாற்ருலும் துணே நின்ற என்னுடன் பயிற்சி பெற்ற மாணவர்களுக்கும், இத் துறைக் கல்வெட்டாய்வாளர்கள், அகழ்வாய்வாளர், பதிவு அலுவலர்கள், வெள்ளறைவாழ் அன்பர்கள் ஆகிய அனைவருக்கும் நன்றிகள் பல தெரிவிக்க வேண்டியவன் ஆவேன்.

திருவெள்ளறைப் புகைப்படங்களில் சிலவற்றைத் தந்துதவிய பாண்டிச்சேரி பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டு ஆராய்ச்சிக் கழகத்திற்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இத்துறைக்கு நான் வந்தது என்வாழ்வில் ஏற்பட்ட முக்கிய திருப்பம் ஆகும். "காரியமோ மிகப் பெரிது. என் திறமையோ சிறிது." இத்துறைக்கு மாணவனாக வந்த அந்தப்பருவந்தொட்டு என் ஆர்வத்தைத் தூண்டித் தொல்லியல் அறிவை வளர்த்து வழிகாட்டி, இப்பணியினைச் செய்யப் பணித்த என் ஆசானாகிய தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் திரு. டாக்டர். இரா. நாகசாமி அவர்களுக்கு என் பணிவுமிக்க நன்றிகள் உரித்தாகட்டும்.

அன்பன்

வெ. வேதாசலம்

# உ ள் ள ட க் க ம்

# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 17 | சோமாஞ்சடையனின் | கோமாறஞ்சடையனின் |
| 12 | 26 | விஜயன் | விஜயாலயன் |
| 20 | 25 | Sevell | Sewell |
| 28 | 16 | முருபருடையார் | மூலப்பருடையார் |
| 32 | 16 | கூறப்படுகின்றன | கூறப்படுகின்றது |
| 39 | 9 | சாப்பிடவாராய் | காப்பிடவாராய் |
| 39 | 15 | நந்திவர்மன் | தந்திவர்மன் |
| 40 | 7 | போகிருர் | போகிருள் |
| 94 | 21 | வருகிறது | வருகிருர் |
| 140 | 5 | சச்சிபரமேஸ்வர | கச்சிபரமேஸ்வர |
| 147 | 20 | சோன் | கோன் |
| 154 | 28 | கோயிலில் | கோயிலும் |
| 167 | 9 | தமிழிலக்கியத்தில் | வைணவ இலக்கியத்தில் |
| 202 | 4 | கல்நட்டான்<br>மண்நட்டான் | கல்ஒட்டான்<br>மண்ஒட்டான் |
| 202 | 21 | குறவன்-25 | குறவன்-3<br>குளுவன்-22 |
| 220 | 20 | குயவன் | குளுவன் |
| 203 | 22 | Cast | Caste |
| 203 | 24 | கடுமையான | கருமையான |

# திருவெள்ளறை

திருவெள்ளறை திருச்சி மாவட்டம் லால்குடி வட்டம் கரியமாணிக்கம் பகுதியிலுள்ளது. பழம் பெருமை படைத்தது இவ்வூர். ஒரு காலத்தில் உயர்ந்து நின்றது; இன்று ஒளியிழந்து நிற்கின்றது. ஊரைச் சுற்றி ஒரு கல் தொலைவுக்கு வயல்வெளிகளில் பழைய கட்டிட இடிபாடுகள், செங்கல் ஓடுகள் நிறைந்துள்ளன. இதுவே திருமங்கை மன்னன் பாடி நின்ற இடம்; விஷ்ணுபட்டர் பிள்ளைத் தமிழில் குலவிய இடம்; உய்யக்கொண்டார் பிறந்த இடம்; இராமாநுசர் இருந்த இடம்; ஆழ்வார்களின் அமுதவாக்கும் வேத ஒலியும் அருது ஒலித்த இடம்; ஆரவாரமிக்க விழாக்கள் நிரம்பி நின்ற இடம். பசிப்பிணிகொண்டு வந்த பல்லாயிரக்கணக்கான மக்களது பசிப்பிணியை விழாக் காலங்களில் இங்கு தீர்த்தார்களாம். உள்ளப் பசி கொண்டு வந்த வைணவர்கள் கவலையைப் போக்க பாசியக்காரர் இராமாநுசர் கூடம் ஒன்று இருந்ததாம். வெள்ளறைக் கோயிலோடு ஒத்த பழமை வாய்ந்த சிவன் கோயில் ஒன்றும் இவ்வூரில் இருக்கிறது. பெருமாளின் புகழில் அது மங்கி விட்டது போலும். எவ்விடத்திலும் காணவியலாத 'சுவஸ்திக' வடிவ பழங்கிணற்றை இங்குதான் பார்க்க முடியும். இப்பெருமைக்குரிய பழஞ்சான்றுகள் வெள்ளறையில் அழியாது இன்றும் நிற்கின்றனவே. 'உயர்வும் தாழ்வும்

ஒரு வழி நில்லா ' என்பது எவ்வளவு உண்மையான வார்த்தை! இவ்வூரைக் கண்ட ஒரு வரலாற்ருசிரியன் மனத்தகத்து இப்படித்தான் எண்ணங்கள் எழுந் தோடும்.

இத்திருவெள்ளறை துறையூர் செல்லும் நெடுஞ் சாலேயில் 12-வது கல்லில் இருந்து சுமார் 2 கி. மீ. மேல்புறத்தில் உள்ளது. திருச்சியிலிருந்து துறையூருக் குச் செல்லும் பேருந்துகளில் இவ்வூரை அடையலாம். புகைவண்டியில் சென்ருல் உத்தமாண்டார் கோயிலில் இறங்கித் துறையூர் பேருந்தில் செல்ல வேண்டும்.

இவ்வூரைச் சுற்றி சற்று விலகி பல ஊர்கள் உள்ளன. கீழ்த் திசையில் அய்யம்பாளேயமும், தென் திசையில் தீரம்பாளேயமும், பூனும்பாளேயமும், மேல் திசையில் காட்டுக்குளமும், வட திசையில் சிறுபத் தூரும் உள்ளன. தெற்கே மண்ணச்சநல்லூரும் வடக்கே துறையூரும் வெள்ளறைக்கருகில் உள்ள முக்கிய நகரங்கள். தென் மேற்கே அப்பர் பாடிய திருப்பைஞ்ஞீயும், தெற்கே ஆழ்வார்கள் பாடிய அரங்க மும், மழநாட்டுப் பாச்சிலும் இதன் அருகில் உள்ள புனிதப் பதிகளாம்.

காலவாய்பட்டியும், சாலப்பட்டியும் திருவெள்ளறை ஊராட்சியைச் சார்ந்த சிற்றூர்கள். இவற்றின் தலே மையிடம் திருத்தவத்துறையாகும்.

காவிரி, கொள்ளிடம் படுகையை விட்டு வடக்கே எட்டுக் கல் தள்ளி இருப்பதால் வெள்ளறை நீர்

வளமும் நிலவளமும் குன்றிக் காணப்படுகின்றது. மேலும் வெள்ளறை மேட்டுநிலமாகையால் இவ்விரு பெரும் ஆறுகளால் பயன் பெற இயலவில்லை. இப் பகுதியில் தொடர்ச்சியாக வெண்மையான பாறைகள் நிறைந்து காணப்படுகின்றன. 'அறையும் பொறையும் மணந்ததலைய' என்று வரும் புறநானூற்று அடியில் அறை என்பதற்குப் பொருள் சிறு குன்று அல்லது சிறு பாறை என்று உரைப்பர். வெண்மையான அறைகள் நிறைந்து காணப்படும் இவ்வூருக்கு 'திரு' என்ற அடைமொழி கொடுத்து 'திருவெள்ளறை' என்று பெயரிட்டிருப்பது மிகவும் பொருத்தமேயாகும். வட மொழியில் இப்பொருளில்தான் 'ஸ்வேதகிரி' என் றழைக்கின்றனர்.

இன்று கிராமமாகக் காட்சியளிக்கும் வெள்ளறை 500 ஏக்கர் பரப்பளவு கொண்டது. காவிரிப் படுகைக்கும், கொல்லிமலை பச்சைமலைக்கும் இடையே யுள்ள இந்நிலப்பகுதிகளில் முக்கிய விளைபொருள்கள் சோளம், கம்பு, கேழ்வரகுமாகும். பாசனத்தை நம்பி வாழ்வதைவிட மக்கள் கைத்தொழில்களை நம்பியே வாழ்கின்றனர். வறட்சியான பகுதியாதலின் கேணி, குளங்களின் நீரால் பாசனம் நடக்கின்றது. இப்பகுதி யில் ஆறுகள் ஏதும் ஓடவில்லை. ஊருக்கு வடக்கே இரண்டு கல் தொலைவில் காட்டாறு (உப்பாறு) என்ற ஓராறு ஓடுகிறது. திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த இப்பகுதிகளின் தட்பவெட்ப நிலைகளைப் பற்றிப் பேசும் போது லூயிஸ்மூர் என்பவர் 'இப்பகுதி ஆண்டில் ஒன்பது மாதங்கள் வெப்பமாகவும் அடுத்த மூன்று

மாதங்கள் அதைவிட வெப்பமாகவும் இருக்கும்' என்கிருர். இப்பகுதி தென்மேற்கு, வடமேற்குப் பருவக் காற்றுகளால் சொற்ப மழையையே பெறுகிறது.

பெருமாள் கோயிலே இவ்வூரின் நடுநாயகமாய் விளங்குகிறது. இதன் வடபுறமும் கீழ்புறமும் இரண்டு சாலேகள் செல்கின்றன. இவற்றின் ஓரங்களில் பெரும்பாலான வீடுகள் அமைந்துள்ளன. மேல்புறம் வீடுகள் இல்லே.



# வரலாற்றில்
# திருவெள்ளறைப் பகுதிகள்

## சங்ககாலம்

சங்ககாலத்தில் திருவெள்ளறை என்ற ஊர் இருந்ததா என்பது ஆராய்தற்குறியது. கி. மு. வைச் சார்ந்த மீனாட்சிபுரம் கல்வெட்டில் 'வெள்ளறை நிகம தோர்' என்ற வணிகர் குழாம் பற்றிக் குறிப்பு காணப் படுகிறது.[1] இதனால் இவர்கள் இன்றைய திருவெள் ளறையைச் சார்ந்தவர்களா? என்ற ஐயம் எழுகின்றது. திருவெள்ளறை என்ற பெயரில் தமிழ்நாட்டில் வேறு ஊர்கள் இன்று இல்லாத நிலையில் இன்றைய திரு வெள்ளறையை இது குறிக்கின்றது என்ற முடிவுக்கு வரலாம். ஆனால் இம்முடிவை ஆராய்ந்து காணும் போது ஆய்வு நம்மை வேறு முடிவிற்குக் கொண்டு செல்கிறது. மீனாட்சிபுரத்திற்கு அருகிலேயே 'வெள் ளரிப்பட்டி' என்ற ஊர் ஒன்று இன்று காணப்படு கிறது. இவ்வெள்ளரிப்பட்டியே பண்டு 'வெள்ளறைப் பட்டியாக இருந்து பின்பு வெள்ளரிப்பட்டியாக மாறி யிருக்க வேண்டும். மேலும் திருவெள்ளறை தொன்று தொட்டு வணிகர்கள் வாழ்ந்த தலமாக இருந்து வந் திருக்கிறது என்பதற்குத் துணிவான சான்றுகள் இல்லை. இதனால் சங்ககாலத்திலும் ஒரூர் மதுரைக் கருகில் இருந்தது அதற்கு வெள்ளறை என்று பெய

ரிட்டு வழங்கிய வழக்கும் இருந்தது என்று அமைய லாம்.

திருவெள்ளறைப் பகுதிகள் சங்ககாலத்தில் 'மழ நாடு' என்ற பெயரில் திகழ்ந்தனவென்று சங்க இலக் கியங்கள் கொண்டு உய்த்துணரலாம். திருவெள் ளறை மழநாட்டில் இருந்தது என்பதற்கு நேரடியான கல்வெட்டுச் சான்றுகள் இல்லை. இருந்தபோதிலும் மழநாட்டுப்பகுதிகளாக இருந்த வடவழி நாட்டிலும்[2] பாச்சில் கூற்றத்திலும்[3] திருவெள்ளறை மாறி மாறி இருந்தது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள் ளன. வெள்ளறை பண்டு இராஜாசிரய வளநாட்டில் இருந்திருக்கிறது. இம்மழநாடே 'மழநாடாகிய இராஜாசிரய வளநாடு' என்று இராசராசன் காலத் தில் பெயர் மாற்றம் பெற்றது. இனி மழநாடு என் பது எங்குள்ளது? இதன் எல்லை எது? மழவர்களின் வரலாறு என்ன? என்பனவற்றைக் காணலாம். இவை திருவெள்ளறை பற்றிய முழுமையான வரலாற் றினை உருவாக்கத் துணைபுரியும் என்பதில் ஐயம் இல்லை.

## மழநாடு

மழநாட்டின் எல்லை எது என்று வரையறுக்கப் போதிய அளவில் சான்றுகள் கிட்டவில்லை.[4] கொங்கு நாடு; தென்கொங்கு, வடகொங்கு, மேல்கொங்கு, மழ கொங்கம் என்று நான்கு பிரிவுகளாக வழங்கப்பட்டு வந்தது. காவிரியின் கிழக்கே உள்ளப் பகுதி மழ கொங்கம் எனப்பட்டது.[5] இதனை 'பூவிரியும் பொழிற்

சோலை காவிரியை கடந்திட்டு அழகமைந்த வார்சிலையின் மழகொங்கம் அடிப்படுத்தும்'[6] என்று வேள்விக்குடி செப்பேடு செப்புகிறது. பெரியபுராணமும் 'பொங்கு காவிரி நீர் மழநாட்டுப் பொன்னிவடகரை மிசைப்போய்' என்றிதனைக் குறிக்கிறது.[7] மழவர்களின் கீழ் இருந்த கொங்கின் பகுதி 'மழகொங்கம்' எனப்பட்டது.

மழவர்கள் கொல்லிமலைக்குரியவர்கள். கொல்லிக் காவலன் என்று வல்வில்ஓரி குறிப்பிடப்படுகின்றான்.[8] இவனை 'மழவர்பெருமகன்' என்று நற்றிணை தெரிவிக்கின்றது.[9] பெரியபுராணத்தில் மழவரசன் ஒருவன் 'கொல்லிமழவன்' என்றே குறிப்பிடப்படுகின்றான்.[10] தொடக்கத்தில் மழவர்கள் கொல்லிமலையையே ஆண்டிருக்கவேண்டும். பின்னர் முல்லை நிலத்தையும், மருத நிலத்தையும் தங்களது ஆதிக்கத்தில் கொண்டு வந்தனர். மழநாடு கொல்லிமலையிலிருந்து தெற்கே பதினைந்து கற்களுக்கு மேலாக காவிரியின் வடகரைவரை பரவியிருந்தது.[11] மழகொங்கம், காவிரியின் வடகரையிலிருந்து கொல்லிமலை முடிய நிலவிய பகுதிகளை மழநாடு என்று ஒருவாறு துணியலாம்.

செம்புறைகண்டம்,[12] கலாறகூற்றம்,[13] மீமலை,[14] பாச்சில்கூற்றம்[15] வேண்கோடிகுடி கண்டம்[16] வடவழி நாடு,[17] வெள்ளையூர் கண்டம்,[18] முதலிய பகுதிகள் மழநாட்டுப் பகுதிகளாகப் பண்டு விளங்கியிருக்கவேண்டும் என்றும் உரைப்பர்.[19]

## மழவர்கள்

மழவர்கள் சங்ககாலத்தில் சிறந்த வீரர்களாக விளங்கியிருக்கின்றனர். உருவக்குதிரை மழவர்,[20] கழற்சான் மழவர்,[21] பெருந்தோண்மழவர்,[22] நெடுவேள்மழவர்,[23] வன்கை மழவர்,[24] என்று சங்க இலக்கியத்தில் இவர்கள் குறிக்கப்பெறுகின்றனர். இம்மழவர்கள் முல்லையும், குறிஞ்சியும் முறையில் திரிந்து நல்லியல் பிழந்து நடுக்குற்ற காலத்தில் பாலைவழி நின்று வழிப்பறிசெய்தும், வேட்டையாடியும் வாழ்ந்தனர் என்று சங்க அகப்பாடல்களால் அறியலாம்.

"கல்லா மழவர் வில்லிடை விளங்கிய
துன்னருங் கவலை யருஞ்சுரம்"[25]
"நோன்சிலை மழவர் ருன்புழக் கயருஞ்சுரன்"[26]

மழவர் என்பதற்கு ஒருவகை வீரர் என்று உ. வே. சா. பொருள் கூறுகின்ருர்.[27] மழக்களிறு[28] என்ருல் இளமையான களிறு என்று பொருள். மழவர் என்ருல் இளமையானவர்; இளமைத்தன்மை கொண்ட மறவர்கள் என்று கூறலாம்.

இம்மழவர்கள் வாழ்ந்த பகுதி மழப்புலம் எனப்பட்டது. இவர்களை 'விழவுடை விழசீர் வேங்கடம் ஆண்ட கள்வர் கோமான்' புல்லி என்பவன் புறங்கண்டான்.[29] 'கரிய நிறமுடைய இரலை மான்கள் உறங்கும் பரற்கற்களால் உயர்ந்த கற்குவியலின் கண்ணே, அஞ்சாமையுடைய மழநாட்டினர், ஆக்களைக் களவு செய்யும் களவேர் உழவருக்கு உதவியாக வளர்ந்த நெடிய சாலையுடைய ஆசினிப்பாலாவுடைய காடு' என்று குட

நாட்டிற்குச் செல்லும் வழியில் அமைந்த மழநாடு அகநானூற்றில் வர்ணிக்கப்படுகிறது.[30]

வல்வில் ஓரி

மழவர் தலைவர்களில் சங்க காலத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தவன். கடையேழு வள்ளல்களில் ஒருவன். வில்லாற்றல் பெற்றவன். இவன் எய்த அம்பு வேழம், உழவை, புகர்கலை, பன்றி என்று பல விலங்குகளை ஊடறுத்து உடும்பின் மீது தைய்த்து நின்றது என்பர்.[31]

"ஓங்கிருங் கொல்லிப் பொருநன்
ஓம்பா ஈகைவிறல் வெய்யோனே!"[32]
"கருவிவானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய்!"[33]
"மழவர் பெருமகன் மாவள் லோரி
கைவளம் மியைவ தாயினும் . . . . !"[34]

என்று சங்கப் புலவர்கள் இவனைப் புகழ்ந்து பரவுகின்றனர். இவன் 'ஓரி' என்ற தனது குதிரையோடு 'காரி'யோடு மலைந்தான் என்று சிறுபாணாற்றுப்படை கூறும்.[35]

பல்லவர் காலம்

இரண்டாம் நந்திவர்மனின் காசாக்குடிப்பட்டயம் சிம்மவிஷ்ணு மழவரசனை வென்றதாகக் கூறுகிறது.[36] மகேந்திரன், நரசிம்மன் ஆகியோர் காலத்தில் மழவரசன் ஒருவன் மழநாட்டுப் பாச்சிலை தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தான். இவன் 'கொல்லிமழவன்.

என்று அழைக்கப்பட்டான்.[37] இம்மழநாட்டுப் பாச்சில் சம்பந்தர், சுந்தரர் பதிகம் பெற்றது.

கொல்லிமழவன் மகள் மன்று பெரும்பிணியான முயலகன் வந்து அணைந்தமையால் அவதியுற்று நின்ருள். அப்போது அங்கு வந்த சம்பந்தரிடம் மழவர் கோன் அப்பிணி தீர்க்குமாறு வேண்டினுன். அவன் மீது அருள்கொண்டு பாச்சில் மேய பரம்பொருளைப் பணிந்து பிணி தவிர்க்கும் பதிகம் பாடினுர் சம்பந்தர். மழவன் பயந்த மழலை மென்சொல் அதுகேட்டு கன்னி யாறு பிணி நீங்கக் கதுமென பண்மிசை எழுந்து நின்றது[38] என்பர்.

> "பொன்னிவிளை புள்ளினஞ் சிலம்புமாம் பொய்கை
> பாச்சிலாச் சிரமத் தடிகளே[39]

என்று சம்பந்தர் பாடிய பாச்சில் பதிகத்தில் கொல்லி மழவன் பற்றித் தெளிவான அகச்சான்று இல்லை. இப் பாச்சில் வெள்ளறைக்குத் தெற்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது.

ஆனுயநாயனுரும் மழநாட்டினைச் சார்ந்த மங்கல லூரில் பிறந்தவர் ஆவார். இவர் வேய்குழலில் ஐந் தெழுத்தோதி அரன் அடி அடைந்தவர். ஆயை நாயனுர் புராணத்தில் மழநாட்டுவளம் அழகுற சேக் கிழாரால் பாடப்படுகிறது.

> "மாடு விரைபொலி சோலையின் வான்மதி வந்தேறச்
> சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற
> ஈடு பெருக்கிய போர்களின் மேகம் முளைத்தேற
> நீடு வளத்தது மேன்மழ நாடெனும் நீர்நாடு.....[40]

ஆழ்வார்களில் ஒருவரான குலசேகராழ்வார் மழ வர்க்குரிய கொல்லி மலையை ஆண்டவர் ஆவார்.

கொல்லிக்காவலன் கூடல்நாயகன்
கோழிக்கோன் குலசேகரன்[41]

என்று வைணவ ஆச்சாரியார் வங்கிபுரத்தாய்ச்சியால் போற்றப்படுகின்றார்.

சோழப் பேரரசில் மழவர்கள் சிறந்த இடத்தை பெற்றிருக்கின்றார்கள். கண்டராதித்தன் தேவியார் செம்பியன் மாதேவியார் மழவரையர் மகளாவார்.[42] சுந்தரசோழனின் அமைச்சன் அநிருத்த பிரமாதிராசன் மழநாட்டு அன்பில் ஊரினன். இவன் பொருட்டு வெளியிட்ட செப்புப்பட்டயமே அன்பில் செப்பேடு.[43] உத்தமசோழரின் மனைவியருள் ஒருத்தி 'மழபாடித் தென்னவன் மாதேவி' என்று பெயர் பெற்று விளங் குகின்றாள்.[44]

கொங்கு நாட்டிலிருந்த கொல்லிமழவன் ஒற்றி யூரான் பிருதிகாண்டவர்மன் என்பவன் இராசராச னுக்குத் திரை செலுத்தி வந்தான்.[45] இவன் தந்தை சுந்தரசோழன் ஈழ நாட்டோடு நடத்திய போரில் சுந்தரசோழன் பொருட்டு போரிட்டு உயிர்துறந்தான்.[46]

மழவர்கள் சங்க காலத்திற்குப் பிறகு அதாவது ஒரு பேரரசுக்குக் கட்டுப்பட்ட சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள். சங்க காலத்தில் மழவர்களை வென்று அவர்களது பெருமகனாக அதிகமான் விளங் கினான்.[47] அதிகமான்கள் மழவர்கள் மீது கொண்ட

ஆதிக்கம் தொடர்ந்து 7-ஆம் நூற்றுண்டிலும் இருந்த தென்று நாமக்கல் அதியேந்திர விஷ்ணுகிரக கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.[48] காசாக்குடி பட்டயத்தில் குறிக்கப்பெற்ற மழவர்கள் இவர்களாகத்தான் இருக்க வேண்டும். இந்த மழவர்களின் மீது ஆதிக்கம் செலுத்திய அதிகமான்கள் மீது கி.பி. 7-ஆம் நூற்றுண்டிற்குப் பிறகு பல்லவர்கள் ஆதிக்கம் செலுத்தினர். மகேந்திரன் சோழநாட்டை வென்று காவிரிக்கு வடக்கே உள்ள பகுதியை, பல்லவர் ஆதிக்கத்தில் கொண்டு வந்தபோது மழநாடும் பல்லவர்க்கீழ் வந்திருக்கவேண்டும். இன்றும் இப்பகுதியில் ஸ்ரீநிவாசநல்லூர் அருகிலுள்ள ஊரொன்று மகேந்திர மங்கலம்' என்றும் வடகரை மழநாட்டுப் பிரமதேயம் என்றும் கல்வெட்டில் அழைக்கப்பெறுகிறது.[49]

திருவெள்ளறையில் இரண்டாம் நந்திவர்மன் . . ,? தந்திவர்மன், மூன்ரும் நந்திவர்மன் முதலியோரது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. சோமாஞ்சடையனின் 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு வெள்ளறைச் சிவன் கோயிலில் உள்ளது.[50] இதனுல் பல்லவர்களின் இறுதி காலத்தில் வெள்ளறையும் அது சார்ந்த பகுதிகளிலும் பாண்டியர் ஆட்சிக்குக் கீழ் சிறிது காலம் இருந்தன எனத் தெரியவருகின்றது.

## வெள்ளறையில் முத்தரையர்

முத்தரையர் பற்றிய முதற்குறிப்பு 'முத்தரைசர் நாடு பாவிய ஞான்று' என்று நரசிம்மவர்மன் காலத்து நடுகல்லில் வருகின்றது.[51] தஞ்சையை விஜயன் கைப்

பற்றுவதற்கு முன்பு சோழநாட்டில் நியமம், செந்தலே, வல்லம் போன்ற பலவிடங்களில் முத்தரையர்கள் வாழ்ந்து வந்தனர்.[52] கி.பி. 8-ஆம் நூற்ருண்டில் தஞ் சைக்கும் திருச்சிராப்பள்ளிக்கும் இடைப்பட்ட ஒரு சிறு நாட்டை பல்லவர் ஆட்சிக்குக் கட்டுப்பட்ட சிற்றரச ராக இருந்து ஆண்டு வந்தனர். முத்தரைசர் ஆலம் பாக்கம், திருவெள்ளறை போன்ற இடங்களிலும் இருந்திருக்க வேண்டும். இவர்கள் திருவெள்ளறைக்கு எப்போது வந்து குடியேறினுர்கள் என்று தெரியவில்லே. திருவெள்ளறையிலும் அதன் சுற்றூர்களிலும் இன்றும் முத்துராசாக்களே மிக அதிகமாக வாழ்கின்ருர்கள். திருவெள்ளறைக் கல்வெட்டில் முத்தரைசர் குடும்பத் தைச் சார்ந்த பல தலேவர்கள் குறிக்கப் பெறுகின்ருர்கள். ஆலம்பாக்கத்து விசையநல்லூழான் தம்பி கம்பன் அரையன் ‘மாற்பிடுகு பெருங்கிணறு’ என்ற ஒரு கிணற்றினேத் தந்திவர்மனின் 5-வது ஆட்சியாண்டில் தோண்டி முடித்தான்.[53] விசையநல்லூழானின் பெயர் பெருமாள் குடைவரையிலும் வருகின்றது.[54] மூன்ரும் நந்திவர்மனின் திருவெள்ளறைச் சிவன் கோயில் கல்வெட்டில் மாற்பிடுகு இளங்கோவேளான் சாத்தன் என்ற முத்தரையர் தலேவன் ஒருவன் குறிப்பிடப்படு கின்ருன்.[55]

### சோழர் காலம்

விஜயாலயன் கி. பி. 846-இல் தஞ்சையை முத்தரை யரிடமிருந்து கைப்பற்றிய[56] பின்னர் திருவெள்ளறை யும் அதன் பகுதிகளும் சோழ நாட்டின் பிரிவுகளில் ஒன்ருக இணேந்து கி.பி. 13-ஆம் நூற்ருண்டு வரை

சோழர்கள் ஆட்சியில் இருந்தன. விஜயாலயன், ஆதித்தன், முதல் பராந்தகன், உத்தமசோழன், முதல் இராசராசன், முதல் இராசேந்திரன், விக்கிரமசோழன், முதல் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் முதலியோரது கல்வெட்டுக்கள் திருவெள்ளறையில் காணப் படுகின்றன.

## பாண்டியர் ஆட்சி

மூன்றாம் குலோத்துங்கனுக்குப் பிறகு சோழர்கள் ஆட்சி சரியத் தொடங்கியது. பின் வந்த சோழர்கள் வலிமையற்றவர்களாக இருந்தனர். முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1216–1238) பிற்காலப் பாண்டியர்களில் தோன்றிய முதல் பெருவீரன் ஆவான். திரிபுவன வீரதேவன் என்றழைக்கப்பட்ட மூன்றாம் குலோத்துங்கன் கி. பி. 1218-இல் இறந்தான். சமயம் கருதியிருந்த சுந்தரபாண்டியன் கி. பி. 1219-இல் சோழநாட்டின் மீது படையெடுத்து வந்தான். மூன்றாம் இராசராசனை வென்று சோழ நாட்டினைக் கைப் பற்றினான்.[57] இப்படையெடுப்பால் சோழ நாட்டிற்கு நேர்ந்த அழிவைத் திருவெள்ளறைக் கல்வெட்டுப் பாடல் ஒன்று தெரிவிக்கின்றது.

> வெறியார் தளவத் தொடைச் செயமாறன் வெகுண்டதொன்றும்
> அறியாத செம்பியன் காவிரி நாட்டி லரமியத்துப்
> பறியாத தூணில்லை கண்ணன்செய் பட்டினப்பாலைக்கன்று
> நெறியால் விடுந்தூண் பதினாறு மேயங்கு நின்றனவே.[58]

மூன்றும் இராசராசன் தன் உரிமைச் சுற்றத்துடன் வேற்றிடம் சென்ருன். சுந்தரபாண்டியன் பழை யாறையில் முடிசூட்டிக் கொண்டு தில்லையம்பதிக்குச் சென்று அம்பலவாணரைக் கண்டு மகிழ்ந்தான். பாண்டி நாட்டிற்குத் திரும்பிச் சென்றபோது பொன்ன மராவதியில் தங்கினன். அங்கு இராசராசனை அழைப் பித்து தனக்குத் திரை செலுத்துமாறு கூறி மீண்டும் சோழநாட்டை அவனுக்கே அளித்தான்.[59] இதனல் சோணுடு வழங்கியருளிய சுந்தரபாண்டியன்[60] என்று அழைக்கப்பட்டான்.

இவனுக்குப் பிறகு இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக்கு வந்தான். மூன்றும் இராஜேந்திரன் பாண்டி நாட்டு மீது படையெடுத்துச் சென்று பாண்டி நாட்டைக் கைப்பற்றினன். ஆனல் போசள மன்னன் வீரசோமேஸ்வரன் உதவியுடன் மீண்டும் ஆட்சியைப் பெற்று ஆட்சிக்கு வந்தான்.

போசளர்கள் செல்வாக்கு சோழநாட்டிலும் பாண்டிநாட்டிலும் இக்காலத்தில் நிலைத்திருந்தது. அடுத்து ஆட்சிக்கு வந்த முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி. பி. 1251-1268) சோழநாடு, தொண்டைநாடு, சேரநாடு முதலிய நாடுகளை வென்று 'எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ சுந்தரபாண்டியத் தேவர்' என்று பெயர் பெற்ருன். இவனது, 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் திருவெள்ளறையில் காணப்படுகின்றன.[61] இவன் காலத்தில் போசளர்கள் திருச்சிக்கருகில் உள்ள தங்களது கண்ணனூர் கொப் பத்தை இழந்தனர்.[62]

போசள மன்னன் வீரசோமேஸ்வரன் தான் இறப்பதற்குச் சிறிது காலத்திற்கு முன்பு தன்னுடைய அரசின் வடபாதியைத் தன் மூத்த மகன் மூன்றும் நரசிம்மன் பொறுப்பிலும் தென்பாதியிலிருந்த தமிழ் மாவட்டங்களைத் தன் இளைய மகன் வீரராமநாதன் பொறுப்பிலும் விட்டுவைத்தான். சோமேஸ்வரன் *(1233-1267)* இறந்தபின் வீரராமநாதன் கண்ண னூரை மீட்டு, சுந்தரபாண்டியனுடைய தாக்குதலைத் தடுத்தான். வீரராமநாதன் *(1254-1295)* மூன்றும் இராஜேந்திரனேடு நெருக்கமான உறவுகொண்டிருந் தான்.[63] இவனது 8-ஆம் ஆட்சியாண்டு கல்வெட் டொன்று திருவெள்ளறை சுவஸ்திகக் கிணற்றில் காணப்படுகின்றது.[64]

சுந்தரபாண்டியனுக்குப் பிறகு மாறவர்மன் குல சேகரபாண்டியன் பாண்டிநாட்டில் ஆட்சிபுரிந்தான். இவன் கி.பி. 1279-இல் சோழனையும் ஹொய்சளனையும் வென்றான்.[65] மீண்டும் தொடர்ந்து சோழநாடு பாண் டியர் கீழ் இருந்து வந்தது. இப்பாண்டிய மன்னனது *31*-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருவெள்ளறையில் காணப்படுகிறது.[66]

## முகமதியர் படையெடுப்பு

கி.பி. *1311*-இல் குலசேகர பாண்டியன் இறந்தபின் அவனது பிள்ளைகள் வீரபாண்டியன், சுந்தரபாண்டி யன் என்னும் இருவரிடையே உள்நாட்டுப்போர் மூண்டது.[67] இது முகமதியர் தமிழ் நாட்டைத் தாக்கி வெற்றிபெற வாய்ப்பளித்தது. கி.பி. 1327 முதல்

1365 வரை திருச்சியும் அதனைச் சார்ந்த பகுதி களும் முகமதியர் கையில் சிக்கித் தவித்தன.[68]

## விஜயநகர நாயக்கர் ஆட்சிகள்

இந்நிலைமையை நீக்கியவர்கள் விஜயநகர அரசர் கள் ஆவார்கள். கி.பி. 14-ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் திருச்சியும் மற்ற பகுதிகளும் விஜயநகர ஆட்சிக்குக் கீழ் வந்திருக்கவேண்டும். கம்பண்ணன், விருபாக்ஷர், புக்கர் II, ஹரிஹரன் II முதலியோரது கல்வெட்டுக்கள் திருச்சிப் பகுதியில் காணப்படு கின்றன.[69] கிருஷ்ணதேவராயரின் ஈங்கோய் மலைக் கல்வெட்டு சோணுட்டு வைணவ பதிகளுக்கு நிவந்தங் கள் விட்டதைக் குறிக்கின்றது.[70] திருவெள்ளறையில் விஜயநகரத்தார் நாயக்கர் காலத்தைச் சார்ந்த எட்டுக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

விசுவநாத நாயக்கர் (கி.பி. 1559-1564) ஆட்சி காலத்தில் மதுரை நாட்டின் எல்லை நகரமாக திருச்சி மாறி விட்டது.[71] குமாரகிருஷ்ணப்பர், (கி. பி. 1563-73) முத்து கிருஷ்ணப்பர் (கி.பி. 1673-09), முத்து வீரப்பர் (கி. பி. 1609-23), திருமலை நாயக்கர் (கி.பி. 1623-59), முதலிய நாயக்க மன்னர்கள் திருச்சிப் பகுதி களையும் ஆண்டனர். முத்துவீரப்ப நாயக்கர் (கி. பி. 1659) காலத்தில் பீஜபூர் சுல்தான் ஏவ மூலா என்பவன் திருச்சிப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொள்ளையிட்டான்.[72] பின் வந்த சொக்கநாத நாயக்கர் (கி. பி. 1659-1682) காலத்திலும் சுல்தான் படையெடுப்பும் மராட்டியர் படையெடுப்பும் நிகழ்ந்தன. மங்கம்மா, மீனுட்சி ஆட்சிக்குப்பின் திருச்சி மராட்டியர் கைக்கு வந்தது.

## ஆங்கிலேயர் ஆட்சி

திருச்சி கி.பி. 1698-இல் ஆர்க்காட்டு நாவப் கைக்கு மாறியது.[73] ஆர்க்காட்டு நவாப், மராட்டியர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர் இவர்களுக்கிடையே ஏற்பட்ட அரசியல் உறவுகள், மோதல்கள், இவற்றிற் கிடையே திருச்சி பகுதிகள் சிக்கித் தவித்தன. 1752 இல் ஜுன் 13-ஆம் தேதி கிளைவால் திருச்சி நவாப், பிரெஞ்சுக்காரரிடமிருந்து கைப்பற்றப்பட்டது. இழந்ததை மீட்க இருவரும் மீண்டும் முயற்சி செய்து தோல்வியே எய்தினர். கி. பி. 1801-இல் இருந்து திருச்சிப் பகுதிகளுக்கு வெள்ளை மாவட்ட ஆட்சித் தலைவர் நியமிக்கப்பட்டு திருச்சி மாவட்டம் ஆங்கிலேயரின் நேரடியான ஆட்சியின் கீழ் வந்தன.[74] 1947 ஆகஸ்ட் 15-க்குப் பிறகு சுதந்திர இந்தியாவில் அடங்கிய தமிழ் நாட்டு மாவட்டப் பகுதியாயின.

---

1 கல்வெட்டு ஓர் அறிமுகம்
2 S.I.I. vol. II. No. 70
3 ARE 87 of 1910
4 Y. Subbarayalu, Political Geography of the Chola country, pp. 18
5 ஆய்வுத்தேன். பக்கம் 18
6 சாசனமாலை
7 பெரியபுராணம்-திருஞான . . . 310
8 நற்றிணை 265
9 நற்றிணை 52
10 பெரியபுராணம்-திருஞானசம்பந்தர், பக்கம் 310, 311
11 Political geography of the Chola country pp. 75
12 First referance, 992 AD. S.I.I. vol. VII 509
13 892 AD. S.I.I. vol. IV No. 531

14 C. 10th cent. S.I.I. vol. XIII. 329
15 AD 923 ARE 702 of 1909
16 AD 1019 S.I I. vol. II No. 5
17 AD 1014 S. I. I. vol. II No. 70
18 AD 1019 ARE 325 of 1927-28
19 Political geography of the Chola country pp. 78
20 அகம் 1-2
21 மதுரைக்காஞ்சி 395
22 மதுரைக்காஞ்சி 687
23 புறம் 88
24 புறம் 90
25 நற்றிணை 387
26 அகம் 119
27 புறம் உ. வே. சா. உரை
28 புறம் 22
29 அகம் 61
30 Ibid 91
31 புறம் 152
32 Ibid.
33 புறம் 158
34 நற்றிணை 52
35 சிறுபாணாற்றுப்படை
36 S.I.I. Vol. II Pt 3
37 பெரிய புராணம், திருஞானசம்பந்தர் 310, 311
38 ,, ,, 310—319
39 சம்பந்தர், பாச்சில் பதிகம் பா. 4
40 பெரிய புராணம், ஆனாயநாயனார் புராணம் பா. 1
41 வங்கிபுரத்தாய்ச்சி-நூற்றெட்டுத் திருப்பதி-கலித்துறை —தஞ்சை சரஸ்வதி மகால் சுவடி.
42 S.I.I. Vol. III No. 141
43 தி. வை சதாசிவப் பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம் Vol. I பக். 75
44 S.I.I. Xol. XIX

***45*** திருச்செங்கோட்டுச் செப்பேடு S.I.I. Vol III No. 213.
***46*** S.I.I. Vol. III No. 212
***47*** M. S. Govindasamy – The Role of feudatories in Pallava History. pp. 114
***48*** Ibid. page 114
***49*** ARE–of 1904
***50*** ARE 84 of 1910
***51*** *செங்கம் நடுகற்கள் பக். 22*
***52*** G. Jouveau–Dubreuil–The Pallavas
***53*** Ep. Ind. Vol. XI p. 154
***54*** ARE 537 of 1906
***55*** ARE 88 of 1910
***56*** Colos. Vol. I pp. 135
***57*** *தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்-பாண்டியர் வரலாறு பக். 114*
***58*** *தமிழ்சாசனச் செய்யுள் மஞ்சரி-மயிலை சீனி வேங்கடசாமி*
***59*** *பாண்டியர் வரலாறு பக். 116*
***60*** ARE 322 of 1927-28
***61*** ARE 211 of 1938/39;201 of 1938/39
***62*** *பாண்டியர் வரலாறு பக். 128*
***63*** *தென்னிந்திய வரலாறு (தமிழ்) ....* K. N. *நீலகண்ட சாஸ்திரியார் பக். 338-339*
***64*** ARE 542 of 1906
***65*** *தென்னிந்திய வரலாறு பக்கம் 338-339*
***66*** ARE 198 of 1938/39
***67*** *தென்னிந்திய வரலாறு* K. K. *பிள்ளை பக். 8*
***68*** Elphinstones History of India p. 341
***69*** Sevell-Forgotten Empire p. 27, 49
***70*** *கல்வெட்டு ஓர் அறிமுகம் பக். 57*
***71*** *அ. கி. பரந்தாமனார், நாயக்கர் வரலாறு பக். 100*
***72*** Ibid p. 265
***73*** Tiruchinopoly Gazatteer p. 61
***74*** Ibid

# நாட்டுப் பிரிவுகளில் திருவெள்ளறை

சங்க காலத்திலும், பல்லவர் காலத்திலும் திருவெள்ளறை எந்த நாட்டுப் பிரிவில் இருந்தது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை. சோழர் காலத்திலிருந்தே திருவெள்ளறைக்கு வளநாடும், நாடும் கூறப்படுகின்றது.

## வள நாடு

முதன் முதலில் தஞ்சைப் பெரிய கோயில் இராசராசன் கல்வெட்டில் சோழ மண்டலத்து இராஜாசிரய வளநாட்டு வடவழி நாட்டுத் திருவெள்ளறை என்று குறிப்பிடப்படுகின்றது.[1] இராஜாசிரய வளநாடு கிழக்கில் நந்தியாற்றையும், மேற்கில் கரைபோட்டாற்றையும், தெற்கில் காவிரியாற்றினையும், வடக்கில் மிகுந்த தூரம் சென்று கேரளாந்தக வளநாட்டின் தென் எல்லையையும் எல்லைகளாகக்கொண்டு விளங்கிற்று. பழைய மழநாடுதான் இராசராசன் காலத்தில் இராஜாசிரய வளநாடாக மாறிற்று. இராஜாசிரய வளநாடு என்பது மழநாடு என்பதைத் தவிர வேறில்லை என்பர்.[2] இதனல் வெள்ளறைப் பகுதிகள் சோழர் காலத்திற்கு முன்னர் மழநாட்டு பிரிவில்தான் இருந்திருக்கவேண்டும் என்பது உறுதிப்படுகிறது.

இராஜாசிரய வளநாடு பிற்காலத்தில் பல பெயர் களைக்கொண்டு விளங்கிற்று. இராசராசனுக்குப் பின் வந்த மன்னர்கள் தங்கள் தங்கள் பெயரைக் கொண்டு இந்நாட்டுப் பிரிவினை அழைத்துக் கொண்டனர். கி.பி. 1076-இல் திரிபுவன முழுதுடைய வளநாடு என்றும் கி.பி. 1085-இல் குலோத்துங்க சோழ வளநாடு என்றும் கி.பி. 1097-இல் கேயவிநோத வளநாடு என்றும் கி.பி. 1107–இல் தியாகவல்லி வள நாடு என்றும் கி.பி. 1116-இல் உலக முழுதுடைய வளநாடு என்றும் பெயர் மாற்றம் பெற்றது.[3]

மீண்டும் விக்கிரமசோழன் காலத்தில் இது திரிபுவனமுழுதுடைய வளநாடு என்று மாறிற்று[4] அதன்பிறகு மீண்டும் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் கி.பி. 1144-இல் புவனமுழுதுடைய வளநாடு என்றும் கி.பி. 1149-இல் உலகுடை முக்கோக்கிழானடி வளநாடு என்றும் இராசராசன் காலத்தில் கி.பி. 1165-இல் இராஜராஜ வளநாடு என்றும் மாறிற்று.[5]

நாடு

திருவெள்ளறை மேற்கண்ட பெயர்கள் கொண்ட வளநாட்டுப் பிரிவுகளில் அடங்கிய வடவழிநாடு வடகரைநாடு, பாச்சில் கூற்றத்தில் இருந்து வந்திருக் கின்றது. இராசராசன் காலத்தில் கி.பி. 1014-இல் இராஜாசிரய வளநாட்டு வடவழி நாட்டுத் திருவெள் ளறை என்று அழைக்கப்பட்டது.[6] விக்கிரம சோழன் காலத்தில் கி.பி. 1132-இல் திரிபுவன முழுதுடைய வளநாட்டு வடகரை நாட்டுத் திருவெள்ளறை என்று

அழைக்கப்பட்டது.[7] மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் கி.பி. 1194-இல் இராஜராஜ வளநாட்டு பாச்சில் கூற்றத்துத் திருவெள்ளறை என்றழைக்கப்பட்டது.[8] இராஜேந்திரன் காலத்தில் கி.பி. 1214-இல் இராஜராஜ வளநாட்டு வடவழிநாட்டுத் திருவெள்ளறை என்று அழைக்கப்பட்டது.[9] பிற்காலப் பாண்டியர் காலத்திலும் இப்பிரிவுகளே திருவெள்ளறைக்கு நிலைத்தது.

பின்னர் வந்த விசயநகரத்தார், நாயக்கர் ஆட்சி காலத்துக் கல்வெட்டுக்களில் வெள்ளறைக்கு நாட்டுப் பிரிவுகள் குறிப்பிடப்படாமலேயே எழுதப்பட்டிருப்பதால் அக்காலத்தில் எப்பகுதியில் எப்படி நாட்டுப்பிரிவில் சேர்த்தழைக்கப்பட்டது என்றறிய முடியவில்லை.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட சுவடி ஒன்றில் திருவெள்ளறைச் சீமை என்று குறிப்பிடப்படுகின்றது[9a] 1802க்குப் பிறகு திருச்சி மாவட்டத்தின் திருச்சி வட்டத்தில் ஓர் ஊராக வெள்ளறை விளங்கிற்று. 1918ல் இப்பகுதியில் சில மாறுதல்கள் நிகழ்ந்தன.[10] நாமக்கல் சேலம் மாவட்டத்தில் சேர்க்கப்பட்டுச் சமயபுரம் என்ற புதிய வட்டமும் ஏற்படுத்தப்பட்டு அதில் வெள்ளறை விளங்கிற்று. அதற்கு அவ்வட்டத்தினைச் சார்ந்த கண்ணனூர் தலைமையிடமாக இருந்தது. அவ்வாண்டிலேயே அவ்வட்டத்தினை எடுத்துவிட்டு லால்குடியைத் தலைமையிடமாகக் கொண்டு லால்குடி வட்டம் என்ற பெயரில் புதிய வட்டத்தை ஏற்படுத்தினர்.[11] இவ்வட்டத்தில்தான் திருவெள்ளறை இன்று வரை இருந்து வருகின்றது.

1 தஞ்சைப்பெருவுடையார் கோயிற் கல்வெட்டுக்கள் இரா. நாகசாமி பக். 89

2 T. Subbarayalu-Political Geography of the Chola country pp. 65

3 Ibid pp. 66

4 ARE 87 of 1910

5 Political Geography of the Chola Country pp. 66

6 S. I. I. vol 2. 70

7 ARE 87 of 1910

8 ARE 194 of 1938/39

9 ARE 250 of 1938/39

9a திருவெள்ளறை கைபீது-சென்னை அரசினர் பழஞ் சுவடி நூலகம்

10 Madras District Gazatteers, Tiruchinopoly Dist. p. 134

11 Notification in Fort. St. George-Gazetteer pp. 147-149 part, I dated 19th Feb. 1918.



# தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களில் திருவெள்ளறை

திருவெள்ளறையைப் பற்றி வெள்ளறைக் கல்வெட்டுக்களிலிருந்து அறிந்து கொள்வதைப் போல சுற்றூர்க் கல்வெட்டுக்களிலிருந்தும் அது பற்றி அறிந்து கொள்வது நல்லது. அக்கல்வெட்டுக்கள் வெள்ளறையின் பெருமையையும் சிறப்பையும் பேசுகின்றன. வெள்ளறையைச் சேர்ந்தோர் வேற்றூர் கோயில்களுக்கு நிவந்தங்கள் அளித்திருக்கின்றனர். வேறூர் சென்று சிறப்பு மிக்க பணிகளில் அமர்ந்திருக்கின்றனர். வேற்றூர் வாய்க்கால்களுக்கு 'வெள்ளறை வாய்க்கால்' என்று பெயரிடப்பட்டிருக்கிறது. திருவெள்ளறை அளவைகள் பெயர் பெற்று விளங்கியிருக்கின்றன. முதல் ஆதித்தன் காலந்தொட்டு பிற்காலச் சோழர் காலம் வரையுள்ள கல்வெட்டுக்கள் இச்செய்திகளைத் தருகின்றன.

## வேற்றூர்ப் பணிகளில் வெள்ளறைக்காரர்கள்

முதல் இராசராசனின் 23-ஆம் ஆட்சியாண்டில் மாமல்லபுரத்தில் இருந்த நகரத்தாரும், பேரிளமையாரும் ஒரு முடிவு எடுத்தனர். அவ்வூர் கரணத்தான் அதை எழுதினான். அவன் வெள்ளறையைச் சார்ந்தவன் ஆவான். 'இப்பரிசு நகரத்தாரும் பேரிளமையாரும்

சொல்ல எழுதினேன் இன்னகரத்துக் கரணத்தான் திருவடிகள் மணிகண்டனுன திருவெள்ளறை மூவாயி ரத்து எழு நூற்றுவன் இவை என்னெழுத்து[1] என்று கல்வெட்டு இதைக் குறிப்பிடுகின்றது.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் இராசராசன் திருவெள்ளறையைச் சார்ந்தோர் பலருக்குப் பணிபுரிய இடமளித்திருக்கின்றுன். மறைக்காட்டுக் கணவதியான திருவெள்ளறைச் சாக்கைக்குப் பங்கு ஒன்னரை அளித்துள்ளான்.[2] திருவெள்ளறை எத்துணையளவு சாக்கை கூத்தில் முன்னின்றது என்பதை இதிலிருந்து அறியலாம். மேலும் ஒவ்வொரு ஊர்ச் சபைக்கும் பெரிய கோயிலில் பணிபுரிய இராசராசன் கட்டளையிட்டான். இதன்படி திருப்பரிசாரகஞ் செய்யும் மாண் இருவரும்,[3] திருமெய்க்காப்பு செய்ய இருவரும்[4] ஆக நால்வர் ராஜா சிரய வளநாட்டு வடவழி நாட்டுத் திருவெள்ளறை யிலிருந்து பெரிய கோயிலில் பணிபுரிந்திருக்கின்றனர் என்றுதெரியவருகின்றது.

நிவந்தமளித்தோர்

முதல் ஆதித்தன் ஆட்சி காலத்தில் விளத்தூர் நாட்டுத் திருப்பழவூர் பரமேஸ்வரர்க்கு திருவெள்ளறை யைச் சார்ந்த மாதன் அறிஞ்சிகை என்பான் அப்பர மேஸ்வரரை ஆராதிப்பார்க்கு நிலங்களைக் கல்லிவயக்கி நிவந்தமாக அளித்தான்.[5] இராசராசனின் 7-வது ஆட்சி யாண்டில் திருவெள்ளறை கவினியப்பட்டன் ஸ்ரீதரன் திருவெறும்பூர் ஆழ்வார்க்குச் சில நிலங்களை விற்றுக் கொடுத்தான்[6] என்று சோழர் கல்வெட்டுக்கள் தெரிவிக் கின்றன.

## திருவெள்ளறை வாய்க்காலும் வசதியும்

முதல் ஆதித்தனின் ஆட்சிக் காலத்தில் செந்தலை யில் 'வெள்ளறை வாய்க்கால்' என்ற ஒன்று இருந்தது. செந்தலை ஊரார் எடுப்பித்த அம்பலத்திற்கு அம்பலப் புறமாக விற்றுக் குடுத்த நிலத்தின் எல்லையை குறிப் பிடும்போது 'திருநாராயணவதிக்குக் கிழக்கு; ஆர்க் காட்டு வாய்க்காலுக்குத் தெற்கு; திருவெள்ளறை வாய்க்காலுக்கு வடக்கு என்று இது செந்தலைக் கல் வெட்டில் குறிக்கப் பெறுகின்றது.[7]

திருமழப்பாடி நாயனார் தேவதானம் ஒன்று எடுத்தபாதநல்லூர் திருவெள்ளறைவதிக்குக் கிழக்காக இருந்தது என்று சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[8] அக்காலத்தில் எடுத்தபாதநல்லூரில் இருந்து வெள்ளறைக்குச் செல் லும் வழி என்று இவ்வாறு குறிக்கப்படுவது பின்வரும் ஒருண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றது. இக் காலத்தில், 'மதுரைக்குச் செல்லும்வழி' திருச்சிக்குச் செல்லும்வழி என்று குறிப்பிடுவதுபோன்று, அக் காலத்தில் எல்லையையும், வழியையும், தெளிவாகத் தெரிவிக்கும் கருவியாக, அனைவரும் அறிந்த பெயர் பெற்ற ஊராக வெள்ளறை விளங்கிற்று என்பது வெள்ளிடைமலையென தெளிவாகின்றது. தஞ்சாவூர் நன்னிலம் வட்டத்திலுள்ள ஸ்ரீ வாஞ்சியம் கல்வெட் டில் வெள்ளறைப் பெயர் குறிப்பிடப்படுகின்றது.[9]

## வெள்ளறை அளவைகள்

பழங்காலத்தில் பெயர்பெற்ற அளவைகளோடு

ஊர்பெயரும் சேர்த்துச் சொல்லப்படுவதுண்டு. அவற்றில் திருவெள்ளறை அளவைகளும் ஒன்ருகும். திருவெள்ளறைக்கல், திருவெள்ளறைக்காணம், திருவெள்ளறைக்கோல் போன்ற நிறுத்தல், முகத்தல், நீட்டல் அளவைகள் வெள்ளறையில் மட்டுமின்றி வேற்றூர்களிலும் பயன்படுத்தினர் என்று இக்கல்வெட்டுச் சான்றுகள் பகர்கின்றன.

முதல்பராந்தகன் காலத்தில் நாமக்கல் வட்டத்தில் உள்ள அறப்பளீஸ்வரர் கோயிலுக்கு திருவெள்ளறைக் கணத்தால் அரிசி அளந்து கொடுத்தனர்.[10] முதல் குலோத்துங்கன் காலத்தில் திருவெள்ளறைக் கோலால் செப்புத்தளிய்செய் அளந்து திருப்பாலத்துறை இறைவர்க்கு கொடுக்கப்பட்டது என்று கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.[11]

### திருப்பைஞ்ஞிலிக் கல்வெட்டு

திருவெள்ளறை முருபருடையார் ஊர்ச்சபைக்கூடும் 'மணியம்பலத்தில்' கூட்டம் குறைவறக் கூடியிருந்து இரண்டாம் இராஜாதிராஜனின் பெருந்தர அதிகாரி உத்தமசோழநல்லூர் உடையான் வெண்காடன் சங்கரஞன தண்டநாயகன் இராஜாதிராஜ பல்லவரையனுடன் சேர்ந்து ஒரு நிலத்தை இறையிலியாக விலையாவணம் செய்ததை இப்பைஞ்ஞிலி கல்வெட்டு தெரிவிக்கின்றது.[12]

---

1 S.I.I. vol. I. No. 40

2 தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் இரா. நாகசாமி பக். 89

3 Ibid. பக் 113

4 Ibid க்ப. 128

5 S.I.I. Vol. XII No. 339 ARE 354 of 1918

6 S.I.I. Vol. XIII No. 163 ARE 102 of 1910

7 S.I.I. Vol. XII No 187

8 S.I.I. Vol. V No. 649 ARE 89 of 1915

9 Rangachariya, A Topographical of inscriptions of the Madras-Presidency Vol. III No. 687

10 S.I.I. Vol. XIX No. 291

11 S.I.I. Vol. XIII No 35

12 S.I.I. Vol IV No 537



# வைணவ வரலாற்றில் திருவெள்ளறை

வெள்ளறையோடு தொடர்புடைய வைணவ வரலாற்றினை அறிந்து கொள்வதற்கு முன் வைணவத்தின் பொதுவான வரலாற்றினையும் சுருக்கமாக கண்டுவிட்டுச் செல்லல் நன்றுபயப்பதாகும்.

திருமால் அல்லது மகாவிஷ்ணு நான்கு மறைகளிலும் கூறப்பெற்ற வேதக் கடவுளே. சதபதப்ராம் மணத்தில் அவர் பன்னிரெண்டு ஆதித்தர்களில் ஒருவருகக் கூறப்பட்டுள்ளார். மகாபாரதமும் பதினொரு ஆதித்தர்களைக் கூறிப் பன்னிரண்டாவதாக விஷ்ணுவை குறிக்கிறது. இதனுல் ஆதித்தனே விஷ்ணுவாக மாறியிருத்தல் கூடும் என்று எண்ண இடமுண்டு. இதே விஷ்ணு 'யக்ஞ ஸ்வரூபம்' என்று புகழப்பட்டு அம்முறையில் யக்ஞநாராயணன் வடிவில் வணங்கப்பட்டு வருகின்றுன்.[1] இருக்கு வேதத்தில் விஷ்ணு இன்றியமையாத தெய்வமாகக் கருதப் படவில்லை. ஆயினும் அந்த ஆதிமறையிலே விஷ்ணு பேருடல் உடையவராகவும் அன்பர் வேண்டுகோளுக்கிணங்க அவ்வவ்வேளை அவதரிப்பவராகக் கூறப்படுதலின் வைணவ சமயத்திற்கு அடிப்படையை அங்கேயே காணலாம்.[2] இதிகாச புராணங்களில் விஷ்ணுவே பரதேவதையாகவும் திருமூர்த்திகளில் ஒருவராகவும் காணப்படுகின்றுர்.

பிரகதாரணியகஉபநிடதம் நான்காம் பாகத்தில் யாக்ஞு வல்கியர் உபதேசத்தில் விலங்குகளைப் பற்றியும், விலங்குகளாக ஆன்மா உருவெடுத்தற்கூடும் என்பதைப் பற்றியும் யாதொரு குறிப்புமில்லை. ஆரியர் புதுவதாகக் கலந்த இந்திய நாட்டுப் பழமக்களிடமிருந்துதான் இதைக் கற்றிருக்கவேண்டும் என்பர். விஷ்ணு இருக்கு வேதத்திலேயே உபேந்திரன் என்று கூறப்படுகின்ருன். சதபதப்ராமணத்தில் முதல்வர் ஆமையாகவும், பன்றி யாகவும் உருவெடுத்தார் என்று கூறப்படுகிறது.[3]

## திருமாலும், கண்ணனும்

இந்திரனுக்குப் பகைவர்கள் இந்தியர்களின் பழந் தெய்வங்களே. வேதகாலத்தில் இந்திரனுக்குப் பெரும் பகைவனுகக் கிருஷ்ணன் என்பவன் இருந்தான். இந்திரனுக்கும் கிருஷ்ணனுக்கும் உள்ள பகையைப் புராணங்கள் பேசுகின்றன. ஒருவேளை இருக்கு வேதத் தில் இந்திரனுல் வெல்லப்பட்ட முல்லை நிலத் தலைவனுக இக் கிருஷ்ணன் இருந்திருக்கலாம். ஆயினும் பகவத் கீதை எழுதப்பட்ட காலத்தில் கிருஷ்ணன் தெய்வீகப் பெருமை பெற்றுத் திகழ்ந்தான். இந்நிலையில் வைண வர்கள் அவனை விஷ்ணுவென்றும்; பாகவதர்கள் வாசுதேவனென்றும் கொண்டாடினர். இக்கிருஷ்ணனை இறைவனது அவதாரம் என்றும்; யமுனை நதிக்கரை யில் வேய் குழல் ஊதித் திரிந்த கோவலனுக மக்கள் கருதினர்.[4] பகவத் கீதை 11-ஆவது அத்தியாயத்தில் அர்ச்சுனனுக்குக் காட்சி கொடுத்தபோது கண்ணன் விஷ்ணுவென்றே புகழப் பெறுகின்ருன்.

நாராயணீயத்தில் கம்சனை கொல்வதற்காகவே வாசுதேவன் தோன்றினன் என்று கூறப்படுகின்றதேயன்றி மற்ற அரக்கர்களைப் பற்றிய பேச்சில்லை. அரிவம்சம் வாயுபுராணம், பாகவதம் முதலிய நூல்களில் கம்சனையும் மற்ற அரக்கர்களையும் அழிக்கவே வாசுதேவன் தோன்றினன் என்று கூறப்படுகின்றது. ஆகவே இக்காலத்தில்தான் ஆயர்பாடியில் யசோதை பெற்றெடுத்த பூவைப் புதுமலர் வண்ணனும், வாசுதேவனும் ஒன்று பட்டிருக்க வேண்டும். காளிதாசன் காலத்தில்தான் இக்கண்ணனும் விஷ்ணுவும் ஒன்று படுத்தப்பட்டனர் என்றும் உரைப்பர்.

### தமிழ்நாட்டில் வைணவம்

கிருஸ்து பிறப்பதற்கு முன்னமே வைணவமதம் தமிழ்நாட்டில் புகுந்து வழங்கிற்று. தொல்காப்பியத்தில் காடுறை தெய்வம்[6] என்றும் அவனைச் சார்த்திக் கூறும் துறை பூவைநிலை என்றும் கூறப்படுகின்றன.

மண்ணுறு திருமேனி புரையுமேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய்யோனும்[8]

கணங்கொள் அவுணர் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாள்.[9]

நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகம் காக்கு மொன்றுபுரி கொள்கை[10].

. . . . . . . . . . நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல[11]

(முல்லைப்பாட்டு 1-3).

என்று திருமாலைப் பற்றிப் பல இடங்களில் சங்க இலக்கியங்களில் குறிப்புக்கள் வருகின்றன.

பரிபாடல், கலித்தொகை, போன்ற தொகை நூல்களில் திருமாலின் திருவிளையாடல்களைப் பற்றிப் பல குறிப்புக்கள் வருகின்றன.

காவியகாலத்தில் இது பெருகியது, நீலமேனி நெடியோன் புகாரில் இருந்ததாகச் சிலம்பு கூறுகின்றது.[12] சிலம்பில் ஆய்ச்சியர் குரவை திருமாலின் பெருமையைப்பாடுகின்றது. இப்பாடல்களே பிற்காலத்தில் ஆழ்வார்கள் பாடல்களுக்கு ஆதார சுருதியாக இருந்தது எனலாம்.

களப்பிரர் காலத்திற்குப் பின் வந்த பல்லவர் காலத்தில் வைணவம் தனியொரு தமிழ்நாட்டு மதமாக மாறி விட்டது. கி.பி. 9-ஆம் நூற்ருண்டு வரை ஆழ்வார்கள் பாசுரங்களாக பாடி வளர்த்தனர். அதன் பிறகு நாதமுனிகள் இராமாநுசர் போன்ற ஆச்சாரியர்கள் தத்து விளக்கங்களால் ஊட்டி வளர்த்தனர்.

பல்லவ அரசருள் விஷ்ணுகோபன் இரண்டாம் சிம்மவர்மன் விஷ்ணுகோபவர்மன் முதலியோர் தம்மைப் ‘பரமபாகவதர்’ என்று பாராட்டிக் கொண்டனர். பிற்காலப் பல்லவர்களுள் சிம்மவிஷ்ணு முதல்நரசிம்மவர்மன், இரண்டாம் நந்திவர்மன் முதலியோர் சிறந்த வைணவப்பற்று உடையவர்கள்.[13] பல்லவர் காலத்தில் காவிரிப்பாக்கத்தில் வைணவமடமும் மற்றும் பல

இடங்களில் வைணவக் குடவரைகளும், கற்கோயில் களும் தோன்றின.

சோழ மன்னர்கள் வைணவர்களாக இல்லாவிட் டாலும் சோழர் காலத்தில் வைணவம் வளர்ந்தது. நாதமுனிகள் நாலாயிரப்பிரபந்தத்தைத் தொகுத்துத் தந்தார். பின்னர் வந்த ஆச்சாரியர்கள் வளமான மணிப்பிறவாள நடையில் உரையெழுதி வைணவத் தத்துவத்தை வளர்த்தார்கள். இராமானுசர் இக்காலத் தில்தான் புகழ்பெற்ற விசிட்டாத்துவத்தை வெளிக் கொணர்ந்தார்.

விரைவில் தமிழக வைணவத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. வைணவம் வடகலை என்றும் தென்கலை என்றும் பிரிந்தது. இவ்விரு இயக்கங்களும் ஒன்றொ டொன்று மோதிக் கொண்டன.[14] 14ஆம் நூற்றாண் டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் வேதாந்த தேசிகரால் வடகலையும், 15ஆம் நூற்றாண்டில் மணவாள மாமுனி களால் தென்கலையும் பரப்பப்பட்டது. தென்கலைக் காரர்கள் முத்திநெறிக்கு ஆழ்வார் பாசுரங்களை ஆதா ரமாகக் கொண்டார்கள். சாதிசமய வேறுபாடு கருதாது வாழ்ந்தனர். வடகலைக்காரர்கள் வடமொழி வேதத்தை முத்தி நெறிக்கு ஆதாரமாகக் கொண்டார் கள். வருணாசிரமம் வற்புறுத்தப்பட்டது, இந்த முரண்பாடுகள் இன்றும் வைணவர் கோயில்களில் நீறுபூத்த நெருப்பாய் இருந்து வருகின்றது. (திரு வெள்ளறைக் கோயில் தென்கலையைச் சார்ந்த தாகும்).

### வைணவ ஆகமம்

இவ்வைணவத்திற்கு 'அன்புநெறி' என்றும்; 'அந்தப்புரச் சித்தாந்தம்' என்றும்; 'தீதில்நன்னெறி' என்றும்; 'இராமாநுச தரிசனம்' என்றும் பலபெயர்கள் உள்ளன. வீடுகளிலும் கோயில்களிலும் வழிபடும் வைணவத் திருவுருவங்கள் பற்றியும், அவற்றின் தத்துவம் பற்றியும், வழிபாட்டுமுறை பற்றியும் கூறும் 'பழமையான அறிவு' அல்லது 'சாஸ்திரம்' எனப்படும் ஆகமம் வைணவர்களுக்கு இரண்டுண்டு. ஒன்று 'வைகானசம்' மற்ருென்று 'பாஞ்சராத்திரம்' என்பதாகும் திருமாலின் திருமார்பிலிருந்து தோன்றிய விகனசர் என்ற முனிவரால் அவரது சீடர்களான மரிசி, அத்திரி, பிருகு, காச்யபர் என்ற நால்வருக்கும் நான்கு லட்சம் செய்யுட்களால் நவிலப்பட்டது வைகானசம் ஆகும். வேதம்போல் அநாதியாய் இருப்பது நாராயணனுல் நாரதருக்கு நான்கு ஐந்து இரவுகளில் சோதி வாய்த்திறந்து பணிக்கப்பட்டது பாஞ்சராத்திரம் எனப்பட்டது.[15]

### வைணவப் பெரியார்கள்

வைணவப் பெரியார்கள் ஆழ்வார்கள் என்றும் ஆச்சாரியர்கள் என்றும் இருவகைப்படுவர். ஆழ்வார்கள் பதின்மர் என்பது அனைவரும் அறிந்ததே. திருமாலின் கல்யாண குணங்களில் ஆழ்ந்தவர் ஆழ்வார்கள் எனப்பட்டனர். இவர்கள் தந்த அனுபவங்கள் நாலாயிரம் பாசுரங்களாக நிலவுகின்றன. முன்னோர் மொழிப் பொருளைப் பொன்னேபோல் ஆச்சாரியரிடமிருந்து பணிந்து கேட்டுத் தமது சீடர்களுக்கு அறி

வித்து தானும் அதன்படி நடந்து காட்டுகின்றவர்கள் ஆச்சாரியர்கள் என்று அழைக்கப்பட்டனர். ஆழ்வார்களை மூலவர்கள் என்ருல் இவர்களை உற்சவமூர்த்திகள் எனலாம். இவர்களைத் தேசிகர்கள் என்றும் கூறுவர். தேசிகர் என்ருல் வழிகாட்டி என்றும் முக்தர்கள் அடைய வேண்டிய நிலத்தை நன்கு அறிந்தவர்கள் என்றும் பொருள்[16]

ஆச்சாரியபரம்பரை

பரமநாதன்

|

திருமாமகள் என்ற பெரியபிராட்டியார்

|

விஸ்வசேனர் என்ற சேனைமுதலியார்

|

நம்மாழ்வார்

|

நாதமுனிகள்

|

உய்யக்கொண்டார் (புண்டரீகாட்ச பெருமாள்)

|

மணக்கால்நம்பி

|

ஆளவந்தார் (யமுனைத்துறைவர்-பெரியமுதலியார்)

|

மகாபூர்ணர் என்ற பெரியநம்பிகள்

|

உடையவர், எம்பெருமானுர், என்ற ஸ்ரீ இராமானுசர்




இவ்வாச்சாரியர்கள் பதிஞயிரம் படி, பதினெட்டாயிரம் படி என்று ஆழ்வார் பாசுரங்களுக்கு உரைகளும் ஆழ்வார் பாசுரங்களுக்குத் தனியன்களும் இயற்றியுள்ளனர். இனி வெள்ளறையோடு தொடர்புடைய ஆழ்வார்ப் பற்றியும், ஆச்சாரியர்கள் பற்றியும் பிற வைணவ வரலாறு பற்றியும் காணலாம்.

## பெரியாழ்வார்

'பரம வைஷ்ணவன் தாஞகி நின்றிலங்கு மணிநீள் முடி நிலமன்னவன்' என்று சீவரமங்கலச் செப்பேட்டால் சிறப்பிக்கப்படும் நெடுஞ்சடையன் பராந்தகன் என்ற

பாண்டிய மன்னன் காலத்தில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் வாழ்ந்தவர்.[17] வேதப்பயன் கொள்ள வல்ல விஷ்ணு சித்தன், புதுவைப்பட்டன் என்று தமது பாடல்களில் தம்மை அழைத்துக் கொள்வார். கண்ணனை இவர் சிறு குழவியாக உருவகித்துப் பாடிய பாடல்களே பின்னாளில் பிள்ளைத்தமிழ் பிரபந்தத்திற்கு வித்தாயிற்று. வெள்ள றையில் குடி கொண்டிருந்த கருமாலையும் கண்ணன் என்ற சிறு குழவியாக்கிப் பாராட்டியுள்ளார்.

மன்னு குறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதில்சூழ்
சோலைமரக்கரசே! கண்ணபுரத் தமுதே!
என்னவ லங்களைவாய் ஆடுக செங்கீரை
ஏழல குமுடையாய்! ஆடுக ஆடுகவே![18]

என்று வெள்ளறைப் பெருமாளையும் சேர்த்து செங் கீரையாட வேண்டுகின்றார்.

காப்புப் பருவம் முழுவதும் வெள்ளறைப் பெரு மாளின் மீதே பாடியுள்ளார்.

"சந்திரன் மாளிகை சேரும் சதுரர்கள் வெள் ளறை"[19]

"மதில் திருவெள்ளறை"[20]

"முப்போதும் வானவர்கள் ஏத்தும் முனிவர்கள் வெள்ளறை"[21]

"நல்லவர்கள் வெள்ளறை"[22]

"மஞ்சு தவழ்மணிமாட மதில்திரு வெள்ளறை"[23]

"ஒளியுடை வெள்ளறை"[24]

"செம்பொன் மதில் வெள்ளறை"[25]

"தேசுடை வெள்ளறை"[26]

"புணர் திருவெள்ளறை"[27]

என்று விஷ்ணுசித்தர் வெள்ளறையின் பெருமையைப் பலபடச் சிறப்பித்துப் பேசுகின்ருர். வெள்ளறையில் நின்ற போதமர் செல்வக் கொழுந்தினைப் புதுவைப் பட்டன் பாடிய பல பாடல்களில் அமுதுண்ண அழைக்கும் ஒரு தாயின் உள்ளமே பொதுளி நிற்கின்றது.

கஞ்சன்க றுக்கொண்டு நின்மேல் கருநிறப் பேயை
வஞ்சிப்பதற்கு விடுத்தார் என்பதோர் வார்த்தையு
[முண்டு
மஞ்சு தவழ்மணி மாட மதில்திரு வெள்ளறை
[நின்ருய்
அஞ்சுவன் நீயங்கு நிற்க அழகனே! சாப்பிட
[வாராய். 28

என்பன போன்ற பல பாடல்கள் காப்புப் பருவத்தில் உண்டு. இப்பாடல்கள் அனைத்தும் பெரியாழ்வார் வெள்ளறைக்கு வந்து பாடியிருக்கலாம்.

### திருமங்கையாழ்வார்

திருமங்கை மன்னன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தும் அவன் மகன் நந்திவர்மன் காலத்தும் வாழ்ந்தவர்.[29] ஆழ்வார்களில் அதிகத் தலங்களுக்குச் சென்று பாசுரங்கள் பாடியவர். இவரது பெரிய திருமொழி ஐந்தாம் பத்தில் பத்துப் பாடல்களும், பத்தாம் பத்தில் ஒரு பாடலும் பெரியமடல், சிறியமடல் இவற்றில் ஒவ்வொரு பாடலும் வெள்ளறைப் பெருமாளின் மீது பாடப்பெற்றவை.

மங்கையர் மடலேறக் கூடாது என்ற தொல்காப்பிய மரபை மீறி பெரிய மடலும், சிறிய மடலும்

ஏறியுள்ளார். பெரிய மடலில் ஒரு மடந்தை வெள்ளறைப் பெருமாளின் மீது பெருங் காதல் கண்டு

கன்னி மதிள்சூழ் கணமங்கைக் கற்பகத்தை!
மின்னை! இருசுடரை! வெள்ளறையுள் கல்லறைமேல்
பொன்னை! மரகதத்தை! புட்குழியெம் போரேற்றை....30

என்று பிதற்றிக்கொண்டே போகிறார்.

சிறிய மடலில் மங்கையொருத்தி கண்ணன்மீது கழிமிகு காதல் கண்டவளாய் மடலேறத் துணிந்து விடுகின்றாள்.

பேரா மருதிறுத்தான் வெள்ளறையே! வெஃகாவே!31
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . கண்ணனை எண்ணருஞ்சீர்
பேராயிரமும் பிதற்றி பெருந்தெருவே
ஊரார் இகழினும் ஊரா தொழியேன் நான்
வாரார்பூம் பெண்ணை மடல்.32

பிறிதொரு இடத்தில்

துளக்கமில்லாத சுடரை! அவுணன் உடலைப் பிளக்கும் மைந்தனை! அளப்பிலா ஆரமுதை! அமரர் தம் விளக்கினை! நாம் வெள்ளறையில் சென்று காணலாம் என்கிறார்.33

பெரியதிருமொழியில் 'வென்றி' என்ற பகுதியில் உள்ள பத்துப் பாடல்களும் வெள்ளறைப் பெருமானைக் கண்டு நின்றபின் பாடியவையாகத்

தோன்றுகின்றன. இவற்றில் வெள்ளறையின் இயற்கை எழில் அழகுறப் பேசப்படுகின்றது.

தண்டாமரையின் தளிர் மணமும், மல்லிகையின் மணமும்; மாதவியின் மணமும்; மாந்தளிரின் மணமும்; மாமுல்லை மணமும், முருக்கத்தின் மணத்தோடு தெய்வ மணம் கலந்த தென்றல் வெள்ளறையில் வீசுமாம்.

'மன்றில் மாம்பொழில் நுழைதந்து மல்லிகை
[மௌவலின் போதலர்த்தி
தென்றல் மாமணம் கமழ்தர வரு திருவெள்ளறை'34

'உயர்கொள் மாதவிப் போதொடு லாவிய மாருதம்
[வீதியின்வாய்
திசையெல் லாம்கம ழும்பொழில் சூழ்திரு வெள்ளறை'35

'மையினுர்தரு வராலினம் பாயவண் தடத்திடைக்
[கமலங்கள்
தெய்வ நாறுமொண் பொய்கையின் சூழ்திரு
[வெள்ளறை36

'கான மாமுல்லை கழைக்கரும் பேறிவெண் முறுவல்
[செய்தலர்கின்ற
தேனின் வாய்மலர் முருகு குக்கும் திருவெள்ளறை'37

மாந்தளிர் கோதிய மடக் குயிலின் இன்னிசையும், ஊடிய மதுகரத்தின் இன்னிசையும், தேறல் மாந்திய வண்டின் இன்னிசையும், சுரும்பினத்தின் இன்னிசையும் வெள்ளறையில் கேட்குமாம்.

'மாம்பொழில் தளிர் கோதிய மடக்குயில் வாயது
[துவர்பெய்த
தீம்ப லங்கனியிற் தேனது நுகர் திருவெள்ளறை'38

" தங்கு லேடையொ டூடிய மதுகரம் தையலார் குழலணை
[வான்

. . . . . . . . . . . . . . . . . . . சென்றனே திருவெள்ளறை ''[39]
''மாறில் கோதிய மரகதப் பாசடைத் தாமரை மலர் [வார்த்த
தேறல் மாந்தி வண் டின்னிசை முரல்திரு வெள்ளறை''[40]
''மன்னு கேதகை சூதக மென்றிவை வனத்திடைச் [சுரும்பினங்கள்
தென்ன வென்னவண் டின்னிசை முரல்திரு வெள்ளறை''[41]
''ஒங்கு பிண்டியின் செம்மலரலேறிவண் டுழிகர மாவேறித்
தீங்கு யில் பிழற்றும் படப்பைத் திருவெள் ளறை . . .''[42]

வெள்ளறையில் நிறைந்த மாடங்களே

'' திங்கள்தோய் சென்னி மாடம்[43]
'' மஞ்சுலா மணிமாடங்கள் ''[44]

என்று சிறப்பித்துப் பாடுகின்ருர். வெள்ளறையில் மேல் நின்ற கருமாலே, 'அஞ்சனம் புரையும் திருவுருவனே! ஆதியை! அமுதத்தை![45] என்றழைத்து அவனது பெருவிளேயாடல்களே யெல்லாம் பெரிய திருமொழியில் பேசுகின்ருர்.

உய்யக்கொண்டார்

இவர் பிறந்த பதி திருவெள்ளறையே ஆகும். இவர் காலம் பத்தாம் நூற்ருண்டு. நாதமுனிகளது சீடர். ஒரு சமயம் நாதமுனிகள் இவரைப் பார்த்து "நீர் யோக ரகசியங்களேக் கற்றுப் பழகிவாரும்' என்று சொல்ல இவர் 'இவ்வுடல் முடிகின்ற காலத்திலே பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லி விட்டார். பிறகு நாதமுனிகள் இவருக்கு சாஸ்திரங்களேயும் திருவாய்மொழியினேயும் கற்பித்தார்.[46] உய்யக்கொண் டார் சீடர்களில் தலே சிறந்தவர் மணக்கால் நம்பியா

வார். உய்யக்கொண்டார் ஆண்டாள் திருப்பாவைக்கு இரு தனியன்களை இயற்றியுள்ளார்.

திருவெள்ளறைப் புண்டரீகாட்ச பெருமாள் கோயில் செங்கமலவல்லி நாச்சியார் சன்னதிக்கு முன்னர் சேத்தி மண்டபத்தில் வடக்கு பார்த்து இவரது சன்னதி அமைந்துள்ளது. சித்திரைத் திங்கள் கார்த்திகை திருநட்சத்திரத்தில் இவரது பிறந்நாள் விழா இன்றும் வெள்ளறையில் நடைபெறுகின்றது. அன்று இவரது உற்சவமூர்த்தம் வெளியே எடுத்து வரப்பட்டு திருவீதி வலம் வருகிறது. சிறப்பு பூசனை களும் நடைபெறுகின்றன.

உய்யக்கொண்டார்க்குப் புண்டரீகாட்சர் என்ற பெயரும் உண்டு. இவர் பெயராலேயே இவரது சீடர்கள் தற்காலப் பெருமாள் கோயிலை எடுப்பித்தனர் என்பர்.[47]

### திருமலை நம்பி

வைணவ குருபரம்பரை வரலாற்றில் சேர்த்துப் பேசும் தகுதி வாய்ந்தவர். இராமாநுசருக்கு முன் வாழ்ந்த மகாபூர்ணர் என்ற பெரியநம்பிகள் காலத்தில் வாழ்ந்தவர். இவர் காலத்திலேயே திருக்கோட்டிவூர் நம்பிகள், திருமலை ஆண்டான், திருவரங்கப் பெருமாள் அரையர், திருக்கச்சி முதலியோர் வாழ்ந்தார்கள். நம்பி எனில் நற்குணம் நிறைந்தவர் என்று பொருள். இராமா நுசருக்குத் தாய்மாமன் திருமலை நம்பிகள்.[48] இராமா

நுசர் ஐந்து ஆச்சாரியர்களை அணுகி அரும்பொருள் ஐந்தினை அறிந்தார். அவர்களை பஞ்சாசாரிய பதாச்ரிதர் என்றழைப்பர். இவர்களில் ஒருவராக திருமலை நம்பிகளும் திகழ்ந்தார். இராமாநுசர் இவரிடம் இராமாயணப் பொருளைக் கேட்டறிந்தார் என்பர்.

இவர் பெயரில் 'திருமலைநம்பி மடம்' என்று ஒன்று விஜய நகர மன்னர் காலத்தில் திருவெள்ளறையில் இருந்தது.[49] பங்கயச்செல்வி நாச்சியார் இம் மடத்திலே வைணவர்களுக்கு திருவமுது செய்ய அறக்கட்டளையும் தோற்றுவித்தார். இதனைப் புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலின் இரண்டாவது வட திருச்சுற்றின் வெளிச் சுவற்றின் மேல் புறத்திலுள்ள கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.

## இராமாநுசர்

விசிட்டாத்துவைதத்தைத் தோற்றுவித்து 11-ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வைணவ மதத்தை நிறுவியவர். பிறப்பிடம் ஸ்ரீபெரும்புதூர். இவரது காலம் 11, 12-ஆம் நூற்றாண்டு என்று எல்லா வைணவ குருபரம்பரையும் கூறுகின்றன. பிறந்தது கி.பி. 1017. திருநாடு அலங்கரித்தது கி.பி. 1137. 120 திருநட்சத்திரங்கள் உயிர் வாழ்ந்திருந்தார். இவர் தமிழில் எந்த நூலும் செய்யவில்லை.[50] திருமங்கையாழ்வாரின் திருவெழுகூற்றிருக்கைக்கும், நம்மாழ்வாரின் திருவந்தாதிக்கும் தனியன்கள் செய்துள்ளார். திருவரங்கத்தமுதனார் இவர் மீது 'இராமாநுச நூற்றந்தாதி' பாடியுள்ளார். வடமொழியில் இவர் செய்த நூற்கள்

ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதார்த்த சங்கிரகம், வேதாந்த சாரம், சரணுகதி-சத்யம், ஸ்ரீரங்க-சத்யம், ஸ்ரீவைகுண்ட சத்யம், நித்யகிரந்தம் என்பன. இவரை உடையவர், எம்பெருமானுர் என்று பல பெயரிட்டழைப்பர்.

வெள்ளறைக்கும் இராமாநுசருக்கும் நிரம்பத் தொடர்புகள் இருந்திருக்கின்றன. ஸ்ரீரங்கத்தில் உடன் வாழ்ந்தவர்களோடு மனம் வருத்தம் கொண்ட காலத்திலே திருவெள்ளறைக்கு வந்தார்.[51] திருவெள்ளறையில் இரண்டாண்டுகள் தங்கி, ஸ்ரீரங்கத்திற்கு வழிபாட்டு முறைகளையும், விழாக்களையும் ஒருங்கு படுத்தினுர் என்றும் பிறகு அவரை இங்கிருந்து மீண்டும் ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துச் சென்றனர் என்றும் பின்வருமாறு கோயிலொழுகு கூறுகின்றது.

"இந்தப்படி ஸ்ரீகார்யம் விசாரித்து பஹுஅவந்தரையாயிருந்தபடியினுலே, அந்தந்த துறைகளைத் திட்டம் பண்ண வேணுமென்று திருவுள்ளத்திலே நினைத்திருக்க இப்படி அறிவறிவாய் விசாரிக்கிறது. பரிஜநங்களுக்கு நிர்பந்தமாய் காலதோஷத்திலே பரிஜநங்கள் விஷப்ரயோகாதி ஈதிபாதைகளை பண்ணின படியினுலே உடையவரும் திருவரங்கத் திருப்பதியை விட்டு இரண்டு வருஷம் திருவெள்ளறையிலே எழுந்தருளியிருந்து அவ்விடத்திலே அழகிய மணவாளப் பெருமாளை எழுந்தருளப் பண்ணி, ஏரியுங்கட்டி பங்கயச்செல்வி ஸ்ரீகார்யத்தையும் தர்சந நிர்வாஹத்தையும் செய்துகொண்டு எழுந்தருளியிருக்க

பெருமாள் நியமநத்திஞலே பரிஜநங்கள் அநுதப்த ராய் உடையவரை எருந்தருளப் பண்ணுவித்துக் கொண்டு வாச்சொல்லித் திருவரங்கப் பெருமாளரை யறை அனுப்ப அரையரும் உடையவரை அழைத்துக் கொண்டுவர . . . . ''[52]

திருவெள்ளறையில் இராமாநுசர் தங்கியபோது செய்த சிறப்பான செயல் திருவரங்கத்தில் வழிபாட்டு முறைகளையும் விழாக்களையும் ஒழுங்குபடுத்தி பத்துப் பிரிவுகளை வகுத்தார். அவற்றை கொத்து என்பர். திருப்பதியத்தார், திருப்பணிசெய்வார், பாகவதநம் பிக்கு கைங்கர்ய மரியாதை, உள்ளூரார், விண்ணப்பம் செய்வார் (அரையர்), திருக்கரக்கையார், ஸ்நாநத்தார், பட்டாள், ஆரியப்பட்டாள், தாஸநம்பிக் கொத்துக்கள் என்று இவை கோயிலொழுகில் கூறப்படுகின்றன.[53]

### உடையவர் குளம்

இராமாநுசர் தோற்றுவித்ததாகக் கூறப்படும் ஏரி ஒன்று வெள்ளறையில் பெருமாள் கோயிலுக்கு வடக்கே அரைக்கல் தொலைவில் பெரிதாக அமைந் திருப்பதை இன்றும் காணலாம். இதனை 'உடையார் குளம்' என்றே அழைக்கின்றனர்.

### உடையவர் கோயில்

பெருமாள் கோயிலுக்கு எதிரே பெரிதாக தென் புறம் நோக்கி அமைந்துள்ளது. இதற்கு நித்திய பூசை காலையில் மட்டும் இன்றும் பெருமாள் கோயி லில் இருந்து வந்து நடத்துகின்றார்கள். உடையவர்

திருநாளான சித்திரை-திருவாதிரை நாளன்று உடையவர் உற்சவமூர்த்தம் இங்கிருந்து புறப்பட்டுத் திருவீதிவலம் வருகின்றது. 'எம்பெருமானார் கோயில்' திருத்தேர்க்கு வடக்கேயுள்ளது என்று விஜயநகர காலத்தைச் சேர்ந்த பெருமாள் கோயில் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது.[54] அதில் குறிப்பிடும் இராமாநுசர் கோயில் இதுவாகத்தான் இருக்கவேண்டும். கல்வெட்டில் குறிப்பிடுவது போன்று பெருமாள் கோயில் தேர்க்கு வடக்கே இந்த இராமாநுசர் கோயில் அமைந்திருப்பதை இன்றும் திருவெள்ளறையில் காணலாம்.

## இராமாநுசர் கூடம்

கி.பி. 1500இல் திருவெள்ளறையில் இராமாநுசர் பெயரில் 'ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீ இராமாநுச கூடம்' ஒன்று இருந்தது.[55] இக்கூடத்துக்கு திருவெள்ளறை ஜீயர் ஒருவரிடமிருந்து சூரிய குலத்தினைச் சார்ந்த அயால தேவ-மகாராஜாவின் மகன் ராமராஜ கோனேந்தியாள் நிலம் வாங்கிவிட்டான். இதிலிருந்து வரும் வருவாயிலிருந்து பக்தர்களுக்கு அமுது படைக்கப்பட்டது. இச்செய்தியைப் பெருமாள் கோயிலின் இரண்டாவது வடதிருச்சுற்றின் வெளிச்சுவரின் மேல்புறமுள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது.

## எங்களாழ்வான்

இவர் பிறந்த இடம் திருவெள்ளறையே ஆகும். இராமாநுசர் ஸ்ரீபாஷ்யத்திற்கு அறுவர் உரையெழுதினர். அறுவருள் இவர் இராமாநுசர் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் வகையில் சிறப்பாக உரையெழுதினர்.

இதைக் கண்ட இராமாநுசர் இவரைப் பாராட்டி என்னை ஆளவந்தவனே என்றழைத்து அணைத்துக் கொண்டார். அதுமுதல் இவருக்கு எங்களாழ்வார் என்று பெயரேற் பட்டது என்று கூறுவர். இவரது வேறொரு திருப்பெயர் விஷ்ணு சித்தாரியர் என்பதாகும். ஸ்ரீவிஷ்ணு புராணத் திற்கு 'விஷ்ணுசித்தீயம்' என்ற உரையெழுதியுள்ளார். இவரது சன்னதி பெருமாள் கோயிலில் சேத்தி மண்ட பத்தில் வடக்குப் பார்த்து அமைந்துள்ளது. இவரது பிறந்த திருநாளன்று இவரது உற்சவத்திருமேனி திருவீதிவலம் வருகின்றது.

நம்மாழ்வார், குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், நாதமுனிகள், கூரத் தாழ்வார், மணவாளமாமுனிகள், பெரியாழ்வார், முதலி யோர் பிறந்த திருநாளன்று அவரது திருமேனிகள் இன்றும் திருவீதிவலம் வருகின்றன. சிறப்புப் பூசனைகள் நடைபெறுகின்றன. பொய்கை, பூதம், பேய் என்ற முதலாழ்வார்களுக்கும், திருப்பாணாழ்வார், மதுரகவி யாழ்வார், குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார் முதலிய ஆழ்வார்களுக்கும் வெள்ளறைக் கோயிலில் செப்புத் திருமேனிகளும், கற்றிருமேனிகளும் உள்ளன.

### நூற்றெட்டுத் திருப்பதியுள் திருவெள்ளறை

பெருமாளின் திருநாமங்களைப் போலவே அவர் உறையும் பதிகளின் பெயரைப் பரவுதலும் சீரிய செயலாக வைணவர் கருதுகின்றார்கள்.

'சென்று தொழுகல்லீர் கண்டு பணிமின்'

என்பது பரிபாடல். திருவாய்மொழியில் ஊரைச் சொன்ன அளவிலேயே அவன் என்னுள்ளம் புகுந்து விட்டான் என்ற ஒரு பாடல் உண்டு.

"திருமாலிருஞ்சோலே மலேயென்றேன் என்னத்
திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான்"

"ஆழியான்பதி நூற்றெட்டும் ஓதுவார்
அன்று செய்வினே அன்றே அகலுமே"

என்பது திருவரங்கத்தமுதனுர் வாக்கு[56] ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட *108* திருமால் திருப்பதி களேத் 'திவ்விய தேசங்கள்' என்றும் 'உகந்தருளிய நிலங்கள்' என்றும் உரைப்பர்.

பத்தாம் நூற்ருண்டில் வாழ்ந்த வங்கிபுரத்தாய்ச்சி முதன் முதலில் நீண்ட கலிப்பாட்டாக நூற்றெட்டுத் திருப்பதிகளேத் தொகுத்துப் பாடினுர்.[57]

"கடலலேகள் தோன்றும் கடும்பிறவி வெள்ளத்
தொடரலேகள் தோன்றி நில்லாதே—மடநெஞ்சே
ஆழ்வார்கள் பாயிரத்தால் அலங்கரித்த மால்பதிகள்
மூவாறு முப்பத்து மூன்று.[58]

வெள்ளறையைப்பற்றி நூற்றெட்டு கலித்துறை யந்தாதி,

"தூணனேயப் படைவாட கரத்தோளே தொழுதிறைஞ்சும்
வெண்ணேய படை துருநெறி வெள்ளறை"

என்று உரைக்கிறது.

பிற்காலத்தில் நூற்றெட்டுத் திருப்பதிகளின் மேல் அந்தாதி, வெண்பா, கோவை, தோத்திரம், திருப்பள்ளி

யெழுச்சி, தாலாட்டு, துதி, விருத்தம் என்று பலவகை யில் பாடல்கள் எழுந்தன. இவற்றில் பெரும்பாலா னவை சுவடிகளாகவே உறங்குகின்றன.

சோழநாட்டு வைணவப்பதிகளில் வெள்ளறை சிறப்பான பதியாக விளங்கிற்று என்பதை மேற்கண்ட நூல் வகைகள் காட்டுகின்றன. 17ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் வெள்ளறை யைப் பின்வருமாறு பாடியிருக்கின்ருர்.

''கல்விருந்தான் தந்தை கமலத்தோ னக்கமலத்
தில்விருந்தான் நந்தை யரங்கேசனென்றே-தொல்லைமறை
யுள்ளறையா நின்றமையா லுள்ளமே கள்ளமின்றி
வெள்ளறை யான்ருளே விரும்பு.''59

திருநின்றவூர் திருமலைத்தங்கி தாத்தாசாரியார் தொண் டன்,

''பொன்மலர் செல்வியுடன் கீழ்திசை நின்ற புண்டரிக
நன்மலரக கண்ணனை வெள்ளறையிற் கண்டு
நாடுமினே'' 60

என்கின்ருர்.

இதில் திருவெள்ளறைப் பெருமாளுக்குப் புண் டரிக நன்மலர் கண்ணன் என்ற பெயரும் அவன் கீழ்த்திசையில் நின்ற திருமுகமண்டலமாக இருக்கின் ருன் என்ற செய்தியும் வருதல் காண்க.

திருப்பதிவண்ணை விருத்தம்

''வெள்ளறை மேவிய நாராயணன் மருவாநாள்

அல்லெழ மாமதி மேலே ஆடும் மையலினல்
[உறுநோயேமிகும்''61

என்று குறிப்பிடுகின்றது.

நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா

கண்டுலக மேத்த நிலைகாட்டி நின்ற வெள்ளறையுள்
வண்டுலவச் செந்தாமரைக் கண்ணு-கொண்டுமென
நாடத் திருக்கடையா நற்றமிழ் கூர்ந்துன் புகழைப்
பாடத் திருக்கடை காண்பார் 62

என்று குறிப்பிடுகின்றது. நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு

"அரங்கம் உறையூர் தஞ்சை யன்டில கரம்பனூர்
புரங்கள் திருப்புள்ளம் பூதங்குடி திருப்பேர்
சிரங்கள், திருவெள்ளறையுஞ் சிந்தை யதூர்
திருப்பாங் கோணெடு மாமுகிலைப்பாடு''63

என்று தாலாட்டுகின்றது. நூற்றெட்டுத் திருப்பதி திருப்புகழ்,

"திரைதள்ளி நெட்டை வாவிலைகள் வெடி
துள்ளி முட்டிவானுக திருவெள்ளறை குணமேவிய
[பெருமானே ''64

என்றழைக்கின்றது. நூற்றெட்டுத் திருப்பதி கோவை65 நூற்றெட்டுத் திருப்பதியடைவு66

'முப்போதும் வானவரேத்தும் முனிவர்கள் வெள்ளறை'

என்று சிறப்பிக்கின்றன. நூற்றெட்டுத் திருப்பதி பெருமாள் திருப்பள்ளி யெழுச்சி,

'சீர்புகழ் வைகுந்தம் நதி திருவார்கூடல்
பாரில் ஸ்ரீரெங்கம்திருவெள்ளறை

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வைகுந்த விண்ணகரம் வாழும் பெருமாள் பள்ளியெழுந்
தருளாயே'67

என்று வெள்ளறைப் பெருமானையும் திருப்பள்ளி யெழுச்சி செய்கின்றது.

'நூற்றெட்டுத் திருப்பதி விவரம்' என்ற சுவடி திருவெள்ளறையைப் பற்றி 'நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம், சூரியனுக்கும் தர்மவர் மாவுக்கும் பிரத்தியட்சம்[68] என்று குறிப்புக்களைத் தருகின்றது.

தற்காலத்திலும் நூற்றெட்டுத் திருப்பதி கோவை, நூற்றெட்டுத் திருப்பதியகவல் என்ற இருநூல்கள் தோன்றியுள்ளன.

"கள்ளமிலார் காணும் கமலக்கண் ணாழி
வெள்ளமிசை யாலிலையான் வெள்ளறையே"—69

"உலகுய ரரங்க முறையூர் தஞ்சை
அன்பில் கரம்பா ராதலூர் வெள்ளறை"

என்று இவை வெள்ளறையைப் பற்றிப் பேசுகின்றன.

இந்த நூற்றெட்டுத் திருப்பதி பற்றிய இலக்கியங் களிலிருந்து திருவெள்ளறையைப் பற்றிச் சிறப்பான செய்திகளைப் பெற முடியவில்லை. அனைத்தும் ஒரே அச்சில் வார்த்தவை போன்று காணப்படுகின்றன. நூற்றெட்டுத் திருப்பதி துதியும்,[71] தோத்திரமும்[72] மிகவும் சிதைந்தழிந்த சுவடிகளாய் சென்னை அரசினர் கீழ் திசை சுவடியகத்தில் உள்ளன.

---

1 T. A. Gobinatha Rao, Elements of Hindu Iconography

2 E. S. வரதராச அய்யர், தமிழ் இலக்கிய வரலாறு, பக் 210
3 Ibid. pp. 211-213
4 Ibid pp. 211
5 Ibid pp. 218
6 தொல்காப்பியம் அகத்திணையியல் 26
7 தொல்காப்பியம் புறத்திணையியல் 60
8 புறம் 56
9 மதுரைக்காஞ்சி 591
10 திருமுருகாற்றுப்படை 160-161
11 அகம் 11
12 சிலம்பு-இந்திரவிழவுயெடுத்த காதை
13 மா. இராசமாணிக்கனுர், பல்லவர் வரலாறு, பக் 13
14 அ. கி. பரந்தாமனுர், நாயக்கர் வரலாறு, பக். 424
15 வைணவ விஞ-விடை பக் 27-28
16 Ibid பக் 45-46
17 தி. வை. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக்-51
18 திருமொழி செங்கீரைப்பருவம், பா 8
19 திருமொழி காப்புப் பருவம் பா-1
20 Ibid பா 2
21 ,, பா 3
22 ,, பா 5
23 ,, பா 6
24 ,, பா 7
25 ,, பா 8
26 ,, பா 9
27 ,, பா 10
28 ,, பா 6
29 E.S. வரதராச அய்யர், தமிழிலக்கிய வரலாறு-பக். 368.
30 திருமங்கையாழ்வார். பெரியமடல் – வரி 117-119
31 Ibid சிறிய மடல் - வரி 70.
32 திருமங்கையாழ்வார் சிறியமடல் இறுதி வரிகள்.

33 திருமங்கை - பெரிய திருமொழி - பத்தாம்பத்து - ஒரு /நற்சுற்றம் பா 4.

34 Ibid - பா 1

35 ,, - பா 2

36 ,, - பா 3

37 ,, - பா 5

38 ,, - பா 4

39 ,, - பா 6

40 ,, - பா 7

41 ,, - பா 8

42 ,, - பா 9

43 ,, - பா 6

44 ,, - பா 10

45 ,, - பா 10

46 மு. அருணாசலம். தமிழிலக்கிய வரலாறு 10-ஆம் நூற்றாண்டு பக் - 507 - 508.

47 S. R. பாலசுப்பிரமணியம். முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் பக். 48.

48 வைணவ வினா — விடை பக். 53.

49 ARE 209 of 1938/39.

50 மு. அருணாசலம். தமிழிலக்கிய வரலாறு 11-ஆம் நூற்றாண்டு பக் 50.

51 சு. ஸ்ரீநிவாச அய்யங்கார். இராமாநுசர் சரித்திரம் பக் 51

52 கோயிலொழுகு பக் 41-42.

53 Ibid பக். 42-47.

54 ARE 209 of 1938/39.

55 ARE 206 of 1938/39.

56 திருவரங்கத்தமுதனார்-நூற்றெட்டுத் திருப்பதி கோவை.

57 மு. அருணாசலம் தமிழிலக்கிய வரலாறு 10–ஆம் நூற்றாண்டு பக். 517-518.

58 நூற்றெட்டுத் திருப்பதி கலித்துறை-சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம்.
59 பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் - அட்டப்பிரபந்தம் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.
60 நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி. உ வே. சாமிநாதய்யர் நூலகம் ஓலைச் சுவடி எண். 1030.
61 திருப்பதி வண்ண விருத்தம் உ. வே. சாமிநாதய்யர் நூலகம். ஓலைச் சுவடி எண் 222.
62 நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா - சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம் ஓலைச்சுவடி - R. 1498
63 நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு - சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் ஓலைச்சுவடி.
64 நூற்றெட்டுத் திருப்பதி திருப்புகழ்–சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், ஓலைச்சுவடி
65 நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை - சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் - ஓலைச் சுவடி - D. 2130.
66 நூற்றெட்டுத் திருப்பதியடைவு-சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம் - ஓலைச் சுவடி - R. 906.
67 நூற்றெட்டுத் திருப்பதி பெருமாள் திருப்பள்ளி யெழுச்சி சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் ஓலைச் சுவடி எண். R 848.
68 நூற்றெட்டுத் திருப்பதி விவரம் - சென்னை அரசினர் கீழ் திசைச் சுவடிகள் நூலகம்-ஓலைச்சுவடி எண் R. 1173.
69 ந. சுப்பராய பிள்ளை, சிதம்பரம்-1942. நூற்றெட்டுத் திருப்பதி கோவை பா. 10. வ. 6.
70 அனந்தாழ்வான் - 1908. நூற்றெட்டுத் திருப்பதியகவல் வரி. 1–3.
71 நூற்றெட்டுத் திருப்பதி துதி - சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம்.
72 நூற்றெட்டுத் திருப்பதித் தோத்திரம்-சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.

# திருவெள்ளறை ஓலைச் சுவடிகள்

கர்னல் மெக்கன்சி திரட்டியுள்ள ஓலைச் சுவடிகளின் வரிசையில் வெள்ளறைச் சுவடிகளும் உள்ளன.[1] அவை இன்று சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ளன. இன்றும் அவை அச்சேருது சுவடிகளாகவே இருக்கின்றன.

அனைத்துச் சுவடிகளும் வெள்ளறைப் புண்டரீகாட்சப் பெருமாள் கோயில் பற்றியன. கோயிலுக்குரிய மான்யங்கள், இவ்வூரில் பெருமாள் வந்த வரலாறு, அவருடன் மூவாயிரத்து எழுநூற்று அறுபது அந்தணர்கள் வெள்ளறையில் குடியேறியது பற்றிப் பேசுகின்றன. இவற்றை வெள்ளறை வரலாற்றினை அறியவுதவும் அரிய சான்றுகளாகக் கொள்ள முடியாது.

### காலம்

எல்லாச் சுவடிகளும் ஒரே காலத்தில் அடுத்தடுத்து எழுதப்பட்டிருக்க வேண்டும். சுவடி ஒன்று முதலிலும் இரண்டும் மூன்றும் பிறகும் நான்கும் ஐந்தும் அதன் பிறகும் தோன்றியனவாகக் காணப்படுகின்றன. ஒவ்வொரு சுவடியின் இறுதியிலும் மகாராஜராஜ ஸ்ரீகும்பினியார் அவர்கள் ஆக்ஞைக்கு உள்ப்பட்டு நடந்து கொள்ளுவோமாகவும் என்று வருவதால்

இவை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் எழுந்தவை என்று தெளிவாகக் கூறலாம். கி. பி. 1802-இல் திருச்சியும் அதனைச் சார்ந்த பகுதிகளும் ஆங்கிலேயர் ஆட்சிக்கு நேரடியாக வந்தன.[2] ஆங்கிலேய மாவட்ட ஆட்சித் தலைவர் அமர்த்தப்பட்டு அவரது ஆணையின் கீழ் இப்பகுதிகள் இருந்து வந்தன. சுவடிகளில் ஒன்று 'அண்டர்சன்' என்ற மாவட்ட ஆட்சியாளரை 'ஆந்திரிசு துரை அவர்கள்' என்று குறிப்பிடுகின்றது.

சுவடிகள் :

பின்வருமாறு சுவடிகளைக் காலவரிசைப்படுத்திக் கூறலாம்.

சுவடி ஒன்று

திருவெள்ளறைப் புண்டரீகாஷர் சிலாசாசனம்

அல்லது

திருவெள்ளறை புண்டரீகாஷப்பெருமாள் சந்நிதி சிலாசாசனம்.

திருவெள்ளறைப் பெருமாளுக்கு நித்தியப்படிக்கும் அதிகப்படிக்கும் விடப்பட்ட நிவந்தங்கள் இச்சுவடி யில் கூறப்பட்டுள்ளன. இது சிலாசாசனம் என்று குறிப்பிடப்பட்டாலும் ஓலைச் சுவடியாகவே உள்ளது.

சுவடி இரண்டு

திருவெள்ளறைக் கைபீயத்து.

சுவடி மூன்று

திருவெள்ளறைக் கைபீயத்து.

கைபீது என்பதற்குத் தமிழ் அகராதியில் பின்வரு மாறு விளக்கம் கூறப்படுகிறது. Kaipitu n. < v. Kaifiyat, Statement, report, detailed account particulars, விவரக் குறிப்பு.[3]

திருவெள்ளறைத் தலவரலாறும் கோயிலுக்கு விடப்பட்ட மான்யங்களும் இவற்றில் காணப்படு கின்றன. இரண்டும் வெவ்வேறு நடைகளில் காணப் பட்டாலும் உள்ளடக்கம் ஒன்ருகத்தான் இருக்கிறது.

சுவடி நான்கு

திருச்சிஞப்பள்ளி-லாலுகுடித் தாலுகா திரு வள்(ள)ரை ஸ்தளம் கைபீயத்து.

சுவடி ஐந்து

திரிச்சிராப்பள்ளி-லாலுகுடித் தாலுகா திருவள் ளரை ஸ்தல வரலாறு.

லாலுகுடித் தாலுகா என்று இவற்றில் குறிப்பிடு வதால் இவை மற்ற சுவடிகளைவிட மிகவும் பிற்பட்ட வையாக இருக்க வேண்டும். லாலுகுடித் தாலுகா என்ற பிரிவே கி.பி. 1918-க்குப் பிறகு ஏற்பட்டது தான்.[4] 'கேதகீவனம்' க்ஷேத்திரக் கைபீயத்து திரு வெள்ளறைச் சுவடிகளில் இதையும் சேர்த்துள்ளனர். ஆனல் உள்ளே திருவெள்ளறை என்ற பெயர் காணப் படாதது குறிக்கத்தக்கது. மேலும் இவற்றில் மற்ற சுவடிகளில் சொல்லப்படாத வான்மீகிக்குத் திருமால் கருணைபுரிந்த கதை கூறப்பட்டுள்ளது.

## அமைப்பு

செய்திகளைத் தருவதில் அனைத்துச் சுவடிகளும் ஒரே அமைதியைப் பெற்றிருக்கின்றன. முதலாவதாக புராண வரலாறும், இரண்டாவதாக மான்யம் விடப் பட்டதற்கு முன்புள்ள முன்னுளையச் செய்திகளும், மூன்ருவதாகச் சுவடி எழுதப்பட்ட காலத்தில் விடப் பட்ட நிவந்தங்கள் பற்றிய விளக்கமும், நான்காவதாக எழுதியவர்களின் பெயரும், இறுதியாக அரச ஆணைக்கு அடிப்பட்டு நடந்துகொள்வோம் என்ற உறுதிமொழி யும் காணப்படுகின்றது.

## புராண வரலாறு

எல்லாச் சுவடிகளிலும் புராண வரலாறு ஒன்ரு கவே காணப்படுகின்றது. 1. திருவெள்ளறைப் புண்டரீ காட்சப் பெருமாள் திருவெள்ளறைக்கு எழுந்தருளி அறுபத்து நான்கு சதுர்யுகங்கள் ஆகிவிட்டன. 2. சிபிச் சக்கரவர்த்திக்கும், பூமி பிராட்டிக்கும், மார்கண்டேய ருக்கும் வெள்ளறையில் திருமால் வெளிப்படையாகத் தோன்றிக் காட்சி கொடுத்தார். 3. சிபிச் சக்கரவர்த்தி கள் வெள்ளறைக் கோயிலின் ராசகோபுரத்தையும், பிரகாரங்களையும் கட்டுவித்தார். 4. அந்தர்வேதியிலி ருந்து மூவாயிரத்து எழுநூற்று அறுபது அந்தணர் களை அழைத்து வந்து திருவெள்ளறையில் குடியேற்றி ஞர். (அந்தர்வேதி ராஜ்யம் என்பது கங்கை, யமுனை ஆகிய ஆறுகளின் இடைப்பட்ட நிலப் பரப்பாகும். இது ஆரிய பிராமணர்கள் வாழ்ந்து வந்த புனிதத் தலம் என்று கூறப்படுகிறது.[5] இவை அனைத்திற்கும்

கல்வெட்டுச் சான்றுகள் இல்லை. மரபாகச் சொல்லப் பட்டு வரும் புனைக் கதைகளே.

நிவந்தங்கள்

திருவெள்ளறைப் பெருமாள் கோயிலுக்குக் கென்று நிலங்கள் விடப்பட்டன. இவற்றைச் சுவடி கள் 'மான்யங்கள்' என்று கூறுகின்றன. இவற்றி லிருந்து வரும் வருமானம் கோயிலின் நித்தியப் படிக்கும், அதிகப்படியாக ஆண்டுதோறும் நடக்கும் விழாக்களுக்கும் செலவு செய்யப்பட்டது. நித்தியப் படிக்கும், விசேஷ திருச்ஜெயந்தி, நவராத்திரி, தீபா வளி சங்கராந்தி, திருக்கார்த்திகை போன்ற விழாக் களுக்கும் முன்னாளில் எவ்வளவு தொகை செலவிடப் பட்டது என்றும்; பின்னாளாகிய பிரிட்டிஷார் காலத்தில் எவ்வளவு செலவிடப்பட்டது என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர். 'ரௌத்திரி வருஷம் வரைக்கும் இந்தப்படி நடந்து வந்தது', பின்னர் 'துன்முகி வருஷம்' இவ்வாறு நடந்தது என்று ஆண்டையும் குறிப்பிட்டுள்ளனர். 'இது இரிராத்திரி ஷூ வரைக்கும் இந்தப்படிக்கு நடந்து வந்தது. துரும்மதி வருஷம் மகாராஜராஜ ஸ்ரீகும்பினியார் அவர்களும் இந்தப் படிக்குத் தயவு பண்ணி . . . . . . இந்தப்படிக்குக் கொடுத்து நடப்பிச்சுக் கொண்டு வருகின்றார்கள்[6] என்று சுவடிகளில் குறிப்பிட்டுள்ளது'. நாவாப்பு சாயபு ஞவரை,[7] துலுக்காணியத்தில்,[8] சாலிவாகன சகாப்தம் 1560-இல் விஜயரங்க சொக்கநாதர் நாயக்கர் நாள்வரை[9] என்று வெள்ளையர் ஆட்சிக்கு முன்பிருந்த அரசுகள் குறிப்பிடப்படுகின்றன. வெள்ளையர் அரசு,

'சீமை சறுக்காரு[10] என்றும் 'மகாராஜராஜ ஸ்ரீகும்பினி யார்[11] என்றும் குறிப்பிடப்படுகின்றது. முன்னர் நடந்துவந்த செய்திகளை மரபு வழியினர் கேட்டு இச் சுவடிகளை எழுதியிருக்கின்றனர். 'பெரியவாள் சொல்லக் கேட்டுக் கேள்வியுண்டு'[12] என்று இதைச் சுவடிக்காரர் குறிக்கின்றனர்.

திருவெள்ளறைக் கோயிலுக்குத் திருவெள்ளறை யைச் சுற்றியுள்ள ஊர் நிலங்கள் நிவந்தமாக விடப் பட்டுள்ளன. இதனைச் 'சறுவமான்யம்' என்றழைத் தனர். தீ(ரம்) பாளையம், தில்லானுப்பட்டி, மூவானூர், வெத்தனூர்[13] காட்டுக்கொளம் மூவானூர், வெத்த னூர்[14] முதலிய கிராமங்கள் மான்யமாக விடப்பட்ட தாகச் சுவடிகள் கூறுகின்றன. திருவெள்ளறைச் சீமையிலே இருந்த இந்நிலங்களைக் கோவிந்த பண்டிதர் முன்னர் குத்தகை எடுத்ததாகவும் பின்னர் சந்திர சேகரப்பிள்ளை குத்தகை எடுத்து கோயிலுக்குப் பொன்னாகவும், நெல்லாகவும் குத்தகையைச் செலுத் தினர்[15] என்றும் சுவடிகள் குறிப்பிடுகின்றன. பிற் காலத்து எழுதப்பட்ட சுவடிகளில் குத்தகைப் பணம் ரூபாயாகவும் செலுத்தப்பட்டதாகக் குறிக்கப் படுகின்றது.[16] வெள்ளறைக் கோயிலுக்குரிய இம் மான்ய நிலங்கள் இன்றும் மேற்குறிப்பிடப்பட்ட ஊர்களில் காணப்படுகின்றன. சுவடிகளில் குறிப்பிடப் படும் பல விழாக்கள் திருவெள்ளறைக் கோயிலில் இன்றும் நடைபெற்று வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கச் செய்தியாகும்.

## ஆதரவுகள்

மேற்கண்ட புராணக் கதைகள், நிவந்தங்கள் முதலியவற்றிற்குச் சான்றுகள் 'ஆதரவுகள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளன. புராணச் செய்திக்கு ஆதரவுகள் 'விஷ்ணு புராணத்தில் பூரு பாகத்தில் 'அ' அத்தியாயம்[17] என்றும், 'தலபுராணம்' பத்தாவது அத்தியாயம்[18] என்றும் குறிப்பிடப்படுகின்றன. இவ்வாதரவுகளைப் பார்த்து எழுதினோர் பெயர்கள் பங்கயச் செல்வி ஜீயர் அம்மாள், அர்ச்சகர், பண்டாரி தனத்தார்[19] பங்கயச்செல்வி சீய்யர் அம்பாள், அர்ச்சகர், பண்டாரிதனத்தார்;[20] சுந்தரமய்யர், அய்யாத் துரையவர்கள்[21] என்று குறிப்பிடப்படுகின்றன.

## முடிவு

முன்னர் நடந்ததையும், பின்னர் நடந்ததையும் நடந்தவாறே நாங்கள் அறிந்த வரை எழுதி வைத்தோம். நாங்கள் இதற்கு மேல் அறியவில்லை. இதில் தவறுகளோ, திருத்தியோ இருந்தால் துரையிடத்தில் முறையிட்டுத் தீர்த்துக் கொள்வோம்; கும்பினியார் ஆணைக்கு கீழ்ப்படிந்து நடந்து கொள்வோம் என்று எல்லா ஒலைச்சுவடிகளும் முடிகின்றன. "இது ஆதி முதல் நாளது வரைக்கும் எழுதி வைத்தோம். இதற்கு மேல் முன் தொரையிடத்திலே தாக்கல் பண்ணி யிருந்தாலும் இனிமேல் விசாரிக்க மேல் விசாரிக்கயிலே தாக்கல் பண்ணினாலும் கும்பினியார் ஆக்ஞைக்கு உட்பட்டு நடந்து கொள்ளுவோமாகவும்"[22]

## மொழிநடை

சுவடிகளின் அமைப்பைப் பற்றிக் கூறும் போது மொழி நடையையும் குறிப்பிட வேண்டியிருக்கிறது. எல்லாச் சுவடிகளும் தூய தமிழில் திருத்தமுள்ளவை யாக இல்லை. 'சாதிச்சு' 'வந்தது' 'யிருந்துது' 'அவர்கள் வரையிலே' என்று பேசுவது போலவே எழுதியிருக்கின்றனர். போதிய அளவு கல்வி அறிவு இல்லாதவர்களே இவற்றை எழுதி இருக்க வேண்டும். 'சுவடி நான்கு' திருநெல்வேலி பேச்சு நடையிலும் மற்றவை பிராமணர்கள் பேச்சு நடையிலும் எழுதப் பட்டுள்ளன. அங்காகாரப் பிரிட்டயும் (அக்ரகாரப் பிரதிஷ்டை) சகடாரம்பம், பக்ஷஉச்சவம் சமவச்ச ரொசவம், சீரணமாய், சீரஞ்ஞேத்தாரணம், க்ஷர்ப் பதியில் போன்ற வடமொழி சொற்களும், சறுவ மான்யம், சீமைசருக்காரு, விசாறணை, ரொக்கம், துரை போன்ற பிறமொழிச் சொற்களும் கலந்து எழுதி யிருக்கின்றனர். சுருங்கக் கூறுவதென்றால் அக்காலப் பேச்சு நடையின் உயிர்த் துடிப்பை வெள்ளறைச் சுவடிகளில் நிரம்பக் காணமுடிகிறது.

---

1 W. Mackenzices Manuscript.

2 Tiruchinopoly Gazatteer pp. 61.

3 Tamil Lexicon Vol. II part III pp. III.

4 Notification in Fo-t St. George-Gazetteer pp. 147-149. Part I dated 19th Feb. 1918.

5 கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள். முதல் தொகுதி. தொடர் எண். 24/1968.

6 சுவடி எண். 1. திருவெள்ளரைப் புண்டரீகாக்ஷப் பெருமாள் சிலாசாசனம்.

7 சுவடி இரண்டு - திருவெள்ளறைக் கைபீயத்து.

8 சுவடி நான்கு - திருச்சிராப்பள்ளி லாலுகுடித் தாலுகா திருவளர் ஸ்தலம் கைபீயத்து.

9 சுவடி ஐந்து - திருச்சிராப்பள்ளி லாலுகுடித் தாலுகா திருவெள்ளறை ஸ்தல வரலாறு.

10 சுவடி இரண்டு - திருவெள்ளறை கைபீயத்து.

11 சுவடி ஐந்து - திருச்சிராப்பள்ளி லாலுகுடித் தாலுகா திருவெள்ளறை ஸ்தல வரலாறு

12 சுவடி நான்கு - திருச்சிராப்பள்ளி - லாலுகுடி தாலுக்கா திருவளர் ஸ்தலம் கைபியத்து.

13 சுவடி இரண்டு - திருவெள்ளறைக் கைபீயத்து.

14 சுவடி மூன்று - திருவெள்ளறைக் கைபீயத்து.

15 Ibid.

16 சுவடி நான்கு, ஐந்து.

17 சுவடி ஐந்து – திருச்சிராப்பள்ளி - லாலுகுடித் தாலுகா

18 சுவடி ஒன்று - திருவெள்ளறைப் புண்டரீகாக்ஷப் பெருமாள் சிலாசாசனம்.

19 Ibid.

20 சுவடி இரண்டு - திருவெள்ளறைக் கைபீயத்து.

21 சுவடி ஐந்து - திருச்சிராப்பள்ளி - லாலுகுடித் தாலுகா திருவளர் ஸ்தலம் கைபீயத்து.

22 சுவடி ஒன்று – திருவெள்ளறைப் புண்டரீகாக்ஷப் பெருமாள் சிலாசாசனம்.



# புண்டரீகாட்சப் பெருமாள் கோயில்

ஊரின் நடுவே பெருமிதத் தோற்றத்துடன் விளங்குகின்றது. முப்பத்தாறடி உயரமுள்ள மதிளால் சூழப்பெற்று, பத்து ஏக்கர் நிலப் பரப்பில் இக் கோயில் விளங்குகின்றது. வடக்கு வாசலில் முடிவடை யாத ஹொய்சளர் கோபுரம் ஐம்பதடி உயரம்கொண்டு நிற்கிறது. தற்போது காணப்படும் இப்பெருமாள் கோயில் பிற்காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகும். இதன் மூலமான பண்டைப் பெருமாள் கோயில் இங்குள்ள குடைவரையாக இருக்க வேண்டும்.[1]

## குடைவரைக்கோயில்

கோயிலின் மூன்ருவது திருச்சுற்றில் வசந்த மண்டபத்திற்கு வடக்கே, தெற்கு நோக்கி அமைந் துள்ளது. இங்குள்ள கல்வெட்டுக்களில் 'திருவெள் ளறை பெரிய ஸ்ரீகோயில்' என்றும் இறைவன் பெரியஸ்ரீ கொயில் பெருமாளடிகள் என்றும் குறிக்கபெறுகின்ருர். இப்போது இங்கு வழிபாடுகள் நடைபெறவில்லை. ஒரு படியரிசியும், ஒரு கத்திரிக்காயும் வேகுமுன் இக் குடைவரையை நகங்களாலேயே சுரண்டிக் குடைந்து விட்டார்கள் என்று வேடிக்கையாக இக்குடைவரை பற்றிக் கதை சொல்கின்ருர்கள், மார்க்கண்டேய முனிவர் இங்குதான் தவம் புரிந்தார். எமலோகத்தில்

கூட 'வெள்ளறையிலுள்ள இக்கல்லறையைக் கண் டாயா' என்று கேட்பார்கள் என்று இதுபற்றிக் கூறு கின்றார்கள்.

### குடவரையின் காலம்

திருவெள்ளறை பெரியாழ்வாரும், திருமங்கையாழ் வாரும் பாடிய தலம். இவர்களுக்கு முன்னர் வாழ்ந்த ஆழ்வார்கள் பாடல்களில் வெள்ளறையைப் பற்றிக் குறிப்பொன்றும் காணப்படவில்லை. இவ்வாழ்வார்கள் பாடிய காலத்திலிருந்துதான் வெள்ளறை தோன்றிப் புகழ் பெற்றிருக்க வேண்டும். திருமங்கை மன்னன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தும் அவனது மகன் தந்திவர்மன் காலத்தும் வாழ்ந்தவர்.[2] பெரியாழ்வார் நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தில் வாழ்ந்தவர். திருமங்கை மன்னன் காலத்திற்குச் சற்று முன்பு வாழ்ந்து மறைந்தவர் என்பர்.[3] இக்கருத்துக்களை ஒத்துக்கொள்வோமானால் இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் வெள்ளறை பெருமானடிகள் கோயில் எழுந்திருக்க வேண்டும் என்ற முடிவைக் கொள்ள வேண்டியிருக்கின்றது. இதை இக்குடைவரையிலுள்ள இரண்டாம் நந்திவர்மனின் கல்வெட்டு உறுதிப்படுத்து கின்றது.[4] துப்ரேல் எளிமையான அமைப்பைக் கொண்டு விளங்குமிது இரண்டாம் நந்திவர்மன் காலத் தினைச் சார்ந்தது என்றும்; குன்றாண்டார் சிவன் கோயில் குடைவரையும் இதுவும் சமகாலத்தவையாக இருக்கலாம் என்றும் கூறுகிறார்.[5] இதை எடுத்தவர் யாரென்று தெரியவில்லை. முத்தரையர்கள் பணியாக இருக்க வேண்டும் என்பர்.[6]

## அமைப்பு

பெருமாள் கோயிலின் இறுதியில் தெற்கேயுள்ள பாறையின் அடியில் கிழக்கு மேற்காக குடையப் பட்டுள்ளது. குடைவரை தெற்குப் பார்த்தது. 480 செ. மீ. நீளமும், 280 செ. மீ. அகலமும், 113 செ. மீ உயரமும் கொண்டது. குடைவரை நன்கு தீட்டி மழிக்கப் படாமல் குறைப் பணியுடன் நிற்கிறது. வாயிலில் கனத்த இரண்டு அரைத்தூண்களும் நான்கு முழுத் தூண்களும் காணப்படுகின்றன. உட்புறம் தூண்கள் இல்லை. தூண்கள் கீழும் மேலும் கனசதுரமாய் இடையில் எண் பட்டையாய் காணப் படுகின்றன. இச்சதுரங்களில் வேலைப்பாடுகள் எதுவும் இல்லை. பழைய கல்வெட்டுக்கள் காணப் படுகின்றன மேல் சதுரத்திற்கு மேல், போதிகை கூரையைத் தாங்கி நிற்கின்றன. இவற்றில் கீழ்ப்புற மும், மேல்புறமும் பக்கத்திற்கு எட்டுக் காடிகளாக ஒவ்வொரு தூணிலும் பதினாறு காடிகள் வெட்டப் பட்டுள்ளன. இக்காடிகளின் நடுவு வெட்டப்படாது பட்டையாக விடப்பட்டிருக்கின்றது.

தூண்களுக்கு வெளியே கொடுங்கை நீட்டிக் கொண்டிருக்கின்றது. அவற்றில் வேலைப்பாடு செய்ய முனைந்திருக்கின்றார்கள். குடைவரையின் உட்புறம் கீழ்ப்புறமும், மேல்புறமும் பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு கருவறைகள் குடையப்பெற்று முற்றுப் பெறாது இருக்கின்றன. அமைப்பில் இரண்டும் ஒன்றாய் விளங்குகின்றன. இரண்டுமே காலியாய் இருக்கின்றன. இக்கருவறைகளின் வெளியே பக்கங்களில் இரண்டு

பெரிய துவாரபாலகர்கள் நிற்பதற்குத் தேவ கோட்டங்கள் அமைக்க முனைந்திருக்கின்றார்கள். அவை யும் நிறைவேறாமலேயே நிற்கின்றன. கருவறையை நான்கு வேலைப்பாடில்லாத தூண்கள் அணி செய் கின்றன. கருவறைக்கு மேலே கொடுங்கை அமைக்கப் பட்டுள்ளது. அதற்கு மேலே மர உத்திரப் பலகை கள் செருகினால் போன்று கற்பலகைகள் நீட்டிக் கொண்டிருக்கின்றன. கருவறையின் கீழ் பாகம் மண்ணில் புதைந்து கிடக்கின்றது. எளிமையான அதிட்டானம் அதற்கு அமைக்கப்பட்டிருக்கின்றது. மேற்குப்புறம் உள்ள கருவறை கீழ்புறத்தில் உள்ளதைக் காட்டிலும் உள்ளே சற்று அகலமாக ஆனால் ஆழம் குறைவாகக் குடையப்பட்டுள்ளது.

கிழக்குக் கருவறை

| | | | |
|---|---|---|---|
| *1* | வாயில் | அகலம் | *34* செ.மீ. |
| | | உயரம் | *73* செ.மீ. |
| *2* | உட்புறம் | அகலம் | 65 செ.மீ. |
| | | ஆழம் | 60 செ.மீ. |

மேற்குக் கருவறை

| | | | |
|---|---|---|---|
| *1* | வாயில் | அகலம் | *33½* செ.மீ. |
| | | உயரம் | *14* செ.மீ. |
| *2* | உள்ளே | அகலம் | *97* செ.மீ. |
| | | ஆழம் | *51* செ.மீ. |

குடைவரையின் வெளியே கீழ்ப் புறத்தில் கீழ்ச் சுவற்றில் மேற்குப் பார்த்து திருமால் போன்ற உருவம்

செதுக்கப்பட்டு முற்றுப்பெறுமல் நிற்கின்றது. இது பிற்காலப் பல்லவர் காலத்திற்குரிய உருவமைதியுடன் விளங்குகின்றது. குடைவரை எடுக்கப்பட்ட காலத்த தாக இருக்கலாம். இதேபோன்று மேல்புறத்தில் எதிரே ஒரு உருவம் செதுக்கத் தொடங்கி விடப்பட்டு உள்ளது.

கல்வெட்டுக்கள்

1. இரண்டாம் நந்திவர்மன் (11)-வது ஆட்சி யாண்டு.
2. தந்திவர்மன் - தெரியவில்லை.
3. விஜயாலயன் 1(5)வது ஆட்சியாண்டு.
4. முதல் ஆதித்தன் (2)வது ஆட்சியாண்டு.
5. கோப்பரகேசரி - தெரியவில்லை.
6. உத்தமசோழன் 8-வது ஆட்சியாண்டு.
7. இரண்டாம் ஆதித்தன் 5-வது ஆட்சியாண்டு.
8. முதல் இராசராசன் - தெரியவில்லை.
9. ,, - தெரியவில்லை.
10. ,, 1(3) வது ஆட்சியாண்டு.

| | | |
|---|---|---|
| பல்லவர் | - | 2 |
| சோழர் | - | 8 |
| | | 10 |

| | |
|---|---|
| இரண்டாம் நந்திவர்மன் | -1 |
| தந்திவர்மன் | -1 |
| விஜயாலயன் | -1 |
| முதல் ஆதித்தன் | -1 |

முதல் பராந்தகன் -1
உத்தமசோழன் -1
ரண்டாம் ஆதித்தன் -1
முதல் இராசராசன் -3
———
ஆக மொத்தம் 10 கல்வெட்டுக்கள்
———

இதைத் தவிர மணிப்பிரவாள நடையில் சிதைந்து போன முதல் குலோத்துங்கன் கல்வெட்டு இரண்டும் மற்ெருரு சோழர் கல்வெட்டு ஒன்றும் இக்குடைவரை யின் மேலுள்ள பாறையில் காணப்படுகின்றன.

நிவந்தங்கள் :

இரண்டாம் நந்திவர்மன்

குடைவரையின் மூன்ரும் தூணில் காணப்படும் கல்வெட்டில் 'ஸ்வஸ்திக் வடிவ கிணற்றில் குறிப்பிடப் படும்[7] கம்பன் அரையனின் அண்ணன் ஆலம்பாக்கத்து விசையநல்லூழான் குறிப்பிடப்படுகின்ருன்.[8] கல்வெட்டு சிதைந்து விட்டமையால் அவன் கொடுத்தது என்ன வென்று அறியமுடியவில்லே. இவனே இரண்டாம் நந்திவர்மனின் பட்டத்தாள்மங்கலச் செப்பேட்டில் ஆணத்தியாகக் குறிப்பிடப்படுகின்ருன்.[9] இக்கல்வெட் டில் ய÷ வருவதைப் பத்தாம் ஆண்டு என்று தொல் பொருள் ஆய்வுத்துறையினர் படித்திருக்கின்றனர். இது 11-ஆம் ஆண்டாக இருக்க வேண்டும். 'ஸ்வஸ்திக வடிவ கிணற்றில் கீழுள்ள பத்துப் படிகளுக்கு பத்து வரை எண்ணிட்டுள்ளனர். அங்கு ஒன்று என்பதை

'க' என்று எழுதாமல் ÷ என்றே எழுதியுள்ளனர். இதனுல் கல்வெட்டில் 'ய' என்று வருவதை அடுத்துக் காணப்படும் ÷ என்ற குறியீட்டைப் பொருளற்ற குறியீடாகக் கொள்ளாமல் ஒன்று என்று கொண்டு *11*-ஆவது ஆட்சியாண்டாகக் கொள்ளலாம்.

### விஜயாலயன் காலம்

இவனது *15*-ஆம் ஆட்சியாண்டில் 'திருவெள்ளறை பெரிய ஸ்ரீ கோயில் பெருமானடிகளுக்கு'ச் சித்திரைத் திங்கள் திருவோணத்தி நாள் அன்று திருவமிர்து செய்யப் பொன் கொடுக்கப்பட்டது.[10] திருமால் பிறந்த நாளன்று சிறப்புச் செய்ய அப்பொன் அளிக்கப்பட்டது போலும். 'மாயோன் மேய வோண நன்னுள்'[11] என்று சங்கவிலக்கியமும், இதை குறிப்பிடுதல் காண்க.

### முதல் ஆதித்தன்

இராஜகேசரிவர்மற்கு யாண்டு இரண்டாவது திருவெள்ளறை பெரிய ஸ்ரீ . . . . என்பதோடு கல்வெட்டு[12] நின்று விடுகிறது. அதன் பின்னுள்ள பகுதிகள் சிதைந்துள்ளன.

### முதல் பராந்தகன்

திருவெள்ளறை சதாய சதுர்வேதி நாராயணன் கோவிந்தனுல் திருமால் திருவமுது செய்ய எழுபது கழஞ்சு பொன் கொடுக்கப்பட்டது.[13]

### இரண்டாம் ஆதித்தன்

கல்வெட்டு பாண்டியனைத் தலைகொண்ட கோப்பர

கேசரிக்கு யாண்டு (5)-வது பெரிய ஸ்ரீகோயில் என்பதோடு நின்று விடுகிறது.[14]

## முதல் இராசராசன்

இவனது 13-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றும்[15] ஆட்சியாண்டு அழிந்துபோன இரண்டு கல்வெட்டுக்களும்[16] குடைவரையில் காணப்படுகின்றன. ஒரு கல்வெட்டின் மூலம் பெரிய ஸ்ரீ கோயில் பெருமானடிகளுக்குத் திருவமிர்து அளிக்கப்பட்டதை அறிந்து கொள்ள முடிகின்றது. மற்றவை மெய்க் கீர்த்திகளோடு நின்று விடுகின்றன.

## தமிழகத்தில் தொன்மையான கிருஷ்ணன்-ருக்மிணி கோயில் :

இக்குடைவரையிலுள்ள தந்திவர்மன், உத்தம சோழன் முதலியோரது கல்வெட்டுக்களில் கிருஷ்ணன்-ருக்மிணி வழிபாடு பற்றிக் குறிப்பிடப்படுகின்றன. இதுவே தமிழகத்தில் இவ்வழிபாடு பற்றிக் காணப்படும் குறிப்புக்களில் தொன்மை மிக்கதாகும்.[17]

தந்திவர்மன் திருவெள்ளறை பெரிய ஸ்ரீ கோயிலில் கிருஷ்ணனது படிமத்தையும் அவனது தேவியான ருக்மிணியின் படிமத்தையும் பிரதிட்டை செய்து அவற்றிற்கு வழிபாடும் செய்தான்.[18] உத்தம சோழனின் 8-ஆம் ஆட்சியாண்டில் முதல் பராந்தகனின் முதல் மகனும் தக்கோலம் போரில் உயிர்நீத்து கல்வெட்டில் ஆனைமேற் துஞ்சிய தேவர் என்று குறிக்கப் பெறும் இராசாதித்தன் தேவியாரான ஈராயிரவன் தேவி

அம்மனர் கிருஷ்ணன்-ருக்மிணியார்க்கு 20 கழஞ்சு பொன் வழங்கினர். இப்பொன்னல் இரண்டுஉவாவும் ஒரு அட்டமியும், சங்கராந்தியும் நாழி நாழி அரிசி அமுது செய்ய அளிக்கப்பட்டது. மேலும் விளக் கொன்றுக்கு இத்தேவியே பொன்னும் கொடுத்ததை கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[19]

இந்த ஆனைமேல் துஞ்சிய தேவியாருடைய தாயார் உடையபிராட்டியார் கிழானடிகள் ஆவார். தஞ்சை அரண்மனையின் அந்தபுரத்திலுள்ள ஒரு பகுதி இத்தாயார் பெயரால் வழங்கப்பட்டது.[20] இவ்வம்மனர் தேவியாரது கணவன் இராசாதித்தன் கி.பி. 949-இல் தக்கோலம் போரில் கன்னரதேவன் நண்பனான பூதகனல் யானை மேல் இருந்த போது கொல்லப்பட்டான். இதனல் அன்று முதல் 'ஆனைமேல் துஞ்சிய தேவர்' என்று அழைக்கப்பட்டான்.[21] அது முதல் இவ்வம்மையார் அறம்செய்து தம்வாழ்வை நடாத்தினர். அவர் அளித்த கோயிற்கொடை கல்வெட்டுக்களில் எல்லாம் 'ஆனைமேற் துஞ்சிய தேவர் தேவியார்' என்று தம்மை அழைத்துக் கொண்டார் நிற்க.

## வெள்ளறையில் கண்ணன் வழிபாடு

வெள்ளறையில் இதற்குப் பிறகும் கிருஷ்ணன் வழி பாடு சிறந்து விளங்கியமைக்குச் சான்றுகள் உள்ளன. தந்திவர்மன் காலத்து 'ஸ்வஸ்திக்' கிணற்றிலேயே மேல் புறத்தில் மேலுள்ள கற்பத்தியில் பறவையாக குதிரையாக, ஏருக வந்த அரக்கர்களை அழித்த காட்சிகள்

வடிக்கப்பட்டுள்ளன. புண்டரீகாட்சப் பெருமாள் கோவிலின் அதிட்டானப் பகுதியில் கண்ணன் குடம் எடுத்து ஆடியது, கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தது, புள்வாய் பிளந்தது, காளிந்தியின் மீது நடனமாடியது, நர்த்தமாடுவது முதலிய காட்சிகள் சிறியதாக சிற்பங்களில் வடிக்கப்பட்டுள்ளன. இச்சிறிய சிற்பங்கள் நிருபதுங்கன் காலத்தினைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

பிற்காலத்தினைச் சேர்ந்த கண்ணனது கற்சிலைகள் சித்திர மண்டபத்தில் மூன்றும், ராயகோபுர வாசலில் ஒன்றும், இராமாநுசர் சன்னதியில் ஒன்றும், தேர் நிற்கும் இடத்துச் சுவற்றில் இரண்டும், சிங்கர்குளத் தின் ஒன்றும் தசாவதார மண்டபத்தில் ஒன்றுமாக ஒன்பது திருவெள்ளறையில் இன்று காணப்படுகின்றன. கண்ணனது ஓவியங்கள் சித்திர மண்டபத்திலும், பெருமாள் கருவறையின் வடபுறத்திலும், தாயார் சன்னதியிலும் காணப்படுகின்றன.

கண்ணனது செப்புத்திருமேனி (சோழர் காலத்தின் இறுதி) புண்டரீகாட்சப் பெருமாளது கருவறையில் உள்ளது. ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி அன்று இது திருவீதி வலம் வருகின்றது. சிறப்பு பூசனை செய்யப் படுகின்றது.

தந்திவர்மன் காலத்தில் பிரதிட்டை செய்யப் பட்ட கிருஷ்ணன் - ருக்மணி தேவியாரின் உருவங்கள்

என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. அவற்றை வெள்ளறையில் எங்கு தேடியும் காண முடியவில்லை.

**காலம்**

இப்போது காணப்படும் பெருமாள் கோயில் குடை வரைக் கோயிலுக்குப் பின்னர் தோற்றுவிக்கப்பட்ட தென்று முன்னர் கூறினோம். இது பற்றி இனி காண லாம். கோயில் படிப்படியாகக் குடைவரையிலிருந்து மாறியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இப் போது காணப்படும் வடிவம் மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலிருந்து தான் திருத்தமான வடிவைப் பெற்று, பிற்காலத்தில் தான் முழுமையயைப் பெற்றிருக்க வேண்டும்.

எப்போது இக்கோயில் குடைவரையிலிருந்து இங்கு மாறியது என்று திட்டவட்டமாகத் தெரிய வில்லை. இப்போது காணப்படும் கருவறையின் அதிட்டானத்தில் இருக்கும் சிற்பத் தொகுதிகளை நிருபதுங்கன் காலத்தது என்று கொண்டால் இம் மாற்றம் நிருபதுங்கன் காலத்திலிருந்தே தொடங்கி இரண்டு கோயிலாக உருப்பெற்றிருக்க வேண்டும் எனலாம், ஆனால் அதிட்டானம் அக்கால அமைதியைப் பெற்றிருக்கவில்லை. பிற்கால அமைப்பில் முற்காலச் சிற்பங்களைச் செருகியிருப்பது சிறிய தடங்கலை ஏற்படுத்துகின்றது. அதே நேரத்தில் அடிப்புறம் சிம்மங்கள் குந்தியிருக்கும் அக்காலப் பல்லவர் தூண்கள் இச்சிங்கர் சன்னதியிலும் தாயார் கோயிலும் காணப் படுகின்றன. இவை பழைய பெருமாள் கோயி

கோவிலில் இருந்து இடித்துக் கொணர்ந்துதான் நிறுத்தினர் என்ற முடிவுக்கு நம்மை வரச் செய் கின்றன. பிற்காலப் பல்லவர் கோயில் வடிவை வரலாற்றினை அறிய முடியாத அளவில் குலைத்து விட்டனர் என்று எண்ணத் தூண்டுகின்றது.

இராசராசன் காலத்துக் கல்வெட்டுக்கள் நிறைந்த கற்கள் பெருமாள் கோவிலில் கட்டிடப் பகுதிக்குக் கிடையே பிரித்துப் பிரித்து வைத்துக் கட்டப்பட்டிருக் கின்றன. தாயார் கோவிலின் வடபுறம் உள்ள கற் பட்டியில் முதல் இராசராசன் பெயரும், முதல் இராசேந்திரன் மெய்க் கீர்த்தியும் காணப்படுகின்றன இவை இந்த கோயிலையும் பெரிய ஸ்ரீ கோயில் எனறே குறிப்பிடுகின்றன. இவை இராசராசன் காலத்தில் இம்மாற்றம் ஒரு முடிவுக்கு வந்திருக்கலாம் என்று நினைக்கத் தூண்டுகின்றது. குடைவரையின் உள்ளே காணப்படும் கல்வெட்டுகளில் இறுதியாக வரும் மன்னன் இராசராசனே ஆவான். பெரிய பெருமாள் கோவிலில் இப்போது காணப்படும் முழுமையான பழமைபடைத்த கல்வெட்டு மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டே ஆகும். இதற்குமுன் இராசேந்திரன் வரை ஆண்ட மன்னர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள் எங்கே? அவை பிற்காலத்தார் செய்த மாற்றத்தில் மறைந்து விட்டன. இம்மாற்றம் திருவள்ளறைக் கோயில் கட்டிட வரலாற்றினைத் தெளிவாக அறிய விடாது மயக்கத்தில் ஆழ்த்திக் கொண்டிருக்கின்றது என்று சமாதானம் சொல்லி அமைவதைத் தவிர வேறு வழியில்லை.

### பெருமாள் கோயில் கட்டிடங்கள்

புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலில் காணப் படும் முதல் திருச்சுற்று மாளிகையும், இரண்டாம் திருச்சுற்றும் மூன்ரும் குலோத்துங்கன் காலத்திலாவது அதற்கு முன்னருவது கட்டப்பட்டிருக்கவேண்டும். இவற்றில் இவனது கல்வெட்டுக்களே பழயைானவை யாகக் காட்சியளிக்கின்றன. கருவறையில் பிற்காலத் தார் பல மாற்றங்களைச் செய்து பழமையான வடிவத் தைக் குலைத்து விட்டனர். இக்கருவறை காஞ்சிபுரத் திலுள்ள அருளாளப் பெருமாள் கோயிலை ஒத்ததாகக் காணப்படுகிறது.[22] இதிலுள்ள மூவர் உருவம் 1948 இல் சுதையால் செய்து வைக்கப்பட்டதாம். இதற்கு முன்னரும் பெருமாள் சுதையாலேயே செய்துவைக்கப் பட்டிருந்தாராம். பெருமாளின் செப்புத்திருமேனி பிற் காலச் சோழர் காலத்தினைச் சார்ந்ததாகும். இப் பெருமாள் கல்வெட்டில் செந்தாமரைக் கண்ணாழ்வார் என்றழைக்கப்படுகின்ருர்.

முதல் சுற்றிலுள்ள சித்திர மண்டபமும் இரண் டாம் திருச்சுற்றிலுள்ள அனந்தராயர் மண்டபமும் விசய நகரத்தார் காலத்தில் கட்டப்பட்டவை. மூன் ரும் திருச்சுற்று மதிலும், நான்காம் மதிலும் தற் காலத்தில் நெகமம் சாரிட்டியரால் புதுப்பிக்கப்பட்டு முழுமையாய்க் காட்சியளிக்கின்றன.

### தாயார் கோயில்

அம்மன் கோயில் என்ற அமைப்பே பிற்காலத்தில் ஏற்பட்டதாகும். அம்மன் கோயில் அல்லது திருக்

காமக்கோட்டமுடைய நாச்சியார் கோயில் என்பது எல்லாக் கோயில்களிலும் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் நுழைந்திடம் பெற்றது.[23] இது முதல் இராஜேந்திரன் காலத்திலிருந்து தொடங்கிவிட்டதென்ருலும்[24] அக்காலத்தில் எழுந்த அம்மன் கோயிலுக்குச் சான்றுகள் இல்லை. திருவெள்ளறையிலுள்ள செங்கமலவல்லி நாச்சியார் கோயில் மூன்றும் குலோத்துங்கனுக்குப் பின்னர் ஏற்பட்டதே ஆகும்.

கி.பி. 1299-இல் மதுரைவுடைய நல்லூர் என்றழைக்கப்பட்ட கீழைக்கொடுமாத்தூரைச் சார்ந்த மச்சாழ்வார் அழகிய பெருமாள் என்பவன் ‘பங்கயச் செல்வியார்’ என்றழைக்கப்பட்ட இத்தாயருக்கு முன் ஒரு நொந்தா விளக்கு எரிக்கப் பொன் கொடுத்தான். இதுவே இக்கோயிலில் இத்தாயாரைப் பற்றிக் காணப்படும் முதல் கல்வெட்டாகும்.[25] கி. பி. 1430-இல் இராமச்சந்திர சரஸ்வதியின் சீடர் வியாசபாரதியால் பனங்குடி என்ற கிராமம் பங்கயச் செல்வியாருக்குத் ானமாக விடப்பட்டது.[26] கி. பி. 1615-இல் சிறுமன்னை கிராமத்தினைச் சேர்ந்த ஏற்மாரெட்டி, பாப்பாரெட்டி முதலியோரால் இக்கோயில் திருப்பணி செய்யப்பட்டது.[27]

இவ்வம்மன் கோயிலில் கல்வெட்டுக்கள் ஏதும் காணப்படவில்லை. இதன் முன்னுள்ள நவராத்திரி மண்டபம், சேத்திமண்டபம், நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டிருக்கலாம். கருவறையிலுள்ள செங்கமல வல்லியின் செப்புத்திருமேனி நாயக்கர் காலத்தினைச் சார்ந்ததாகும்.

## கோவில் அமைப்பு

### கருவறையும் விமானமும்

புண்டரிகாட்சர் (கருவறையின்) விமானம் ஒரு பாறையின் மீது அமைக்கப்பட்டுள்ளது. அதைச் சுற்றி பெரிய சதுர மதிள் எடுக்கப்பட்டுள்ளது. இதற்குக் கீழே அதிட்டானம் அகலம் 478 செ.மீ. நீளம் 578 செ.மீ. அளவுடையதாய் அமைந்திருக்கின்றது. உபானம்; அதற்குமேல் ஜகதி; வட்டமான விரிந்த பெரிய பத்மம், குமுதம், முதலியன உள்ளன. குமுதத்திற்கு மேலே பெரிய யாளிவரி ஓடுகிறது. அதிட்டானத்தில் ஜகதிக்குக் கீழே உபானப்பகுதியில் நிருபதுங்கன் காலத்துப் புடைச்சிற்பங்கள் காணப்படுகின்றன. இதில் கல்வெட்டுக்கள் ஏதும் காணப்படவில்லை.

அதிட்டானத்தில் மேற்குப்புறம் படிகள் மீது சென்று மூலவரை அடைய இருபுறமும் இரண்டு வாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை தக்ஷிணாயணம், உத்திராயணம் என்று பிரிக்கப்பட்டு ஆறு ஆறு மாதங்கள் திறந்து வைக்கப்படுகின்றன. இவற்றின் வழியே ஏறிச் சென்றால் உள்ளே பெருமாள் முன்னுள்ள முகமண்டபத்தினை அடையலாம். இது வடக்கும் தெற்குமாக நீண்டு நாற்பது தூண்கள் கொண்டதாய் விளங்குன்றது. தூண்களில் உடல் உருண்டையாகவும் போதிகை வேலைப்பாடு இல்லாமல் சதுரமாயும் காணப்படுகின்றது.

கீழ்புறம் பார்த்திருக்கும் வாயில் உள்ளே சென்றால் அர்த்தமண்டபத்தை அடையலாம். அங்கு வேலைப்

பாடு இல்லாத தூண்கள் காணப்படுகின்றன. இதில் நான்கு தூண்கள் உள்ள சிறிய மண்டபம் ஒன்றுள்ளது. மூலவர் இருக்கும் அகக் கருவறையைச் சுற்றிவர தென்புறமும் வடபுறமும் கிழக்கு பார்த்து இரண்டு வாயில்கள் காணப்படுகின்றன. வேலைப்பாடு இல்லாத தூண்கள் பக்கத்திற்கு ஆருகக் கருவறையில் காணப்படுகின்றன. இவற்றிற்கிடையே சித்திரமண்ட பத்தில் தீட்டப்பட்ட ஓவியங்களோடு ஒத்த காலத்தைச் சேர்ந்த அழிந்த ஓவியங்கள் கருவறைச் சுவற்றில் காணப்படுகின்றன. வெளியே முன்னர் கூறப்பட்ட அதிட்டானத்திற்கு மேலே சுவர் இரண்டுதளம் கொண் டதாய் இருக்கின்றது. இதில் முதல் தளத்தில் மேல் ஐந்து தேவகோட்டங்களும், வடக்கே மூன்று தேவ கோட்டங்களும், தெற்கே இரண்டு தேவகோட்டங்க ளும், கிழக்கே ஆறு தேவகோட்டங்களும் அமைக்கப் பட்டிருக்கின்றன. அவற்றில் திருமால் முதலியோரின் பல வடிவங்கள் பெரியதாய்ச் சுதையில் செய்யப்பட்டு சுவரோடு சுவராக உள்ளன. தூண்களின் உடல் நீண்டதாய் உள்ளது. அதற்கு மேல் பத்மம், பலகை, சதுரப்போதிகை அமைக்கப்பட்டிருக்கின்றன. அதற்கும் மேல் இரண்டாம் தளத்திற்குக் கீழே வேலைப்பாடு இல்லாத கபோதம் அமைக்கப்பட்டுள்ளது. மேல்புறம் உள்ள இரண்டு வாயில்களுக்கு மேலே சுதையால் ஆன நான்கு விமானங்கள் உள்ளன.

இவைகளைத் தாங்கி நிற்கும் இரண்டாம் தளம் முதல்தளத்தைப் போன்றே காணப்படுகின்றது. ஆனல் அவற்றில் எவ்விதமான சுதை உருவமும் காணப்பட

வில்லை. இவற்றிற்கும் மேலே உள்ள பிரஸ்தரம் கிரீவம், சிகரம், தூபி முதலியன சுதையால் ஆனவை. பிரஸ்தரம், பூதவரி, கொடுங்கை, கபோதம் கொண்டிருக்கின்றது. பூதம் பல நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் பெரிய கூடுகள் பக்கத்திற்கொன்ருகக் காணப்படுகின்றன. கொடுங்கையில் கொடிக்கருக்கு காணப்படுகின்றது.

கிரீவம் வட்டமாயுள்ளது. வேலைப்பாடு இல்லை. சுற்றிலும் நான்கு சுதையால் ஆன சிம்மங்கள் மூலைக் கொன்ருக அமர்ந்திருக்கின்றன. கிரீவத்தின் முடிவில் சிகரத்திற்குக் கீழே சுதையால் ஆன பூதவரி காணப்படுகின்றது. அதற்கும் மேலே திராவிட சிகரம் விளங்குகின்றது. சிகரத்தின் மேலே வடக்குத் தெற்காக மூன்று கலசங்கள் காணப்படுகின்றன.

முதல் திருச்சுற்று மாளிகை

கருவறையைச் சுற்றி இரண்டு வரிசைத் தூண்கள் கொண்ட (அகலம் 152 செ.மீ. உயரம் $88\frac{1}{2}$ செ.மீ.) திருச்சுற்று மாளிகை உள்ளது. இது உபபீடம், மலர்ந்த தாமரை, கம்பு, கண்டம், விரிந்த தாமரை, இவற்றின் மீது அமைக்கப்பட்டுள்ளது. இவற்றில் சுமார் 106 தூண்கள் காணப்படுகின்றன. தூண்களில் அதிக வேலைப்பாடு இல்லை. கீழ்ப்புறம் சதுரமாயும் அதை அடுத்து பதினறு பட்டைகளும் மீண்டும் சதுரமாயும் பின்னர் நீண்ட சதுர போதிகை முடிவும் கொண்டதாக தூண்கள் விளங்குகின்றன. போதிகையின் இருபுறமும் வேலைப்பாடுகள் காணப்

படுகின்றன. தாமரை மலர்களும் வளைந்த கோடுகளும் செதுக்கப்பட்டுள்ளன. சில போதிகைகளில் இருபுறமும் வெளியே சதுரமாய் போதிகை நீட்டிக் கொண்டு இருப்பது போன்று வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளது. சில தூண்களில் போதிகைக்கடியில் பக்கத்திற்கு நான்கு காடிகள் வெட்டப்பட்டுள்ளன. எண்பட்டைப் பகுதியில் பட்டையான வளையம் கொடுக்கப் பட்டுள்ளது. உடல் பகுதியில் சதுரங்களில் வேலைப் பாடு காணப்படவில்லை. இத்திருமாளிகையின் உத்திரப் சுவற்றில் சித்திரங்கள் தீட்டி அழிந்து போனமைக்குத் தடையங்கள் காணப்படுகின்றன.

### சித்திரமண்டபம்

கருவறைக்கும் நாழி கேட்டான் வாசலுக்கும் இடையே திருச்சுற்று மாளிகையின் கீழ்ப்புறம் உள்ளது. வேலைப்பாடு இல்லாத சதுரமான போதிகைகள் கொண்ட மூன்று வரிசையில் ஆன நாற்பத்து நான்கு தூண்கள் இம்மண்டபத்தில் காணப்படுகின்றன. இத் தூண்களிலும், மண்டபத்தின் விதானங்களிலும் ஓவியங்கள் தீட்டப்பட்டிருப்பதால் சித்திரமண்டபம் என்று பெயர் பெற்று விளங்குகிறது.

### கண்ணன் கோயில்

சித்திரமண்டபத்தின் வட கோடியில் கண்ணன் சிற்றுலயம் உள்ளது. உள்ளே ஒரே சிறிய கல்லில் ருக்மிணி, பாமா, கிருஷ்ணன் மூவரும் வடிக்கப்பட்டு விளங்குகின்றனர். தவிர குழலூதும் பிள்ளை,

நர்த்தனம் ஆடும் கண்ணன் உருவமும் இங்கே உள்ளன.

### நாழிகேட்டான் வாசல்

சித்திரமண்டபத்திலிருந்து கிழக்கே அனந்தராயர் மண்டபத்திற்குள் நுழைய அமைந்த வாயில். இதனை நாழி கேட்டான் வாசல் என்று அழைக்கின்றனர். பெருமாள் வெளியே சென்று விட்டு உள்ளே வரும் போது இங்கே நின்று நாழிகை என்ன ஆகிறது என்று கேட்டு விட்டுத்தான் உள்ளே வருவாராம். இதன் மேற்குப் புறம் இருபுறமும் சங்கநிதி பதுமநிதி அமர்ந்திருக்கின்றன. கிழக்குப்புறம் இருபுறமும் பத்ராள் சுபத்திராள் என்ற இருவாயிற் காவலர்கள் நிற்கின்றனர். நாழி கேட்டான் வாயிலுக்கு மேலே அழிந்து கட்டிடத்திற்கிடையே மறைந்து போன சுதையால் ஆன கோபுரம் ஒன்று காணப்படுகின்றது. பிற்காலச் சோழர் காலத்தினைச் சார்ந்த ஜகதி முப் பட்டைக்குமுதம், தூண்கள், கொடுங்கை முதலியன இவற்றில் காணப்படுகின்றன.

### இரண்டாம் திருச்சுற்று

நாழி கேட்டான் வாயிலை விட்டுக் கீழ்புறம் வெளியே வந்ததும் தெற்கு வடக்காக அமைந்துள்ள அனந்தராயர் மண்டபத்தைக் காணலாம். இது விஜயநகர காலத்தில் அனந்தராயரால் கட்டப்பட்டிருக்க வேண்டும். வடபுறத்தில் மேடையும் அதில் நான்கு தூண்களால் ஆன சிறிய மண்டபமும் காணப்படு கின்றன. இதைச் சுற்றி பதிமூன்று வேலைப்பாடு மிகுந்த தூண்கள் காணப்படுகின்றன. தூண்கள் முதல், இடை, கடை சதுரமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. சதுரத்

தின் முடிவில் நாகபந்தமும், பத்மபந்தமும் காணப்படு கின்றன. இவற்றிற்கு மேல் பதினாறு பட்டைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் இடையில் குறுக்கே ஒரு பட்டை கொடுக்கப்பட்டு முப்பத்திரண்டு பட்டை களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. போதிகையின் இரு புறமும் நாணிய தாமரைப் போதுகள் தொங்குகின்றன. இம்மண்டப மேடைக்கு ஏறிவர இருபுறமும் படிகள் அமைக்கப்பட்டுள்ளன, இம்மண்டபத்திற்குத் தெற்கே எதிரே அமைந்துள்ள முன் மண்டபமும் இம்மண்டபத் தோடு இணைந்து விளங்குகிறது. இதன் நடுவில் இரு வரிசையில் ஆறு ஆறு தூண்கள் ஒரே வேலைப்பாடு கொண்டவையாய் காட்சியளிக்கின்றன. இதற்கு இரு புறமும் உருண்டையான உடல் உள்ள தூண்கள் பக்கத்திற்கு ஐந்தாக மொத்தம் பத்துள்ளன. மேல் புறம் நடுவரிசையிலுள்ளவை போன்ற தூண்கள் சுவற்றினை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளன. தூண்களின் சதுரப்பகுதிகளில் நரசிங்கர், பெண், பக்தர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இம்மண்டபத்தின் நடுவே நாழி கேட்டான் வாசலுக்கு எதிரே பழைய கொடிமரம் ஒன்றும், பத்மபலிபீடம் ஒன்றும் உள்ளன.

அனந்தராயர் மண்டபத்தின் வடமேற்குக் கோடியில் சேனை முதலியார் சன்னதியும், தெற்கே கோயில் பணியகமும், பொருள்கள் போடும் அறையும் அமைந்துள்ளன.

### ஆரியப்படாள் வாசல்

அனந்தராயர் மண்டபத்தை விட்டு வெளியே செல்ல அமைந்துள்ள வாயிலுக்கு ஆரியப்படாள் வாசல்

என்று பெயர். இதில் மேலே 1974-இல் புதுப்பிக்கப் பட்ட கோபுரம் ஒன்றுள்ளது. இதிலுள்ள பழைய சுதையுருவங்களை எல்லாம் பணம் போதாமையால் மீண்டும் அப்படியே வைக்காது அகற்றி விட்டார் களாம். சிமெண்டினால் பூசப்பெற்று இருபதாம் நூற்றாண்டு சாயல் கொண்ட திருமால், திருமகள். கண்ணன் நரசிங்கர் முதலியோரின் சுதையுருவங்கள் இதன் மூன்று மாடங்களிலும் வைக்கப்பட்டுள்ளன. உடற் பகுதியில் கும்பபஞ்சரம் போன்றவை இல்லாமல் எளிமையான தூண்கள் காட்சியளிக்கின்றன.

இந்த இரண்டாம் திருச்சுற்று வெளிச் சுவற்றில் ஏராளமான கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. ஆரியப்படாள் வாசலுக்கு எதிரே கிழக்கே பெரிய பத்மபலிபீடம் ஒன்றும் நான்கு தூண்கள் கொண்ட பெரிய மண்டபம் ஒன்றும் காணப்படுகின்றன. இப்பலி பீடத்திலேயே திருமாலுக்குரிய பலிப் பொருள்கள் படைக்கப்படுகின்றன. இதன் தென்புறம் இயற்கை யான சுனை ஒன்றுள்ளது. இதனை ஸ்கந்தபுஷ்கரணி என்று அழைக்கின்றார்கள்.

இரண்டாம் திருச்சுற்றின் கீழ்புறம் பலி பீடத்திற்குக் கிழக்கே நான்கு தூண்கள் கொண்ட மண்டபத்தினையடுத்துக் கருடன் சன்னதி காணப்படு கிறது. இதற்கும் கிழக்கே மூன்றாம் திருச்சுற்றுச் சுவரினை ஒட்டி திருச்சுற்று மாளிகை எடுக்க முனைந்திருக் கின்றார்கள். இத்திருச்சுற்றின் தென்கிழக்கு மூலையில் மடைப்பள்ளி அமைந்திருக்கிறது. இதற்கு எதிரே

வடகிழக்கு மூலையில் தற்காலத்தில் கட்டப்பட்ட 'நம்மாழ்வார் சன்னதி' மேற்குப் பார்த்து விளங்குகிறது. இச்சன்னதி ஒரு திருச்சுற்றும், பல தூண்கள் கொண்ட மண்டபத்துடனும் கட்டப்பட்டுள்ளது. கருவறையில் விஜயநகரத்துக் காலத்தினைச் சார்ந்த திருமால், ஸ்ரீதேவி பூதேவி உருவங்களும் பிற்காலத்து நம்மாழ்வார் உருவமும், செப்புத் திருமேனி ஒன்றும் காணப்படுகின்றன. மேலும் இவை இரண்டிற்கும் சற்று பழமையான நம்மாழ்வார் நின்ற நிலையிலுள்ள மூலவர் உருவமும், உற்சவமூர்த்தமும் இங்கு காணப்படுகின்றன. கட்டிடம் முழுமையும் அருமையான சோழர் காலத்துக் கல் வெட்டுக்கள் நிறைந்த கற்களால் தற்காலத்தில் கட்டப்பட்டதாகும்.

### ஊஞ்சல் மண்டபம்

நம்மாழ்வார் சன்னதிக்கு முன்னால் எட்டுத் தூண்கள் கொண்டு உயர்ந்து விளங்குகின்றது. முன்பு இங்கு பெருமானின் ஊஞ்சல் ஆட்டம் நடைபெற்றது. இப்போது இது பாழடைந்த நிலையில் விளங்குகிறது. தூண்களில் அடியார்கள் இருவர் வணங்கி நிற்கும் காட்சியும், பெண்கள் இருவர் விளக்கேந்தி நிற்கும் நிலையும் வடிக்கப்பட்டுள்ளன.

இரண்டாம் திருச்சுற்று வடக்கு வாசலுக்கு மேற்கே, தெற்கே சக்கரத்தாழ்வார் சன்னதி வரைக்கும் ஒரே வரிசைத் தூண்களால் ஆன இரண்டாம் திருச்சுற்று மாளிகை காணப்படுகின்றது.

சிங்கர் சன்னதி

நம்மாழ்வார் சன்னதிக்கு மேற்கே எதிரே திருச் சுற்றின் வட மேற்குக் கோடியில் உள்ளது. கிழக்குப் பார்த்தது. இதில் நான்கு வரிசையால் ஆன பதினாறு தூண்கள் காணப்படுகின்றன. கருவறை மூன்று வாசலு டன் காணப்படுகின்றது. முன் மண்டபத்தின் முதல் வரிசையில் முகப்பில் அமைந்துள்ள நான்கு தூண்களும் பிற்காலப் பல்லவர் காலத்தைச் சேர்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கதாகும் பிற்காலத்தில் இக்கோயிலின் பழமையான அமைதியை எவ்வாறெல்லாம் பின் வந்தோர் சிதைத்தனர் என்பதற்கு இவை சிறந்த சான்றுய் விளங்குகின்றன.

இரண்டாம் திருச்சுற்றின் மேற்குத் திருமாளிகை பல அறைகள் கொண்டதாய்ப் பழுதடைந்து காணப் படுகின்றது.

சக்கரத்தாழ்வார் சன்னதி

இத்திருச்சுற்றின் தென்மேற்குக் கோடியில் கிழக்குப் பார்த்தது சக்கரத்தாழ்வார் சன்னதி. தாயார் சன்னதிவரை நீண்ட முன் மண்டபமும் கொண்டது. நெகமம் சாரிட்டியாரால் தற்காலத்தில் புதுப்பிக்கப் பட்டது. கருவறையும் அதைச் சுற்றித் திருச்சுற்று நடையும் காணப்படுகின்றன. முன் மண்டபத்தில் உள்ள நான்கு வரிசைத் தூண்களின் உடல் உருண்டு நீண்டு காணப்படுகின்றது. இவற்றில் வேலைப்பாடு எதுவும் காணப்படவில்லை.

## தாயார் கோயில்

சக்கரத்தாழ்வார் சன்னதிக்கும் மடைப்பள்ளிக்கும் இடையில் கிழக்குப் பார்த்து அமைந்திருக்கிறது. கருவறை சுதையால் பூசப் பெற்றிருக்கிறது. தெற்கு, வடக்கு, மேற்கு என மூன்று பக்கங்களிலும் தேவ கோட்டங்கள் காணப்படுகின்றன. மலர் ஏந்திய சுதையால் ஆன நாச்சியாரின் காவற்பெண்டுகள் இவற்றில் நிற்கின்றனர். அர்த்த மண்டபச் சுவற்றில் தூண்கள் இல்லை. தென்புறம், வடபுறமாக இரண்டு தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. ஜகதி, முப் பட்டை குமுதம், கம்பு, கண்டம், வேதிகைப் பட்டிகை அதிட்டானத்தில் காணப்படுகின்றன. தேவகோட்டங் களை இரு அரைத் தூண்கள் அணி செய்கின்றன. இவற்றின் பக்கங்களில் முழுமையான தூண்கள் காணப் படுகின்றன. அவற்றிற்கு மேலே யாளவரியும் கொடுங் கையும் காணப்படுகின்றன. விமானம் சாலைவடிவில் இல்லை. மூன்றடுக்குக் கொண்டு சுதையால் ஆனது, சிகரத் தில் ஸ்தூபி ஒன்று நிற்கிறது.

கருவறையைச் சுற்றி ஒரு வரிசையால் ஆன பத்துத் தூண்கள் கொண்ட திருச்சுற்று மாளிகை உள்ளது. இதன் வழியே கருவறையைச் சுற்றி வரலாம். அர்த்த மண்டபத்திற்கு முன்னுள்ள மண்டபத்திலிருந்து இதனுள் வர தென்புறமும் வடபுறமும் வாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றிலுள்ள தூண்கள் மேலும் கீழும் சதுரமாய் நடுவில் எண்பட்டையாய் காணப்படுகின்றன. போதிகை செவ்வகமாய் உள்ளது. தூண்களில் அதிக வேலைப்பாடு இல்லை. இத்தூண்களில்

மேற்புறமுள்ள இரண்டு தூண்கள் பிற்காலப் பல்லவர் காலத்தினேச் சார்ந்தவை. சிங்கர் மண்டபத்தில் காணப் பட்டவை போன்று இவையும் காட்சியளிக்கின்றன. இத்திருச்சுற்றின் விதானங்களில் நாயக்கர் காலத்தினேச் சார்ந்த அழகிய ஓவியங்கள் காணப்படுகின்றன.

அர்த்தமண்டபத்திற்கு முன்னுள்ள மண்டபத்தில் பல்லவர் பாணியைச் சார்ந்த நான்கு சிம்மத் தூண் களும் இரண்டு சாதாரணத் தூண்களும் காணப் படுகின்றன.

தாயார் சன்னதிக்குத் தெற்கே யாகசாலே உள்ளது. முன் மண்டபத்தை அடுத்து ஒரு மண்டபம் காணப்படு கின்றது. அதையடுத்து 'நவராத்திரி மண்டபம்' காணப் படுகின்றது. இம்மண்டபத்தில் புரட்டாசி மாதம் நவராத்திரி விழா நடைபெறுகின்றது. மூன்று வரிசை யால் ஆன பன்னிரு தூண்கள் இதில் நிற்கின்றன. நடுவில் நான்கு தூண்கள் கொண்ட மண்டபம் ஒன்றும் நிற்கின்றது. முன் வரிசைத் தூண்கள் அமைப்பில் புதியதாக இருக்கின்றது. உடற்பகுதி அடியிலிருந்து வட்டமாய் உயர்ந்து அதையடுத்து கலசமும், தாடியும், பரங்கிக்காய் போன்ற வடிவமும், விரிந்த பத்மமும், சதுரப்பலகையும், போதிகையும் கொண்டவையாய்க் காணப்படுகின்றது. போதிகையில் நான்கு புறமும் தாமரைப் போதுகள் தொங்குகின்றன.

### சேத்தி மண்டபம்

நவராத்திரி மண்டபத்திற்குக் கிழக்கே அதனேடு ஒட்டியுள்ள மண்டபம் சேத்தி மண்டபம் எனப்

படுகிறது. பங்குனி மாதம் தேர்த் திருநாளின் மறு நாள் பெருமாள் கோயிலிலுள்ள அம்மன் மூர்த்தமும் (பங்கயச் செல்வி), தாயார் சன்னதியிலுள்ள அம்மன் மூர்த்தமும் (செங்கமலவல்லி) சேர்ந்து இம்மண்டபத்தில் இருப்பதால் இப்பெயர் இம்மண்டபத்திற்கு வந்தது என்பர். இம்மண்டபத்தில் கிழக்கு மேற்காக மூன்று வரிசைத் தூண்கள் காணப்படுகின்றன. வடபுற வரிசைத் தூண்கள் கீழே சதுரமாய் மேலே உடல் எண் பட்டையாய்க் காணப்படுகின்றன. இதற்குத் தென்புறம் உள்ள இரண்டு வரிசைகளும் அமைப்பில் ஒரே மாதிரியாய் காட்சியளிக்கின்றன. இதன் உச்சிகளி லுள்ள யாளி வரிசையும், நாணித் தொங்கும் பத்மங் களும் மண்டபத்தை அணி செய்கின்றன. மண்டபத் தின் கிழக்கே இறுதியில் நான்கு கால்கள் கொண்ட சிறிய மண்டபம் ஒன்று காணப்படுகின்றது. நவராத் திரி மண்டபத்திலிருந்து மடைப்பள்ளி வரையுள்ள பகுதியில் ஆண்டாள், நாதமுனிகள், அன்னமூர்த்தி குலசேகர ஆழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் முதலியோர் சன்னதிகளும் தசாவதார மண்டபமும் அமைந்துள்ளன.

### மூன்ரும் திருச்சுற்று

இரண்டாம் திருச்சுற்றிலிருந்து மூன்ரும் பிரகாரத் திற்குச் செல்ல வடக்கே அமைந்த வாசல் சிறிய குடைவரை எனப்படுகின்றது. இதன்மேல் தற்காலத் தில் புதுப்பிக்கப்பட்ட பழமை அமைப்பிழந்த கோபு ரம் ஒன்றுள்ளது. இதில் சுதையுருவங்கள் காணப் படவில்லை. சிகரத்தில் நான்கு புறமும் யாளி முகங்கள்

உள்ளன. தெற்கு வடக்காக, மேற்கு கிழக்காக இரண்டு வரிசைகளில் பன்னிரு கும்பங்கள் உள்ளன. மூன்றும் திருச்சுற்றின் வடமேற்குக் கோடியில் தற்காலத்தில் கட்டப்பட்ட மணவாள முனிகள் சன்னதி காணப்படுகின்றது. வடகிழக்குக் கோடியில் தூண்கள் நிறைந்த கணு மண்டபம் காணப்படுகின்றது. தை மாத கணு நாளில் இங்கு கணுத்திருநாள் நடைபெறுகின்றது. இவை இரண்டிற்கும் இடையில் சிறிய குடைவரைக்கு மேல்புறம் பூதேவி தவம் செய்ததாகக் கூறப்படும் ஆழமான பூங்கிணறு காணப்படுகின்றது. மூன்றும் பிரகாரத்திற்கு நான்கு வாயில்கள் இருந்திருக்கவேண்டும். மேல்புறம் உள்ள வாயிலை இப்போது அடைத்துவிட்டார்கள். இத்திருச்சுற்றின் தென்புறம் இடிந்து பாழடைந்த நிலையில் வசந்த மண்டபம் ஒன்று காட்சியளிக்கின்றது. இதற்கு எதிரேதான் பழமையான பெருமாள் குடைவரை உள்ளது.

## ஹொய்சளர் கோபுரம்

மூன்றும் திருச்சுற்றின் வடக்கு வாயிலே கோயிலின் முதல் நுழை வாயில் ஆகும். பதினெட்டுப்படிகள் கொண்ட ஒரு பெரிய மேடையில் மிகவும் அகன்ற அடித்தளத்தைக்கொண்ட இந்த ஹொய்சளர் கோபுரம் முற்றுப்பெருவிட்டாலும் திருவெள்ளறைக்கு ஒரு எடுப்பான தோற்றத்தைக் கொடுக்கின்றது. இரண்டு தளங்களும்; அதற்குமேல் சில மாடங்களும் மொட்டையாய் பூசப்பெருமல் நிற்கின்றன. மாடங்களில் மூலையில் கர்ணக்கூடுகளும், இடையில் சாலைகளும் காணப்படுகின்றன. இரண்டாம் தளத்தை

பக்கத்திற்கு மூன்று தேவகோட்டங்கள் அணி செய்கின்றன. இவற்றிற்கிடையே வேலைப்பாடு மிக்க மிகப் பெரிய கும்பபஞ்சரங்கள் காணப்படுகின்றன.

கோபுரத்தின் உள்ளே வாயிலின் இருபுறமும் கொடிப் பெண்கள் சிம்மத்தின் மீது நிற்கின்றனர். இக் கோபுரம், ஹொய்சளரால் கட்டப்பட்டது என்பதற்கு மிகுந்த வேலைப்பாடமைந்த இதன் கட்டடப்பாணியே சான்ருகும். ஹொய்சளர் ஆட்சியில் பல காலம் திருவெள்ளறை இருந்தது என்பதை முன்னமே கண்டோம். ஹொய்சள வீரராமநாதனின் கல்வெட்டு பெருமாள் கோயிலின் தென்மேற்கு மூலையிலுள்ள சுவஸ்திகக் கிணற்றில் இன்னும் காட்சியளிக்கின்றது. இவ்வீரராமநாதனின் காலத்தில் இவ்வெழில் மிக்க கோபுரம் எடுக்கப்பட்டு இருக்கலாம்.

### நித்திய பூசைகள்

இந்த பெருமாள் கோயிலில் நாள்தோறும் தற்போது திருபள்ளியெழுச்சியும், விஸ்வரூபதரிசனமும் நடைபெறுவதில்லை. காலை ஏழு மணிக்குத் திருமஞ்சனம் எடுக்கப்படுகிறது. காலைச்சந்தி 7·30–8·15 க்கு இடையில் மாலை, துளசி சார்த்தி திருவாராதனத்துடன் முடிவடைகிறது. உச்சிக்காலம்: தலைநெய்வேதனம் நடைபெறுகிறது. இதனை பெரியவசரம் என்பர். சாயரட்சை: 5·00-5·30-க்கு இடையில் நடத்தப்படுகிறது. இதில் பெருமாளுக்கு ஜீரா அன்னம் படைத்து தலைநெய்வேதனம் செய்யப்படுகிறது. அடுத்து நூற்றெட்டுப் பாசுரங்கள் பாடப்படுகின்றது. அர்த்தசாமம்: (8.00

8.30) செலவு சம்பா படைக்கப்பட்டு அரியணையில் முடி கின்றது. ஒன்பது மணிக்குப் பீக முத்திரை வைக்கப் பட்டுக் கதவடைக்கப்படுகிறது.

## சிறப்புப் பூசைகள்

### ஏகாதசி

பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை மாதம் இரு முறை நடைபெறும். இக்காலங்களில் காலசந்தி முடிந்த உடன் பெருமாள் புறப்பட்டு அபிஷேக மண்டபத்திற்கு வருகிறார். அங்கு மாலைகள் அன்ன நெய்வேதனம் நடை பெறுகிறது. பெருமாள் சாயரட்சைக்குள் கருவறைக்குப் போய்விடுகிறார்.

### அமாவாசை

மாதம் ஒரு முறை ஏகாதசியில் நடைபெற்றது போன்று அமாவாசை அன்று வழிபாடு நடைபெறு கிறது.

### சித்திரைப் பிறப்பு

சித்திரை பிறந்த அன்று அம்மாவாசை அன்று பூசைகள் நடைபெற்றது போன்று பூசைகள் நடை பெறுகின்றன.

வைகாசி, ஆனி, ஆடி முதலிய மாதங்களில் சிறப்பு வழிபாடு இல்லை.

### ஸ்ரீஜெயந்தி

ஆவணி மாதம் கண்ணன் பிறந்தநாளன்று கண்ணனது உற்சவமூர்த்தம் திருவீதி வலம் வரும்.

பிறகு அதற்குச் சிறப்பு பூசனைகள் நடைபெறு கின்றது.

## நவராத்திரி

இது புரட்டாசி மாதம் ஒன்பது நாட்கள் தாயார் சன்னதியில் நவராத்திரி மண்டபத்தில் நடைபெறுகிறது. தாயார் புறப்பட்டு பத்தி உலாவி நவராத்திரி மண்டபத்தில் சிம்மாசனத்தில் எழுந்தருளியவுடன் கொலு நடைபெறுகிறது. இரவு 'தோளுக்கினியானில்' கருவறையை அடைகிருர்.

## தீபாவளி

ஐப்பசி மாதம் நடைபெறுகிறது. தீபாவளி அன்று இரவு எட்டு மணிக்குப் பெருமாளுக்கு எண்ணெய் அலங்காரம் செய்யப்படுகிறது. பிறகு அபிஷேக மண்டபத்திற்கு எடுத்து வரப்பட்டு பூசனைகள் முடிந்த வுடன் கருவறையை அடைகிருர்.

## கார்த்திகை

இத்திருநாள் அன்று மடப்பள்ளியில் நெய் தீபத்தைப் பூசனை செய்து பெருமாளுக்குக் கொண்டு வந்து காட்டுகின்ருர்கள். உடனே பெருமாள் 'தோளுக்கினியானில்' புறப்பட்டுத் திருவீதி வலம் வருகிறது. திருவீதியில் கிழக்குப் புறத்தில் 'தீபஸ்தம்பம்' கொளுத்தப்பட்டவுடன் கருவறையை அடைகிருர்.

### தைமாதம்

இம்மாதம் கணு புறப்பாடும், பாரி வேட்டையும் நடைபெறுகிறது. பாரிவேட்டையன்று கணு மண்டபத்திலிருந்து பெருமாள் குதிரை வாகனத்தில் வீதிவலம் வருகின்றார். கணுவன்று தாயாருக்குப் புளியோரை, எள்ளோரை, உளுந்தோரை, வெள்ளோரை, கொள்ளோரை என்று ஐந்து விதமான திருவமுதுகள் படைக்கப்படுகின்றன. மாசி மாதம் சிறப்பு வழிபாடு இல்லை.

### பங்குனி பத்து நாள் விழா

இவ்வாண்டு விழாவே இவ்வூரில் மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. சுற்றியுள்ள ஊர்களிலிருந்து ஏராளமான மக்கள் இதைக் காண வருவார்கள். இது தொடங்குவதற்கு முதல் நாள் இரவு மண்ணெடுத்து பாலிகை தெளித்து கருடனை கருவறையில் பிரதிட்டை செய்கிறார்கள். மறுநாள் திருவிழாவின் முதல் நாள். காலையில் இதை எடுத்து வந்து கொடியேற்ற மண்டபத்தில் பூசனைகள் நடத்தி பெருமாள் முன் கொடியேற்றம் நடைபெறுகிறது. மாலையில் சுவாமி தாயாருடன் திருவீதி வலம் வந்து அம்மன் மண்டபத்திலிருந்து புறப்பட்டு இரவு மூலஸ்தானம் அடைகிறது.

இரண்டாம் நாள் காலையில் நித்திய பூசைகள் முடிந்தவுடன் சுவாமி சுற்பக விருட்சத்தில் திருவீதி வலம் வருகிறது. இரவு காலவாய்ப்பட்டியிலிருந்து

சூரியப்பிரபையில் எழுந்தருளி திருவீதி வலம் வந்து கருவறையை அடைகிறது.

மூன்றும் நாள் காலையில் தாயாருடன் புறப்பட்டு ஸ்ரீரங்கத்திற்கு எதிரில் கொள்ளிடக் கரைக்கு எழுந் தருளியிருக்கிறது. ஸ்ரீரங்கம் கோயிலிருந்து சிறப்புப் பூசனைகள் நடைபெறுகின்றன. இரவு புறப்பட்டு சுவாமி காலையில் திருவெள்ளறையை அடைகிறது.

நான்காம் நாள் காலையில் திருவெள்ளறைத் திருவீதி வலம் வந்து வாகன மண்டபம் சேர்கிறது. மாலை 8 மணிக்கு கருட வாகனத்தில் வீதி வலம் வருகின்றது.

ஐந்தாம் நாள் காலையில் நித்திய பூசனைகள் முடிந்தவுடன் திருவீதி வலம் வந்து வாகன மண்டபம் சேர்கிறது. இரவு எட்டு மணிக்கு நந்தவன மண்டபத் திலிருந்து சேட வாகனத்தில் வீதிவலம் வருகின்றது.

ஆரும் நாள் யானை வாகனத்திலும், ஏழாம் நாள் புட்ப வாகனத்திலும் வீதிவலம் வருகின்றது. எட்டாம் நாள் குசலன் குளத்து மண்டபத்திலிருந்து குதிரை வாகனத்தில் திருவீதி வலம் வருகின்றது. ஒன்பதாம் நாள் தேரோட்டம். அன்று தேரில் சுவாமியும், தாயாரும் திருவீதி வலம் வருகின்றனர். இந்நாளில் திருவரங்கத்திலிருந்து அரையர்கள் வந்து திருத் தேருக்கு முன் திவ்ய பிரபந்தத்தைப் பாடிக் கொண்டு செல்வார்கள்.

பத்தாம் நாள் சுவாமியும் தாயாரும் திருவீதி வலம் வந்தவுடன் இரவு பெருமாள் முன் கொடி இறக்கப்பட்டுப் பங்குனி பத்து நாள் விழா முடிவடைகிறது.

## ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் திருநாள்

தொண்டரடிப் பொடியாழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார், இராமாநுசர், எங்களாழ்வார், கூரத்தாழ்வார் மணவாள மாமுனி முதலியோர் பிறந்த திருநட்சரத்திரத்தன்று அவர்களுக்குச் சிறப்பு பூசனைகள் நடைபெறுகின்றன. அவர்களது திருமேனிகள் திரு வீதி வலம் வருகின்றன.

## பாஞ்சராத்திரம்

பாஞ்சராத்திர ஆகம முறைப்படி இக்கோயிலில் வழிபாடுகள் நடைபெறுகின்றன. முதலில் துவார பாலர்க்கும் பிறகு முறையே பரிவாரங்கள், பெருமாள், தாயார், ஆழ்வார், ஆச்சாரியர்களுக்கும் முறைப்படி பூசனைகள் செய்யப்படுகின்றன.

## புறப்பாடு

இங்குள்ள பெருமாள் கருவறையில் தெற்குப்புறம் ஒரு வாயிலும், வடக்குப்புறம் ஒரு வாயிலும் உள்ளன. உத்திராயணத்தில் ஆறு மாதமும் தட்சிணயணத்தில் ஆறு மாதமுமாக இவை மாறிமாறித் திறந்து வைக்கப் படுகின்றன. இவ்வழியே சுவாமி புறப்பட்டு வெளி வரும். தமிழ் நாட்டில் கும்பகோணம் சாரங்கபாணி

கோயிலில் மட்டும் இம்முறை காணப்படுகின்றது. வேறு எங்கும் காணப்பெறவில்லை என்கின்றார்கள்.

## பணியாட்கள்

இக்கோயில் அர்ச்சகம் செய்ய பத்துப் பட்டர்கள் இருக்கின்றார்கள். இது தவிர சாவியை வைத்துக் கொள்ள பண்டாரி அறுவரும், சுவாமியைத் தூக்க ஸ்ரீபாதம் பதினாறு பேர்களும் இருக்கின்றார்கள். இவர்கள் அனைவரும் அந்தணர்களே. வேதம் ஓத இக் கோயிலில் 'அத்தியாபாகம்' உள்ளனர். நாச்சியார் பரிகலம் ஒருவரும், மெய்க்காவலர் இருவரும், புல்வெட்டு கின்றவர் ஒருவரும், திருவலகிடுவார் இருவரும், மேளம் நாயனம் வாசிக்க மேளகார முதலியார் இருவரும் இங்கு பணிபுரிகின்றனர். இக்கோயில் ஸ்ரீரங்கம் தேவஸ் தானத்தால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றது.

## கல்வெட்டுக்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | கோனேரின்மை கொண்டான் | 16-வது | ஆட்சி [யாண்டு |
| 2. | ,, | 16-வது | ,, |
| 3. | திரிபுவன வீரதேவன் | 31-வது | ,, |
| 4. | ,, | 35-வது | ,, |
| 5. | மூன்றும் இராசராசன் | 20-வது | ,, |
| 6. | ,, | 32-வது | ,, |
| 7. | சடாவர்மன் சுந்தரபாண்டியன் | 2-வது | ,, |
| 8. | ,, | 12-வது | ,, |

9. மாறவர்மன் சுந்தரபாண்டியன் — தெரியவில்லை
10. ,, — ,,
11. மாறவர்மன் குலசேகரன் 31-வது ஆட்சி [யாண்டு
12. விஜயநகரத்தார் காலம் சகம் 1352
13. ,, சகம் 1382
14. ,, சகம் 1472
15. ,, சகம் 1475
16. ,, துன்முகி ஆவணி 15
17. ,, ஆங்கிரச வைகாசி 28
18. ,, சகம் 1523
19. ,, சகம 1537

| | | | |
|---|---|---|---|
| சோழர் | - | 6 | கல்வெட்டுக்கள் |
| பாண்டியர் | - | 5 | ,, |
| விஜயநகர காலம் | - | 8 | ,, |

| | | | |
|---|---|---|---|
| மூன்றும் குலோத்துங்கன் | - | 3 | கல்வெட்டுக்கள் |
| மூன்றும் இராசராசன் | - | 3 | ,, |
| சடாவர்மன் சுந்தரபாண்டியன் | - | 2 | ,, |
| மாறவர்மன் சுந்தரபாண்டியன் | - | 2 | ,, |
| மாறவர்மன் குலசேகரன் | - | 1 | ,, |
| விஜயநகர காலம் | - | 8 | ,, |
| ஆக மொத்தம் | | 19 | |

### கல்வெட்டுக்களில் இறைவன் பெயர்

1. உலகுடைய நாயஞர்[28]
   (மூன்ரும் குலோத்துங்கன் காலம்)
2. திருக்கழிசாத்திய எம்பெருமான்[29] ,,
3. செந்தாமரைக் கண்ணுழ்வார் [30] ,,

### இறைவி

1. பங்கயச் செல்வியார்[31]
2. பங்கயச் செல்வி நாச்சியார்[32]

### மற்றவர்கள்

1. கம்பிகாத்தாழ்வார்[33]
2. திருவயோத்தியாழ்வார்[34]

### திருவிழாக்கள்

1. வைகாசி மாதவிழா[35]
   (மூன்ரும் குலோத்துங்கன் காலம்
2. 30 நாட்கள் விழா [36] ,,
3. சித்திரை விழா மூன்று நாட்கள்[37]
   (சடாவர்மன் சுந்தரபாண்டியன்)

### மடங்கள்

1. கற்பக வல்லிமடம்[38]
   (மூன்ரும் குலோத்துங்கன் காலம்)
2. பெரியமடம்[39] (விஜயநகரம்)
3. ஸ்ரீபாசியக்காரர்ஸ்ரீ இராமநுசகூடம்[40]
   (விஜயநகரம்)

### உணவு வழங்கல்

விழாக்காலங்களிலும் மற்ற சிறப்பு நாட்களிலும் வைணவர்களுக்கும் கோயிலில் வேலை செய்வோர்க்கும் உணவு வழங்குதல் வெள்ளறையில் பெரு வழக்காக நடைபெற்று வந்தது. மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் உடையார் கவிராஜ சக்கரவர்த்தியான திரிபுவன கவிச்சக்கரவர்த்திகளால் 900 பேருக்கு வைகாசி மாத விழாவில் திருவெள்ளறைக் கற்பக வல்லி மடத்தில் உணவு வழங்கப்பட்டது.[41] முப்பது நாட்கள் நடக்கும் விழாவொன்றில் இந்த ஆலம் பாக்கத்து தலைவனாலேயே நாள்தோறும் 90 பேருக்குக் கற்பகவல்லி மடத்தில் உணவு வழங்கப்பட்டது.[42]

மூன்றும் இராசராசன் காலத்தில் சாத்தன்குடி யைச் சார்ந்த அறிந்தவன் விழுப்பரையனால் வைணவர் களுக்குக் கோயிலில் அமுது படைக்கப்பட்டது.[43] ஜடா வர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் சித்திரை விழாவன்று கோயிலில் பணிபுரியும் மூவருக்கு மூன்று நாட்களுக்கு அமுது படைக்கப்பட்டது.[44] கி.பி. 1460-இல் நரசிங்கமங்கலத்தைச் சேர்ந்த ஒரு அந்தணப் பெண் நான்கு நாட்களுக்குக் கோயிலில் பணிபுரியும் பணியாட்களுக்குத் திருவமுது படைத்தாள்[45] என்று இங்குள்ள கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன,

### தண்ணீர்ப் பந்தல்

கி.பி. 1553-இல் பெரிய மடத்தில் உணவு வழங் கப்பட்ட மக்களுக்கு வீரநாராயணச் சதுர்வேதி மங்க லத்தினைச் சார்ந்த கொறக்கோட்டைச் சொக்கியாரான

தாமோதரப் பட்டனால் தண்ணீர் வழங்கத் தானம் கொடுக்கப்பட்டது[46] என்று கல்வெட்டு ஒன்று குறிப் பிடுகிறது.

## கல்வெட்டில் பட்டினப்பாலை

மாறவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றிய பாடல் ஒன்று சங்க இலக்கிய பட்டினப்பாலை பற்றிய ஒரு புதிய இலக்கிய வரலாற்றுச் செய்தியை நமக்குத் தெரிவிக்கின்றது.[47]

'வெறியார் தளவத்தொடைச் செயமாறன் வெகுண்ட
தொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டி லரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன்செய் பட்டினப்பாலைக்
கன்று
நெறியால் விடுந்தூண் பதினறு மேயங்கு நின்றனவே,[48]

என்பது திருவெள்ளறைப் பாடல் ஆகும்,

கரிகாலன் பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனருக்குப் பதினறு கோடிப் பொன் கொடுத் தான் என்று பட்டினப்பாலையின் அடிக்குறிப்பு கூறு கிறது.

இதை கலிங்கத்துப்பரணி,

'தத்துநீர்வரால் குருமி வென்றதும்
தழவு செந்தமிழ்ப் பரிசல் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்'[49]

என்றும்; சங்கர சோழ உலா,

'பாடிய பாக்கொண்டு பண்டு பதினறு
கோடிப் பசும் பொன் கொடுத்ததும்'[50]

என்றும்; தமிழ்விடுதூது,

'பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாற் பதினறு
கோடிப் பொன் கொண்டது நின்கொற்றமே'[51]

என்றும்; பாண்டி மண்டல சதகம்

"பாட்டொன்று பாடி பதினறிலக்கம் பரிசுபெற்றுத்
தீட்டும் பதினறு நூருயிரம் பொனௌர் செந்தமிழ்க்கு
வேட்டுவளவன் சங்கத்திலேறி வியந்திருந்து"[52]

என்றும் குறிப்பிடுகின்றன. இங்கு உருத்திரங் கண்ணனுக்கு பதினறு கால் மண்டபமும் கொடுத்தது இதுவரை சொல்லப்பெருத புதிய செய்தி. பட்டினப் பாலேக்கும் பதினறு என்ற தொகைக்கும் ஓர் இசைவு இருத்தல் நோக்கத்தக்கது.[53] (பதினறு கோடிப் பொன் —பதினறு கால் மண்டபம்) தமிழ் நிலே பெற்ற தாங்கரு மரபின் மகிழ்நனே மறுகின் மதுரைக் கோமானின் செந் தமிழ்ப் பற்றினேயும், அவன் அமர்த்திறத்தையும் பாராட்டப் புனேயப்பட்ட கற்பனே வளம் கொண்ட ஓர் அழகிய பாடல் என்ற அளவோடு இதனே விடுத்துச் செல்வோம்.

## கல்வெட்டில் குறிப்பிடப்படுவோர்

1. சாத்தன் குடி அறிந்தவன் விழுப்பரையன்[54]
2. உடையார் கவிராஜ சகலவித்யா சக்கர வர்த்தியாயின திரிபுவன கவிச் சக்கரவர்த்தி கள்[55] —ஆலம்பாக்கத்து தலேவன் கற்பக வல்லி வாஜ பேயாஜி[56]

3. மீனவன் மூவேந்த வேளான்.[57]
4. கருமாணிக்காழ்வார்[58]
5. மச்சாழ்வார் அழகியபெருமாள்.[59]
6. திருவெள்ளறை ஜீயர்.[60]
7. அம்பலத்தே மகாராசன் மகன் இராமராச கோனேதியன்.[61]
8. கொறக்கோட்டை சொக்கிவில்லியாரான தாமோதரப்பட்டர்.[62]
9. திருமலே நம்பி.[63]
10. ஏற்மாரெட்டி.[64]
11. பாப்பா ரெட்டி.[65]

---

1 S. R. பாலசுப்பிரமணியம், முற்காலச் சோழர் கலேயும் சிற்பமும் பக். 47
2 M. Raghava Iyengar, Alwargal Kalanilai pp. 109
3 E. S. வரதராச அய்யர், தமிழிலக்கிய வரலாறு பக். 68
4 ARE 539 of 1905/06
5 G. Jouveau-Dubreuil, Pallava Antiquities, vol I
6 K. R. Srinivasan, Temples of South India pp. 52, 58
7 K. V. Subramaniya Iyer, Dantivarman inscription in Tiruvellarai Ep. Indica. vol. XI
8 S.I.I. vol. XII No 32
9 Ep. I. vol XVIII No 14
10 S I.I vol XIX 364
11 மதுரைக்காஞ்சி, வரி 591
12 S.I.I. vol XIII No. 4
13 ARE 539 of 1905-06
14 ARE 536 of 1905/06.

15 ARE 538 of 1905/06.
16 ARE 531 of 1905 ARE 539 of 1905/06.
17 S.I.I. vol. XIX No. 196.
18 ARE 540 of 1905/06.
19 S.I.I. vol. XIX No. 196.
20 S.R. Balasubramanian, Early Chola Temples. vol. II, pp. 62-63.
21 S. R. பாலசுப்பிரமணியம். முற்காலச் சோழர் கலையும், சிற்பமும். பக். 273.
22. Indian Antiquary Vol XXXIV. Pandit Natesa Sastri- Notes on Tiruvellari inscriptions.
23. K. R. Srinivasan 'The Last of the Great Cola temples.' Journal of the Indian Society of oriental Art XVI (1948) pp. 23. சிதம்பரத்தில் உள்ள சிவகாமி அம்மன் கோயிலே தமிழகத்தில் இன்று எஞ்சியுள்ள அம்மன் கோயில்களில் பழைமையான தாகும். திருக்காம கோட்டம் என்றழைக்கப்படும் இவ்வம்மன் தனிக்கோயிலின் பழைமையைத் தமிழ் நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநரும் தமது வெளிவராத 'Tantric cult in Tamilnadu, என்ற ஆய்வுநூலில் வலியுறுத்துகிருர்.
24. Archaeological Remains Monuments and Museums. (New Delhi 1964) p. 233.
25. ARE 198 of 1938/39.
26. ARE 199 of 1938/39.
27. ARE 202 of 1938/39.
28. ARE 204 of 1938/39.
29. ARE 207 of 1938/39.
30. ARE 200 of 1938/39.
31. ARE 198 of 1938/39.
32. ARE 209 of 1938/39.
33. ARE 200 of 1938/39.
34. Ibid.

35. ARE 207 of 1938/39.
36. ARE 208 of 1938/39.
37. ARE 211 of 1938/39.
38. ARE 207 of 1938/39.
39. ARE 212 of 1938/39.
40. ARE 206 of 1938/39.
41. ARE 207 of 1938/39.
42. ARE 208 of 1938/39.
43 ARE 210 of 1938/39.
44. ARE 211 of 1938/39.
45. ARE 205 of 1938/39.
46. ARE 212 of 1938/39.
47. ARE 197 of 1938/39.
48. மயிலை சீனிவேங்கடசாமி, தமிழ்ச் சாசனச் செய்யுள் மஞ்சரி.
49. கலிங்கத்துப்பரணி—இராசபாரம்பரியம்-21.
50. சங்கரசோழன் உலா-10.
51. தமிழ்விடு தூது-193.
52. பாண்டிமண்டல சதகம்-93.
53. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. செந்தமிழ்த் தொகுதி Vol. 41. p. 214-216.
54. ARE 210 of 1938/39.
55. ARE 207 of 1938/39.
56. AEE 208 of 1938/39.
57. ARE 194 of 1938/39.
58. ARE 201 of 1938/39.
59. ARE 198 of 1938/39.
60. ARE 206 of 1938/39.
61. ARE 206 of 1938/39.
62. ARE 212 of 1938/39.
63. ARE 209 of 1938/39.
64. ARE 202 of 1938/39.
65. ARE 202 of 1938[39.

# வடஜம்புநாதர் கோயில்

ஊருக்குக் கீழ்புறம் பெருவழியின் மேல்புறம் ஒரு பெரும்பாறையின் மேல் இச்சிவன்கோயில் அமைந்துள்ளது. இதனைத் தற்போது வடஜம்புநாதர் கோயில் என்றே அழைக்கின்றனர். மேல்புறம் பார்த்து அமைந்த இக்குடைவரையின் முன்புறம் ஒரு மண்டபமும் அதனை அடுத்து முருகன் கோயில் ஒன்றும் அகிலாண்டேஸ்வரி அம்மன் கோயிலும் உள்ளன. இவற்றை அடக்கிச் சுற்றிலும் 'ப' வடிவத்தில் ஒரு சுவர் எடுக்கப்பட்டுள்ளது. முன் மண்டபத்திலும் இதன் முன்னுள்ள பாறையின் மீதும் பழங்காலத்துக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

## புராணம்

இக்கோயில் எழுந்ததுபற்றி இரண்டு புராணக் கதைகள் கூறப்படுகின்றன. ஜம்புமகாமுனிவர் திருவானைக்காலில் உள்ள இறைவனை இங்கு வந்து காட்சி கொடுக்கும்படித் தவம்புரிந்தார். இறுதியில் அப்பெருமான் இங்கு வந்து காட்சியளித்தார். அதுமுதல் இக்கோயில் எழுந்தது. அங்கிருக்கின்ற இறைவன், தென்ஜம்புநாதர் என்றும், இங்கிருக்கின்ற இறைவன் வடஜம்புநாதர் என்றும் பெயரிட்டு அழைக்கப்பட்டனர். இக்கோயிலும் வடஜம்புநாதர் கோயில் என்று பெயரிடப்பட்டது என்பர்.[2] திருவானைக்காக்

கோயிலில் வழிபட்டுப் பரகதி அடைந்த யானை முன்னர் இங்குள்ள வனத்தில் வாழ்ந்து வந்தது. நாள்தோறும் இங்கிருந்து சென்று வடகாவிரியைக் கடந்து இறைவனை வணங்கி வந்தது. ஒருநாள் வடகாவிரியை இது கடக்கவியலாது வெள்ளம் பெருகி ஓடியது. அன்று இறைவனைக் கண்டு தொழாத வருத்தத்துடன் இப்போது கோயில் இருக்கும் பாறையின் மீது வந்து படுத்துவிட்டது. யானையின் வருத்தத்தைக் கண்ட இறைவன் அன்று இங்கு வந்து அதற்குக் காட்சி கொடுத்தார். அதுமுதல் இக்கோயில் எழுந்தது. கோயிலுக்கு திருவானைக்கல்லுடைய பெருமாள் கோயில் என்ற பெயரும் வந்தது என்பர்.

### காலம்

குடைவரையில் கல்வெட்டுக்கள் காணப்படாமையால் இது எக்காலத்தில் எடுக்கப்பட்டது என்று திட்டவட்டமாகச் சொல்வதற்குச் சான்றுகள் இல்லை. குடைவரை கட்டிடக்கலையில் மிகச் சிறந்ததாகக் காணப்படவில்லை. எளிமையாக அமைக்கப்பட்டிருக்கின்றது. தந்திவர்மன் காலத்தில் எடுக்கப்பட்டிருக்கலாம் என்பர்.[1] குடைவரையின் எதிர்ப்புறம் உள்ள பாறையின் மீதுள்ள கல்வெட்டுக்கள் இக்குடைவரையைப் பற்றி எழுந்தவையாய் இருக்கின்றன. இவற்றில் கோமாறஞ் சடையனின் கல்வெட்டே பழைமையானதாகக் காணப்படுகின்றது.[2] மேலும் பல கல்வெட்டுக்கள் அம்மன் கோயிலுக்கடியில் கிடக்கின்றன. அவை பற்றி அறிந்தால் இக்குடைவரை எப்போது எழுந்தது என்று தெளிவாகக் குறிப்

பிடலாம். எப்படியிருப்பினும் இக்குடைவரை மாறஞ்சடையனின் சமகாலத்தவனுன தந்திவர்மன் காலத்திலாவது அல்லது அதற்கு சற்று முன்னராவது குடையப்பட்டது என்று துணிந்து கூறலாம். இக் குடைவரை யாரால் தோற்றுவிக்கப்பட்டது என்று கல்வெட்டால் அறிய முடியவில்லை. இது முத்தரையர் பாணியைச் சார்ந்தது. முத்தரையரால் தோற்றுவிக்கப் பட்டது என்பர்.[3]

குடைவரைக்கு முன்புள்ள மண்டபம் முற்காலச் சோழர்கள் காலத்தில் எடுக்கப்பட்டதாகும். இதன் வெளிச் சுவர்களில் பண்டைச் சோழர்களது கல்வெட்டுக் கள் காணப்படுகின்றன. இவற்றில் தொன்மையானது முதல் ஆதித்தனின் இரண்டாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டு ஆகும். இதனுல் இவ்வாதித்தன் காலத்திலாவது அல்லது முன்னராவது இம்மண்டபம் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். இம்மண்டபத்திற்கு முன்னுள்ள அகிலாண் டேஸ்வரி முருகன் சிற்ருலயங்கள் மிகவும் பிற்பட்ட காலத்தில் எழுந்தவையாகும்.

இக்கோயிலின் பழம் பெயர் 'திருவானைக்கல் பெருமானடிகள் கோயில்' என்பதாகும். பராந்தகன் காலத்தில் இக்கோயில் மிகவும் சிறப்புற்று விளங்கியது. விக்கிரசோழன் காலத்திற்குப் பிறகு சிறப்பிழந்து விட்டது. அவனுக்குப் பின்னர் வந்த அரசர்கள் கல்வெட்டுக்கள் இங்கு காணப்படவில்லை

### குடைவரையின் அமைப்பு

மேற்குப் பார்த்த இக்கோயில் குடைவரையின் நடுவில் சற்றுபெரிய கருவறையும் பக்கத்திற்கு இரண்

டாக நான்கு கருவறைகளும் உள்ளன. இவை அளவில் ஒத்தவையாய் காணப்படவில்லை. குடைவரை 120செ.மீ. அகலமும், 337 செ. மீ. நீளமும், 94 செ. மீ. உயரமும் கொண்டுள்ளது. முன்புறத்தில் 22 செ. மீ. அகலமும், 94 செ. மீ. உயரமும் கொண்ட நான்கு முழுத் தூண் களும் இரண்டு அரைத் தூண்களும் காணப்படுகின்றன. தூண்கள் மேலும் கீழும் கனசதுரமாய் இடையில் எண் பட்டையாய் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றில் வேலைப் பாடுகள் காணப்படவில்லை. மேலும் மேற் சதுரம் சிறியதாயும் (25 செ. மீ ) கீழ் சதுரம் (34 செ. மீ.) பெரியதாகவும் அமைந்துள்ளன. போதிகை (உயரம் 9 செ.மீ.) சதுரமாய் இருபுறமும் வடிக்கப்பட்டு வளைந்து காணப்படுகின்றன.

கருவறைகள் வடக்கிலிருந்து தெற்காக மேற்குப் பார்த்து அமைந்துள்ளன. வடகோடியில் உள்ள கருவறை நீளம் 32 செ.மீ. உயரம் 69 செ.மீ. அகலம் 19 செ.மீ. கொண்டு விளங்குகின்றது. இதன் உட்சுவரில் சிற்பம் இல்லை. பிற்காலத்துப் பைரவர் சிலை ஒன்று இப்போது இங்கு வைக்கப்பட்டுள்ளது. இதன் தென்புறமுள்ள கருவறையில் பிற்காலத்தில் செய்யப்பட்ட ஜம்பு முனிவரின் சிறிய உருவம் காணப் படுகின்றது. இதன் நீளம் 33 செ.மீ., அகலம் 20 செ.மீ., உயரம் 71 செ.மீ., இதனையடுத்து தென் புறம் சிவன் கருவறை அமைந்துள்ளது. இங்குள்ள லிங்கம் குடைவரையில் சேர்ந்தது (Rock-cut) இல்லை. இதனைப் பிற்காலத்தில் கொண்டு வந்து அமைந் திருக்கலாம். இக்கருவறையின் நீளம் 60 செ.மீ.

உயரம் 66 செ.மீ. அகலம் 66 செ.மீ. உடையதாகக் காணப்படுகின்றது. இதனையடுத்து தென்புறம் உள்ள கருவறை பெருமாளுக்குரியதாகும். இக்குடைவரை குடையப்பட்ட காலத்திலேயே செய்விக்கப்பட்ட நின்ற கோலமுடைய திருமாலின் புடைச் சிற்பம் இங்குள்ளது. இதனைச் செந்தாமரைக்கண்ணன் என்றழைக்கின்றனர். புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலில் உள்ள பெருமாளுக்கும் இப்பெயரே கல்வெட்டில் காணப்படுவது. ஈண்டு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இக் கருவறையின் நீளம் 32 செ.மீ., உயரம் 67½செ.மீ. அகலம் 32 செ.மீ. இதனையடுத்துத் தென்புறம் உயரம், 70 செ.மீ., நீளம் 33 செ.மீ., அகலம் 24 செ.மீ. அளவுகள் கொண்ட கருவறை அமைந்துள்ளது. இது விநாயகர்க்குரியது. இங்குள்ள விநாயகர் புடைச் சிற்பம் குடைவரை குடையப்பட்ட காலத்திலேயே எடுக்கப்பட்டிருக்க வேண்டும்.

இக்குடைவரை சிவன், திருமால், விநாயகர் பிரும்மா, முருகன் என்ற ஐந்து கடவுளர்களுக்கும் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனோ வடபுறமுள்ள கருவறைகளில் பிரும்மாவும் முருகனும் காணப்படவில்லை.

### முன்மண்டபம்

இக்குடைவரைக்கு முன்னர் 210 செ.மீ. அகலமும் 322 செ.மீ. நீளமும் 93 செ.மீ. உயரமும் கொண்டு விளங்குகின்றது. வெளிச்சுவர்களில் முதல் ஆதித்தன், முதல் பராந்தகன், முதல் இராசேந்திரன்

முதலியோரது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. குடைவரை எடுக்கப்பட்ட பின்னர் இது எடுக்கப்பட்டிருக்க வேண்டும். உள்ளே ஆறு அரைத்தூண்களும், 12 முழுத்தூண்களும் (அகலம் 15 செ.மீ., உயரம் 78 செ.மீ.) காணப்படுகின்றன. இவை அடியில் கனசதுரமாயும் இடையில் எண். பட்டையாயும் மேலே கனசதுரமாயும் இருக்கின்றன. கீழ்ச் சதுரம் 27½ செ. மீ.-உம், மேல்ச் சதுரம் 24½ செ. மீ.-உம் உயரமும் கொண்டுள்ளன. மேலே போதிகை காணப்படவில்லை. ஆனால் எல்லாத் தூண் களையும் மூன்று பெரிய உத்திரங்கள் இணைக்கின்றன.

இம்மண்டபத்தில் பிற்காலத்தைச் சார்ந்த நவக் கிரகம், சூரியன், சந்திரன், சண்டி, நாவுக்கரசர், தெக்ஷிணாமூர்த்தி முதலியோரது சிற்பங்கள் வைக்கப் பட்டுள்ளன.

மேல்புறம் வெளியே செல்ல அமைந்துள்ள ஒரே வாயிலை இரண்டு அரைத் தூண்கள் அணி செய்கின்றன. மண்டபத்தின் தென்புறம் ஒன்றும், வடபுறம் ஒன்றும், மேல்புறம் இரண்டுமாக நான்கு தேவகோட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பண்டைச் சோழர் காலத்து அரைத் தூண்கள் அணி செய்கின்றன. மேல்புறம் உள்ள இரண்டு தேவ கோட்டங்களில் பழைய தூவரபாலர்கள் உருவங்கள் நின்றநிலையில் காணப்படுகின்றன. வடபுறம் உள்ள தேவகோட்டத்தில் அழகிய பிரும்மாவின் உருவம் நின்றநிலையில் காணப் படுகின்றது. தென்புறம் உள்ள தேவகோட்டம் வெறு மையாகக் காணப்படுகின்றது.

மண்டபத்தின் அதிட்டானப் பகுதியும், சுவர்ப் பகுதியும் எளிமையாகக் காணப்படுகின்றன. அதிட்டா னத்தில் ஒரு சதுரப்பட்டி மட்டும் காணப்படுகின்றது. சுவரிலும் அழகிய தூண்கள் காணப்படவில்லை. மேலே உள்ள கொடுங்கை, நன்ருக வளைந்து அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றது. இதில் மேல் புறம் நான்கும், தென் புறம் இரண்டும், வடபுறம் நான்குமாக பத்துக் கூடுகள் காணப்படுகின்றன. இவற்றின் உள்ளே அழகிய ஆடவரின் தலைகள் காட்சியளிக்கின்றன. கொடுங்கையில் கூடுகளுக்குக் கீழே அழகிய பூதவரி காணப்படுகின்றது. மேல் புறம் 29-தும் தென்புறம் 15-தும்வடபுறம் 20-தும் ஆக64 பூதகணங்கள் இவற்றில் உள்ளன. தென்மேற்கு மூலையில் மட்டும் ஒரு சிம்மம் காணப்படுகின்றது. வடபுறம் பூதகணங்களுக்கிடையே இரண்டு பறவையின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வரிசையில் ஒரு பூதகணத்திற்குக் குரங்கு முகம் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

முன் மண்டபத்திற்கு முன்னுல் அதனை ஒட்டிக் கிழ்ப்புறம் பார்த்துத் தற்காலத்தில் எடுக்கப்பட்ட முருகன் கோயில் ஒன்று உள்ளது. மண்டபத்திற்கு எதிரே பாறையின் மேல் அகிலாண்டேஸ்வரி ஆலயம் காணப்படுகிறது. இது ஆங்கிலேயர் காலத்தில் கட்டப் பட்டதாக இருக்க வேண்டும். இதற்கும் மண்ட பத்திற்கும் இடையே இரண்டு நந்தி மண்டபங்கள் உள்ளன. பாறையின் மேலுள்ள நந்தி மண்டபத்தில் உள்ள நந்தியின் உருவம் சோழர் காலத்தினைச் சார்ந்தது.

இக்கோயிலுக்கென்று சிற்றாலயங்கள் பழங்காலத்தில் இருந்திருக்க வேண்டும். அவற்றைச் சேர்ந்த பண்டைச் சோழர் சப்தமாதர் தொகுதியும், சந்திர சேகரர் உருவம் ஒன்றும் இங்கு காணப்படுகின்றன. முற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்த உடலற்ற சூரியன் சிலை ஒன்றும், முருகன் சிலை ஒன்றும் இக் கோயிலுக்குத் தென்புறம் கிடக்கின்றன. சோழர் காலத்தினைச் சார்ந்த சேட்டையின் உருவம் ஒன்றும், சண்டியின் உருவம் ஒன்றும் கோயிலின் வடபுறம் காணப்படுகின்றன.

## வழிபாடு

### நித்திய பூசை

காலசந்தி, சாயரட்சை என்று இரண்டு வழிபாடுகள் மட்டும் தற்போது இக்கோயிலில் நடைபெற்று வருகின்றன. இச்சிவன் கோயிலில் குருக்களே பூசனை செய்கின்றனர். திருப்பைஞ்ஞீலியைச் சார்ந்த அய்யர் ஒருவர் தற்போது குருக்களாக இருந்து வருகின்றார். பூசனை எளிமையாக நடைபெறுகின்றது. காலையிலும், மாலையிலும் பொங்கல் படைக்கப்பட்டு நெய்வேத்தனம் செய்யப்படுகின்றது.

### காமிக ஆகமம்

காமிக ஆகமப்படி இங்கு பூசை செய்யப்படுகின்றது. காலையில் சூரியனுக்கு முதலிலும் பிறகு முறையே விநாயகர், சிவன், அம்மன், முருகன், சம்பு, தட்சிணாமூர்த்தி, திருநாவுக்கரசர், செந்தாமரைக்

கண்ணன், நவக்கிரகம், துவாரபாலர், நந்திகேஸ்வரர், பைரவர், சண்டி முதலியோர்க்கு வரிசைப்படியும் பூசை கள் நடைபெறுகின்றன. இதில் மாலையில் ஒரு மாற்றம் காணப்படுகின்றது. மாலையில் சண்டிக்குப் பூசை முடிந்த பின்னர் காவல் தெய்வமான பைரவர்க்கு இறுதிப் பூசை நடத்தப்படுகின்றது. கால சந்தி காலை எட்டு மணிக்குத் தொடங்கி ஒன்பது மணிக்குள் முடிவடைகிறது. சாயரட்சை ஐந்து மணிக்குத் தொடங்கி ஆறு மணிக்குள் முடிவடைகின்றது.

### பணியாட்கள்

இக்காலங்களில் மேளம் வாசிக்க ஒருவரும் நாயனம் வாசிக்க இருவருமாக மூவர் இருக்கின்றனர். இவர்கள் பரம்பரையாக இசைத்தொழிலை மேற் கொண்டு வாழும் மேளக்கார முதலியார் வகுப்பில் வந்தவர்கள். வெள்ளறையிலே வாழ்கின்றார்கள். மேலும் முத்தரையர் குலத்தினைச் சேர்ந்த காவலர் ஒருவரும், திருவலகிடுவாள் ஒருத்தியும் இக்கோயிலில் பணிபுரிகின்றனர்.

### சிறப்புப் பூசைகள்

இக்கோயிலுக்கு வருட உற்சவங்கள் இல்லை. கார்த்திகை மாதத்தில் வரும் நான்கு சோமவாரங் களில் மட்டும் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. இதனை நிறைவேற்ற உபயக்காரர்கள் இருக்கின்றனர். 1961-க்கு முன்பு இக்கோயிலில் சங்கராந்தி, நவராத் திரி, சிவராத்திரி, திருக்கார்த்திகை, பங்குனி உத்தி ரம் முதலிய நாட்களில் சிறப்புப் பூசைகள் செய்யப்

பட்டதாக ஸ்ரீரங்க தேவஸ்தான திட்ட ஏட்டில் காணப்படுகிறது. இத்தேவஸ்தானத்தின் கீழேயே இக் கோயிலும் இருந்து வருகின்றது.

கல்வெட்டுக்கள்

| | | |
|---|---|---|
| 1. | கோமாறன் சடையன் | 13-ஆம் ஆட்சியாண்டு |
| 2. | மூன்றாம் நந்திவர்மன் | தெரியவில்லை |
| 3. | ,, | 6-ஆம் ,, |
| 4. | விஜயாலயன் | 3-ஆம் ,, |
| 5. | ,, | 8-ஆம் ,, |
| 6. | ,, | தெரியவில்லை |
| 7. | முதல் ஆதித்தன் | 2-ஆம் ,, |
| 8. | ,, | 3-ஆம் ,, |
| 9. | ,, | 25-ஆம் ,, |
| 10. | ,, | 30-ஆம் ,, |
| 11. | முதல் பராந்தகன் | 2-ஆம் ,, |
| 12. | ,, | 9-ஆம் ,, |
| 13. | ,, | 11-ஆம் ,, |
| 14. | ,, | 13-ஆம் ,, |
| 15. | ,, | 14-ஆம் ,, |
| 16. | ,, | 15-ஆம் ,, |
| 17. | ,, | 21-ஆம் ,, |
| 18. | ,, | 23-ஆம் ,, |
| 19. | ,, | 30-ஆம் ,, |
| 20. | ,, | 30-ஆம் ,, |
| 21. | ,, | 32-ஆம் ,, |
| 22. | ,, | 36-ஆம் ,, |
| 23. | ,, | 37-ஆம் ,, |

| | | | |
|---|---|---|---|
| 24. | முதல் பராந்தகன் | 39-ஆம் | ஆட்சியாண்டு |
| 25. | ,, | 40-ஆம் | ,, |
| 26. | முதல் இராசராசன் | 11-ஆம் | ,, |
| 27. | முதல் இராசேந்திரன் | 2(4)-ஆம் | ,, |
| 28. | விக்கிரமசோழன் | 14-ஆம் | ,, |
| 29. | ,, | 15-ஆம் | ,, |
| 30. | ,, | 15-ஆம் | ,, |

| | |
|---|---|
| பாண்டியர் | 1 |
| பல்லவர் | 2 |
| சோழர் | 27 |
| | 30 |

| | |
|---|---|
| கோமாறன் சடையன் | 1 |
| மூன்ரும் நந்திவர்மன் | 2 |
| விஜயாலயன் | 3 |
| முதல் ஆதித்தன் | 4 |
| முதல் பராந்தகன் | 15 |
| முதல் இராசராசன் | 1 |
| முதல் இராசேந்திரன் | 1 |
| விக்கிரம சோழன் | 3 |

கல்வெட்டுக்களில்.........

திவந்தங்கள்

நிலம்

தஞ்சைகொண்ட பரகேசரியின் மூன்ருவது ஆட்சியாண்டில் திருவானைக்கல் பெருமானடிகளுக்கு நிருபதுங்கமங்கலத்து 'மீயாறு வாய்த்தலை' என்ற வாய்க்

காலுக்கு மேற்புறம் காற்செய் நிலம் உண்ணுழிகைப் புறமாக விடப்பட்டது. இதைக் கொடுத்தவர் பெயர் தெரியவில்லை.[4] விக்கிரமசோழனின் 14-ஆவது ஆட்சி யாண்டில் திருவானைக்கல் மகாதேவர்க்கு பாண்டிநாடு கொண்டான் என்று பட்டங்கட்டின பெயருடையான் நந்தவனத்திற்காக நிலம் விட்டான்.[4a] இவனது 24-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று ஒரு சிறிய கோயிலுக்கு நிலம் தானமளித்ததைக் குறிக் கின்றது.[5] முதல் இராசேந்திரனின் 24-ஆம் ஆட்சி யாண்டில் கங்கைகொண்ட சோழீஸ்வரம் உடையார் கோயிலுக்கு நிலம் விற்கப்பட்டதை ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது.[6]

## திருவிளக்குகள்

இக்கோயிலுக்கு அதிகம் அளிக்கப்பட்ட கொடை கள் நொந்தாவிளக்குகளாகவே இருக்கின்றன. கோமாறன் சடையனின் 13-ஆவது ஆட்சியாண்டில் அம்மன்னனே தன்னைப் பாண்டிநாட்டு மகாராசரான கோமாறன் சடையன் என்று அழைத்துக் கொண்டு இத் திருவானைக்கற் பெருமானடிகளுக்குஇரவும்பகலும் எரிப் பதற்கு இரண்டு நொந்தா விளக்கிற்காக 120 கழஞ்சுப் பொன்னை அண்ட நாட்டு வேளான் கையில் கொடுத் திருக்கின்றான்.[7] விஜயாலயனின் எட்டாவது ஆட்சி யாண்டில் திருவெள்ளறையைச் சார்ந்த அரையன் தாழி திருநொந்தாவிளக்கு எரிப்பதற்கு முப்பது கழஞ்சுப் பொன் கொடுத்திருக்கின்றான்.[8] இவனே மற்றொரு விளக்கிற்காக முப்பது கழஞ்சுப் பொன் கொடுத்ததாக

ஆட்சியாண்டு சிதைந்து போன கொப்பரகேசரி கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[9]

## முதல் ஆதித்தன்

முதல் ஆதித்தனின் இரண்டாவது ஆட்சி யாண்டில் திருவெள்ளறையைச் சார்ந்த சங்கரப்பாடி மருதந் ஆச்சனுல் திருவானைக்கல்பட்டாரற்கு ஒரு நொந்தா விளக்கு எரிப்பதற்காக இருபத்தைஞ்சு பொன் கொடுக்கப்பட்டது.[10] 25-ஆவது ஆட்சியாண் டில் செம்பியன் மழ நாட்டு வேளானுல் ஸ்ரீ ஆனைக்கல் பெருமானடிகளுக்கு ஒரு நொந்தா விளக்கு எரிப் பதற்காக முப்பது பசுக்கள் விடப்பட்டன.[11]

## முதல் பராந்தகன்

சிதைந்த நிலையிலுள்ள இரண்டாம்ஆட்சியாண்டுக் கல்வெட்டு நொந்தா விளக்கு எரிப்பதற்காக பொன் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது.[12] திருவானைக்கல் பெருமானடிகளுக்கு ஒன்பதாம் ஆட்சியாண்டில் சோழப் பெருமானடிகளுக்கு அதிகாரம் செய்கின்ற பாண்டி நாட்டில் உள்ள கீரனூர் நாட்டுக் குமரன் கோனுல் இருபத்தைஞ்சு கழஞ்சுப் பொன் கொடுக்கப் பட்டது.[13] 11-ஆம் ஆட்சியாண்டில் நொந்தாவிளக்கு ஒன்று எரிப்பதற்குத் திருவெள்ளறை கேசுவன் செ . . .னுல் பொன் கொடுக்கப்பட்டது[14] 13-வது ஆட்சியாண்டில் திருவெள்ளறைச் சாத்துவாய் காரியால் நொந்தா விளக்கு எரிப்பதற்கு முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[15] 14-ஆம் ஆட்சியாண்டில் நாங் கூர் நாட்டுத் தேவதானம் நாங்கூரைச் சேர்ந்த காஞ்சனன் தத்தன் சந்திரசேகரனுல் ஒரு நொந்தா

விளக்கு எரிப்பதற்கு முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[16] 15-ஆம் ஆட்சியாண்டில் திரு வெள்ளறை இத்தியாயின நச்சன்மல்லனுல் ஒரு நொந்தாவிளக்கு எரிப்பதற்கு முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[17] 21-வது ஆட்சியாண்டில் திரு வெள்ளறையைச் சார்ந்த அங்கை வத்திகள் (வாணிகன்) திருவடிக் கேள்வனுல் ஒரு நொந்தாவிளக்கு எரிக்க இருப்பத்தைஞ்சு கழஞ்சுப் பொன் கொடுக்கப் பட்டது.[18]

23-ஆம் ஆட்சியாண்டில் திருவெள்ளறையைச் சார்ந்த திருமால் கேள்வனுல் தொண்ணூறு ஆடுகள் ஒரு நொந்தா விளக்கிற்காக விடப்பட்டன.[19] 30-வது ஆட்சியாண்டில் திருவெள்ளறையைச் சார்ந்த சாத்து வாய் மாதேவன் மணவாட்டிகுவாவன் சேந்தியால் முப் பது கழஞ்சுப் பொன் ஒரு நொந்தா விளக்கு எரிக்கக் கொடுக்கப்பட்டது.[20] 32-ஆவது ஆட்சியாண்டில் திரு வெள்ளறையைச் சார்ந்த ஒழுத்துப்பட்ட காச்சுவன்-சருபேதிவடுகன்சேந்தன் பிராமணி கணத்தான் மாநி யால் ஒரு நொந்தாவிளக்கு எரிக்க முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[21] 36-ஆவது ஆட்சியாண்டில் திருவெள்ளறை மத்தியஸ்தன் கரணத்தான் திருத்தே யத்தால் ஒரு நொந்தாவிளக்கு எரிக்க முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[22]

விக்கிரமசோழன்

இவனது 15-ஆவது ஆட்சியாண்டில் திருவெள் ளறை . . . . கேசவனுல் முப்பது கழஞ்சுப் பொன் ஒரு நொந்தாவிளக்கெரிக்கக் கொடுக்கப்பட்டது.[23]

பராந்தகன் காலத்தில்தான் அதிக நொந்தா விளக்குகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. திருமால் கேள்வன், கேசவன் என்ற வைணவப் பெயருடை யோரும் இச்சிவன் கோயிலுக்கு இரவும் பகலும் நந்தாவிளக்கு எரிக்கப் பொன் கொடுத்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

| | | |
|---|---|---|
| கோமாறன் சடையன் காலம் | 2 | திருவிளக்குகள் |
| விஜயாலயன் காலம் | 2 | ,, |
| முதல் ஆதித்தன் காலம் | 2 | ,, |
| முதல் பராந்தகன் காலம் | 12 | ,, |
| விக்கிரம சோழன் காலம் | 1 | ,, |
| ஆக மொத்தம் | 19 | திருவிளக்குகள் |

பெரும்பாலும் ஒரு விளக்கிற்கு 30 கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டிருக்கின்றது. முதல் ஆதித்தன், முதல் பராந்தகன் காலங்களில் 25 கழஞ்சுப் பொன்னும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. கோமாறன் சடையன் மட்டும் ஒரு விளக்கிற்கு 60 கழஞ்சுப் பொன் வீதம் இரண்டு திருநொந்தாவிளக்கிற்கு 120 கழஞ்சுப் பொன் கொடுத்திருக்கின்றான். பொன் மட்டுமல்லாமல் ஒரு திருவிளக்கெரிக்கத் தொண்ணூறு ஆடுகள் அல்லது முப்பது பசுக்கள் விடப்பட்டிருக்கிறது.

திருவமிர்து

திருவானைக்கல் பெருமானடிகளுக்குத் திருவமுது செய்யவும் பொன் கொடுக்கப்பட்டிருக்கின்றது. முதல்

பராந்தகனின் 30-ஆவது ஆட்சியாண்டில் திருவெள்ள றையைச் சார்ந்த சாத்து(வாய்) குவாவன் சேந்தியால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[24] இந்த 30-ஆவது ஆட்சியாண்டிலேயே உச்சியம்போது அமுது செய்யத் திருவெள்ளறையைச் சார்ந்த சாத்துவாய் சேந்தன்மாதேவன் மணவாட்டி குவாவன் சேந்தியால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது. இவளா லேயே தெப்பகுளத்துக்கும் பத்துக் கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[25] முதல் இராசராசனின் 11-ஆவது ஆட்சியாண்டிலும் ஸ்ரீ ஆனைக்கல் அருளிய பரமேஸ் வரர்க்குத் திருவமுது செய்ய கர்த்தினைச் சேந்தன் வீர சோழனால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப் பட்டது.

### வேதம் ஓத கொடுக்கப்பட்ட கொடைகள்

முதல் ஆதித்தன் காலத்திலும் முதல் பராந்தகன் காலத்திலும் திருவானைக்கல் பெருமானடிகள் கோயிலில் உச்சி வேளையில் வேதம் ஓதப்பட்டது. வேதம் ஓதும் அந்தணர்களுக்கு இந்த உச்சியம் போதில் அமுது படைக்க இருவரது காலங்களிலும் நிவந்தங்கள் விடப் பட்டதாக இங்குள்ள கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

### முதல் ஆதித்தன் காலம்

இவனது மூன்றாவது ஆட்சியாண்டில் திருவானைக் கல் பெருமானடிகள் உச்சயம்போது அமுது செய்யும் போது வேதம் வல்ல ஒரு பிராமணனை ஊட்டுவிக்கத் திருவெள்ளறையைச் சார்ந்த சாத்துவாய் காஞ்சன் தாமோதரனால் எழுபது கழஞ்சுப் பொன் கொடுக்கப்

பட்டது.[27] இப்பொன் வட்டிக்கு விடப்பட்டு அந்த வருவாயிலிருந்து ‘தாலம்’ மூன்றும் ‘வட்டில்’ இரண்டும் வாங்கப்பட்டு அமுது படைக்கப்பட்டது.

பழவரிசி-நாடுரி, நெய்-ஆழாக்கு, பழம்-இரண்டு, காய்கறி, புளிக்கறி, பொரிக்கறி, தயிர்-நாழி, வெற்றிலை-இரண்டு, பாக்கு-இரண்டு

இதேபோன்று 3(0)-ஆவது ஆட்சியாண்டிலும் உறையூர் மணிக் கிராமத்து நா(ராயணன்) நாச்சனால் (எழுப்பதின்) அஞ்சின் கழஞ்சு வேதம்வல்ல ஒரு பிராமணனுக்கு உச்சயம் போது ஊட்டுவிக்க அளிக்கப் பட்டது.[28] பழவரிசி-நா ....; பருப்பு-உழக்கரை; வாழைப்பழம்-இரண்டு; தயிர்-நாழி; அடைகாய்-நான்கு; வெற்றிலை-....; காய்கறியும், புளிக்கறியும், பொரிக்கறியும் அளிக்கப்பட்டன.

முதல் பராந்தகன் காலம்

இவனது 37-ஆவது ஆட்சியாண்டில் திருவெள்ளறையைச் சார்ந்த காஞ்சுவன் கேசவன் தத்தனால் வேதம் வல்ல ஒரு பிராமணனை ஊட்டுவிக்க எழுபது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[25] இக்கல்வெட்டு மிகவும் சிதைந்து காணப்படுவதால் முழுமையாகச் செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. 39-ஆம் ஆட்சியாண்டில் இது போலவே இரு பிராமணரைத் திருவெள்ளறையைச் சார்ந்த காச்சுவன் கேசுவன் துர்க்கன் நூற்று நாற்பது கழஞ்சுப் பொன் கொடுத்து உச்சியம் போது ஊட்டுவிக்கச் செய்தான்.[30] பழவரிசி-

பராந்தகனின் 30-ஆவது ஆட்சியாண்டில் திருவெள்ள றையைச் சார்ந்த சாத்து(வாய்) குவாவன் சேந்தியால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[24] இந்த 30-ஆவது ஆட்சியாண்டிலேயே உச்சியம்போது அமுது செய்யத் திருவெள்ளறையைச் சார்ந்த சாத்துவாய் சேந்தன்மாதேவன் மணவாட்டி குவாவன் சேந்தியால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது. இவளா லேயே தெப்பகுளத்துக்கும் பத்துக் கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[25] முதல் இராசராசனின் 11-ஆவது ஆட்சியாண்டிலும் ஸ்ரீ ஆனைக்கல் அருளிய பரமேஸ் வரர்க்குத் திருவமுது செய்ய கர்த்திணைச் சேந்தன் வீர சோழனால் முப்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப் பட்டது.

### வேதம் ஓத கொடுக்கப்பட்ட கொடைகள்

முதல் ஆதித்தன் காலத்திலும் முதல் பராந்தகன் காலத்திலும் திருவானைக்கல் பெருமானடிகள் கோயிலில் உச்சி வேளையில் வேதம் ஓதப்பட்டது. வேதம் ஓதும் அந்தணர்களுக்கு இந்த உச்சியம் போதில் அமுது படைக்க இருவரது காலங்களிலும் நிவந்தங்கள் விடப் பட்டதாக இங்குள்ள கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

### முதல் ஆதித்தன் காலம்

இவனது மூன்றாவது ஆட்சியாண்டில் திருவானைக் கல் பெருமானடிகள் உச்சயம்போது அமுது செய்யும் போது வேதம் வல்ல ஒரு பிராமணனை ஊட்டுவிக்கத் திருவெள்ளறையைச் சார்ந்த சாத்துவாய் காஞ்சன் தாமோதரனால் எழுபது கழஞ்சுப் பொன் கொடுக்கப்

பட்டது.[27] இப்பொன் வட்டிக்கு விடப்பட்டு அந்த வருவாயிலிருந்து 'தாலம்' மூன்றும் 'வட்டில்' இரண்டும் வாங்கப்பட்டு அமுது படைக்கப்பட்டது.

பழவரிசி-நாடுரி, நெய்-ஆழாக்கு, பழம்-இரண்டு, காய்கறி, புளிக்கறி, பொரிக்கறி, தயிர்-நாழி, வெற்றிலை-இரண்டு, பாக்கு-இரண்டு

இதேபோன்று 3(0)-ஆவது ஆட்சியாண்டிலும் உறையூர் மணிக் கிராமத்து நா(ராயணன்) நாச்சனால் (எழுப்பதின்) அஞ்சின் கழஞ்சு வேதம்வல்ல ஒரு பிராமணனுக்கு உச்சயம் போது ஊட்டுவிக்க அளிக்கப் பட்டது.[28] பழவரிசி-நா ....; பருப்பு-உழக்கரை; வாழைப்பழம்-இரண்டு; தயிர்-நாழி; அடைகாய்-நான்கு; வெற்றிலை-....; காய்கறியும், புளிக்கறியும், பொரிக்கறியும் அளிக்கப்பட்டன.

## முதல் பராந்தகன் காலம்

இவனது 37-ஆவது ஆட்சியாண்டில் திரு வெள்ளறையைச் சார்ந்த காஞ்சுவன் கேசவன் தத்தனால் வேதம் வல்ல ஒரு பிராமணனை ஊட்டுவிக்க எழுபது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.[25] இக்கல்வெட்டு மிகவும் சிதைந்து காணப்படுவதால் முழுமையாகச் செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. 39-ஆம் ஆட்சியாண்டில் இது போலவே இரு பிராமணரைத் திருவெள்ளறையைச் சார்ந்த காச்சுவன் கேசுவன் துர்க்கன் நூற்று நாற்பது கழஞ்சுப் பொன் கொடுத்து உச்சியம் போது ஊட்டுவிக்கச் செய்தான்.[30] பழவரிசி-

முந்நாழி; பருப்பு-உழக்கு; காய்கறி, புளிக்கறி, பொரிக்கறி; வாழைப்பழம்; தயிர்-இரு நாழி; நெய்-ஆழாக்கு; தாலம்-இரண்டு;வட்டில்-இரண்டு கொடுக்கப்பட்டன.

பொதுவாக இருவர் காலங்களிலும் வேதம் ஓதும் ஒரு பிராம்மணனை ஊட்டுவிக்க எழுப்பத்தைந் கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டிருக்கிறது எனத் தெரிய வருகின்றது. பராந்தகன் காலத்தில் ஒரு சமயம் மட்டும் நூற்று நாற்பது கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

## இறைவன் பெயர்

இச்சிவன் கோயில் பெருமான் பெயர் பல விதங்களில் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றது.

1. திருவானைக்கல் பெருமானடிகள்[31]
   (விஜயாலயன் காலம்)
2. திருவானைக்கல் பட்டாரகர்[32]
   (முதல் ஆதித்தன் காலம்)
3. ஸ்ரீ ஆனைக்கல் அருளிய பரமேஸ்வரர்[33]
   (முதல் இராசராசன்)
4. திருவானைக்கல் உடையார்[34]
   (விக்கிரமசோழன்)
5. திருவானைக்கல்லுடைய மகாதேவர்[35]
   (விக்கிரமசோழன்)

## அளவைகள்

1. நாழி
2. உழக்கு

3. திருவெள்ளறைக்கல்
4. திருவெள்ளறைக் காணம்

கொடைகொடுத்தோர் பெயர்கள்

*அரசன்*

1. கோமாறன் சடையன்[36] *(பாண்டியன்)*
2. மாற்பிடுகு இளங்கோவேளான் சாத்தன்[37] *(இருக்குவேள் முத்தரையன்)*

*அதிகாரிகள்*

1. அண்ட நாட்டு வேளான்[38]
இவன் கொடையளிக்கவில்லை. கோமாறன் சடையன் இவன் மூலம் பொன் கொடுத்து விளக்கெரிக்கச் சொல்லியிருக்கின்முன். இதே போன்று இவனைப் பற்றிய கல்வெட்டுக்கள் திருச்சி, திருத்தவத்துறையிலும்[39] திருநெய்த் தானத்திலும் காணப்படுகின்றன.
2. செம்பியன் மழ நாட்டு வேளான்[40]
*(முதல் ஆதித்தன்)*
3. காட்டூர் குமரன்கோன்[41]
*(முதல் பராந்தகன்)*
4. திருவெள்ளறை மத்தியஸ்தன் கரணத்தான் திருத்தேயம்[42]
*(முதல் பராந்தகன்)*
5. கர்த்திணை சேந்தன் வீரசோழன்[43]
*(முதல் இராசராசன்)*

6. பாண்டி நாடு கொண்டான்[44]
(விக்கிரம சோழன் காலம்)

திருவெள்ளறையைச் சார்ந்தோர்

விஜயாலயன் காலம்

1. அரையன் தாழி[45]

முதல் ஆதித்தன் காலம்

1. சாத்துவாய்க் காஞ்சன் தாமோதரன்[46]
2. சங்கரப்பாடி மருதன் ஆச்சன்[47]

முதற் பராந்தகன் காலம்

1. நக்கன் மல்லன்[48]
2. அங்கை (வத்திகள்) வாணிகன் திருவடிக் கேள்வன்[49]
3. சாத்துவாய் குமாரவஞ்சன்[50]
4. சாத்துவாய் காடன்காரி[51]
5. திருமால் கேள்வன் மன் . . .[52]
6. சாத்துவாய் சேந்தன் மாதேவன் மண வாட்டி குவாவன் சேந்தி[53]
7. காச்சுவன் கேசுவன் துர்க்கம்[54]
8. காச்சுவன் சருபேதி வடுகன் சேந்தன்[55]
9. கேசுவன்[56]
10. சாத்துவாய் குவாவன் சேத்தி[57]
11. காச்சுவன் கேசவன் தத்தன்[58]

விக்கிரமசோழன் காலம்

1. கேசுவன்[59]

வேற்றூர்க்காரர்கள்

முதல் ஆதித்தன்

1. உறையூர் மணிக் கிராமத்து நாராயணன் நாச்சன்[60]

முதல் பராந்தகன்

2. நாங்கூர் நாட்டுத் தேவதானம் நாங்கூர் காஞ்சனன் தத்தன் சந்திரசேகரன்[61]

முதல் இராசராசன்

3. கர்த்திணை வேந்தன் வீரசோழன்[62]

பெருங்காவிதிச் சடையன்பள்ளி

பரத்துவாஜ குலத்தின் வழிவந்த தந்திநந்தி என்று குறிப்பிடப்படும் மூன்றும் நந்திவர்மனின் 6-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் பெருங்காவிதிச் சடையன் பள்ளி என்ற சமணப்பள்ளியைப் பற்றிய குறிப்பு ஒன்று வருகின்றது.[63] இதில் அவனி வேந்தன் .... மாற்பிடுகு இளங்கோ வேளான் சாத்தன் என்ற (முத்தரையர்) சிற்றரசன் குறிப்பிடப்படுகின்றான். இவன் தந்திவர்மன் காலத்திலும் வாழ்ந்தவன் ஆவான். இவனுக்கும் வெள்ளறைக் கிணற்றில் குறிப்பிடப் படும்[64] விசையநல்லூழான், கம்பன் அரையன் ஆகிய இருவருக்கும் உள்ள தொடர்பு என்னவென்று தெரியவில்லை.[65]

**சமணமும் முத்தரையரும்**

இம்முத்தரையர் சிற்றரசனே இச்சமண் பள்ளியைத் தோற்றுவித்திருக்க வேண்டும். முத்தரையர்கள் சமணத்தையும் ஆதரித்து வந்திருக்கின்றனர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

> பெருமுத்தரையர் பெரிது வந்தீயும்
> கருணைச் சோறுர்வர் கயவர்–கருணையைச்
> பேருமறியார் நனிவிரும்பு தாளாண்மை
> நீருமமிழ்தாய் விடும்.[66]

என்று நாலடியார் இவர்களைப் பாராட்டுகின்றது. சமணர் பள்ளி ஒன்று செந்தலைக்கருகில் இருந்தது. செந்தலை சமணர்க்குரிய சிறப்பிடமாகவும் திகழ்ந்தது.[67] வெள்ளறையும் ஒரு காலத்தில் சமணர்க்குரிய சிறப்பிடமாகத் திகழ்ந்தது என்பர்.[68]

மேலே குறிப்பிடப்பட்ட பள்ளி இப்போது வெள்ளறையில் காணப்படவில்லை. இன்று சிவன் கோயிலுக்கு மேற்புறம் எதிரே ஒரு சிறிய குன்று உள்ளது. இங்கு ஒரு சிறிய சுனையும் தங்குவதற்கு ஏற்றாற்போல் மலைப்பிளவும் உள்ளது. இங்கு முருகன் வேலினை நட்டு தற்போது முருகன் கோயிலாக்கி உள்ளனர். இதுவே சிவன் கோயில் கல்வெட்டிற் குறிப்பிடப்படும் சமணர் பள்ளியாக இருந்திருக்க வேண்டும்.

---

1. G. Jouveau-Dubreil–Pallavan Antiquities Vol. II pp. II.
2. ARE 88 of 1910.

3. K. R. Srinivasan. Temples of South India, pp. 52, 58.
4. ARE 521 of 1906.
4a. S.I.I. vol. XIX No. 49.
5. ARE 85 of 1910
6. ARE 512 of 1905/06.
7. S.I.I. Vol. XIX No. 12.
8. S.I.I. Vol. XIX No. 202.
9. S.I.I. Vol. XIX No. 444.
10. S,I.I. Vol. XIII No. 4.
11. S.I.I. Vol. XII No. 313.
12. ARE 90 of 1910.
13. S.I.I. Vol. XIX No. 218.
14. ARE 91 of 1910.
15. Indian Antiquary Vol. XXXIV. No. VII.
16. Ibid. No. IV
17. Ibid. No. 1.
18. Ibid. No. III
19. Ibid. VIII.
20. Ibid. No. XI.
21. ARE 82 of 1910.
22. Indian Antiquary Vol. XXXIV No. IV.
23. ARE 87 of 1910.
24. ARE 53 of 1906.
25. ARE 83 of 1910.
26. Indian Antiquary Vol. XXXIV.
27. S.I.I. Vol. XIII No. 27.
28. S.I.I. Vol. XIII No. 28.
29. ARE 86 of 1910.

30. Indian Antiquary Vol. XXXIV. No. XII.
31. S.I.I. Vol. XIX No. 19.
32. S.I.I. Vol. XIII No. 4.
33. ARE 89 of 1910.
34. ARE 85 of 1910.
35. ARE 87 of 1910.
36. S.I.I. vol. XIX No. 12.
37. S I.I. Vol XII No. 14.
38. S.I.I. XIX No. 12.
39. S.I.I. Vol. XIX No. 12 B. I.
40. S.I.I. Vol. XIII No. 313.
41. S.I.I. XIX No. 218.
42. ARE 83 of 1910.
43. Andian Antiquary Vol. XXXIV No. VI.
44. ARE 521 of 1905/06.
45. S.I.I. Vol. XIX No. 202.
46. S.I.I. Vol. XIII No. 27.
47. S.I.I. Vol. XIII No. 4.
48. Indian Antiquary XXXIV No. 1.
49. Ibid No. III.
50. Ibid.
51. Indian Antiquary XXXIV.
52. Ibid. No. VIII.
53. Indian Antiquary Vol. XXXIV.
54. Ibid No. XII.
55. ARE 82 of 1910.
56. ARE 91 of 1910.
57. ARE 53 of 1905/06.

58. ARE 86 of 1910
59. ARE 87 of 1910.
60. S I.I. Vol XII No 28.
61. Indian Antiquary Vol XXXIV. No. 4
62. ARE 82 of 1910
63. S.I.I. Vol XII No. 48.
64. ARE 541 of 1905/06.
65. M. S. Govindasamy, The Role of Feudatories in Pallava History pp. 44.
66. நாலடியார் 200.
67. M. S. Govindasamy, The Role of Feudatories in Pallava History pp. 53.
68. Indian Antiquary Vol. XXXIV. Pandit. Natesa Sastri, Notes on Tiruvellarai inscriptions pp. 264.




# வெள்ளறைக் குளங்கள்

நீலவானத்தையே நம்பி நிற்கும் வெள்ளறைப் பகுதிகளில் கேணியும், குளமும் நிறைய இருப்பதில் வியப்பில்லை. விமா, குச, சகர, புஷ்கல, வராஹ, மணிகர்ணிகா, பத்ம என ஏழு தீர்த்தங்களாகக் கருதப்படும் குளங்களும் திவ்ய, கந்த, க்ஷீர என்ற புஷ்கரணிகள் மூன்றும் இங்கு இருக்கின்றன. குசலன் குளமும், சிங்கர் குளமும், உடையார் குளமும் சக்கர தீர்த்தம் எனப்படும் ஸ்வஸ்திக் கிணறும், வட ஸ்ரீரங்கம் ஸ்வஸ்திக் குளமும், குறிப்பிடத்தக்க நீர்நிலைகளாகத் திருவெள்ளறையில் விளங்குகின்றன.

### குசலன் குளம்

இது ஊருக்குக் கிழக்கே நெடுஞ்சாலைக்குக் கீழ்ப் புறத்தில் அமைந்துள்ளது. சுற்றிலும் படிக்கட்டுகள் காணப்படுகின்றன. அமைப்பில் பெரியது. பங்குனி எட்டாம் திருநாள் அன்று பெருமாள் இங்குள்ள மண்டபத்திலிருந்துதான் குதிரை வாகனத்தில் எழுந்தருளி திருவீதி வலம் வருவார். கோடை காலத்திலும் இக்குளம் வற்றாது விளங்குகின்றது. இதன் கீழ்க்கரையில் பிற்காலச் சோழர் காலத்துச் சேட்டை சிற்பம் ஒன்று காணப்படுகின்றது.

### சிங்கர் குளம்

ஊருக்குத் தெற்கே இரண்டு கி.மீ. தொலைவில்

உள்ளது. பெரிய குளம் இதுவே. பண்டு பெருமாள் தெப்பக்குளமாக விளங்கிற்று. இப்போது பாழடைந்த நிலையில் இடிந்த மைய மண்டபத்துடன் காணப்படு கின்றது. தெப்ப உற்சவம் பண்டு இங்கு நடந்து இன்று நின்று விட்டது. சிவன் கோயிலில் உள்ள பராந்தகன் கல்வெட்டில் குறிக்கப் பெறும் தெப்பக்குளம் இதுவாக இருக்கலாம்.[1] இதன் மேற்குக் கரையில் விஜயநகர காலத்திய திருமால் சிற்பம் ஒன்றும், வேணு கோபாலன் சிலை ஒன்றும் நிற்கின்றன.

## உடையார் குளம்

('வைணவ வரலாற்றில் வெள்ளறை' என்ற பகுதியில் இதன் வரலாறு சொல்லப்பட்டிருக்கின்றது) நாற்புறமும் இடிந்த படிக்கட்டுக்களுடன் பெரியதாக ஊருக்கு வடக்கே உள்ளது. இதன் தென் கரையில் பெருமாள் கோயிலும், வடகரையில் சிவன் கோயிலும் இருந்தமைக்குத் தடையங்கள் காணப்படுகின்றன. குளத்தின் நடுவே முற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்த பெரிய பெருமாள் சிலை ஒன்றும், தலையில்லாத சேட்டையின் உருவம் ஒன்றும் கிடக்கின்றன.

## மாற்பிடுகுப் பெருங்கிணறு

பெரியபெருமாள் கோயிலின் தென் மேற்கு மூலையில் உள்ளது. வைணவர் இதனைச் சக்கரத் தீர்த்தம் என் கின்றனர். ஊரார் 'நாலுமூலைக் கேணி' 'மாமியார் மருமகள் குளம்' என்று அழைக்கின்றனர். இதன் மீது தந்திவர்மன் காலத்துக் கல்வெட்டு ஒன்றும்,[2] பாடல் ஒன்றும்,[2a] ஹோய்சள வீரராமநாதன் கல்வெட்டு

ஒன்றும்[3] காணப்படுகின்றன. இதன் வடிவம் புதுமை யாக இருப்பது இதன் சிறப்புக்களில் ஒன்ருகும்.

தோற்றுவித்தோன்

இவ்வூர்ச் சிவன் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் வரும் 'மாற்பிடுகு இளங்கோ வேளான் சாத்தன்' என்பவனே இக்கிணற்றினைத் தோற்றுவித்தான் என்பாரும் உளர்.[4] இது 'மாற்பிடுகு' என்ற பெயரின் ஒப்புமை மயக்கத்தால் மட்டும் ஏற்பட்ட தவருகும். கிணற்றிலுள்ள தந்திவர்மனின் 5-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, தெளிவாக இதை எடுத்தவன் ஆலம் பாக்கத்து விசையநல்லூழான் தம்பி கம்பன் அரையன் என்று தெரிவிக்கின்றது. கல்வெட்டு, "இதன் பெயர் மார்ப்பிடுகுப் பெருங்கிணறு. தந்திவர்மனின் நான் காவது ஆட்சியாண்டில் தொடங்கி ஐந்தாவது ஆட்சி யாண்டில் முற்றுவித்தான், ஆலம்பாக்கத்து விசைய நல்லூழான் தம்பி கம்பன் அரையன்" என்று குறிப்பிடு கின்றது.

இக்கிணற்றினைத் தொட்ட கம்பன் அரையன் யார்? அவன் எக்குலத்தைச் சார்ந்தவன் என்பதில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. கம்பன் அரையனின் அண்ணன் ஆலம்பாக்கத்து விசையநல்லூழான் என்று கல்வெட்டு குறிப்பிடுவதால் இவன் ஆலம்பாக்கத்தைச் சார்ந்தவனுக இருக்கலாம். ஆலம்பாக்கத்து விசைய நல்லூழான் இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் சிறந்த அரசியல் அதிகாரியாக விளங்கியவன். நந்திவர்மனின் 61-ஆம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட பட்டத்தாள் மங்கலச் செப்பேட்டில் அக்கொடையை நிறைவேற்றிய

ஆணத்தியாகக் குறிப்பிடப் பெறுகின்றான்.[5] இவன் தம்பியும் தந்திவர்மன் காலத்தில் உயர்ந்த அரசியல் அதிகாரியாக விளங்கியிருக்கலாம்.[6] கம்பன் என்பது இயற் பெயராகவும் அரையன் என்பது பட்டங் கட்டின பெயராகவும் இருக்கலாம்.

அடுத்து கம்பன் அரையன், ஆலம்பாக்கத்து விசைய நல்லூழான் இருவரும் முத்தரையர் குலத்தில் வந்தவர்களா என்பதிலும் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவர்களது பெயர்கள் முத்தரையர் குலத்தைச் சார்ந்தவர்கள் என்பதற்குச் சான்றாகத் தோன்றவில்லை. இவர்கள் முத்தரையர்கள் குலத்தினைச் சார்ந்தவர்களாக இல்லாமலும் இருக்கலாம் என்பர்.[7] அரையன் என்று பட்டம் வருவதைக் கொண்டு இவர்கள் முத்தரையர்கள் இல்லையென்று கூறிவிடுவதற்கில்லை. குன்றாண்டார் கோயில் கல்வெட்டில் காணப்படும் பேரதியரையன் என்ற முத்தரையன் அரையன் என்ற பட்டத்துடன் காணப்படுகின்றான். 'செந்தலைக் கல்வெட்டில் முத்தரையர் அரசன் ஒருவன் இளங்கோவதியரையனான மாறன் பரமேஸ்வரன் என்று குறிப்பிடப்படுகின்றான்.[8] மேலும் முத்தரையர் என்பதிலுள்ள 'அரையர்' என்பது அரையன் என்று மாறவும் வழியுள்ளது. செந்தலையிலிருந்து ஆலம்பாக்கம் அதிகத் தொலைவு இல்லை. அங்கும் முத்தரையர் ஆட்சி பரவியிருக்கலாம்.

கிணற்றின் பெயர்

'இக்கிணற்றின் பியர் மார்ப்பிடுகு பெருங் கிணறென்பது' என்று இக்கிணற்றிலுள்ள தந்திவர்மன்

கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[9] 'மாற்பிடுகு' என்பதே 'மார்ப்பிடுகு' என்று கல்வெட்டில் குறிப்பிடப் படுகின்றது. இப்பட்டப்பெயர் எங்கிருந்து வந்தது? எடுத்தவன் பெயரிலும் இல்லை. அக்காலத்துப் பெரு மன்னர் பட்டமா, குறுநில மன்னர் பட்டமா, என்பது ஆராய்தற்குரியது.

மாற்பிடுகு>மால்பிடுகு இதன் பொருள் பேரிடி என்பதாகும். வல்லம் குடைவரைக் கல்வெட்டில் மகேந் திரன் பகாப்பிடுகு என்றழைக்கப்படுகின்றான்[10] கூரம் செப்பேடு முதலாம் பரமேஸ்வரன் பெரும்பிடுகு என்ற பட்டத்துடன் விளங்கினான் என்று குறிப்பிடு கின்றது.[11] இப்பட்டத்தை இவர்களுக்குக் கீழ் சிற்றரசர்களாய் இருந்த செந்தலை முத்தரையர்களும் பூண்டு விளங்கியிருக்கின்றார்கள்.

மாற்பிடுகு என்ற பட்டமோ வரலாற்றில் சில இடங்களுக்கும், சில பெயருக்கும் மட்டுமே அடை மொழியாக சேர்த்து வழங்கப்பட்டுள்ளன. ஆலம் பாக்கத்திலுள்ள ஏரி ஒன்று 'மாற்பிடுகு ஏரி' என்று தந்திவர்மன் காலத்தில் அழைக்கப்பட்டது.[12] முதல் இராசராசனின் தஞ்சைப்பெருவுடையார் கோயில் கல்வெட்டு 'ராசேந்திரசிம்ம வளநாட்டுத் திருவாலி நாட்டு மாற்பிடுகுத் தேவிச் சதுர்வேதி மங்கலம்' என்ற ஊரினைக் குறிப்பிடுகின்றது.[13] புண்ணிய குமரன் என்ற தெலுங்குச் சோழன் 'மாற்பிடுகு' என்ற பட்டத்தினைப் புனைந்து விளங்கி யிருக்கின்றான்.[14] தமிழகத்தைப் பெருத்த மட்டில் இருவர் தான் இப்பட்டத்தைப் புனைந்து விளங்கி

யிருக்கின்றனர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இருவரும் முத்தரையர்களே. ஒருவன் குன்ஞண்டார் கோயில் தந்திவர்மனின் ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் குறிக்கப்படும் மாற்பிடுகு பேரதியரையன்'[15]. மற்ருெருவன் திருவெள்ளறைச் சிவன் கோயில் மூன்ரும் நந்திவர்மனின் 6-ஆம் ஆட்சி யாண்டில் குறிக்கப்பெறும் 'மாற்பிடுகு இளங்கோ வேளான் சாத்தன்[16]. தந்திவர்மனுக்கு மாற்பிடுகு என்ற பட்டப் பெயர் இருந்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் இல்லே.[17]

இந்நிலேயில் பல்லவமன்னன் தந்திவர்மன் பட்டப் பெயரான 'மாற்பிடுகு' என்ற பெயரால் இக்கிணறு தோற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டும்; முத்தரையர்கள் திருவெள்ளறைப் பகுதியில் தொடர்பு கொண்டு இருந்தனர் என்பதற்குச் சான்றுகள் ஏதும் இல்லே[18] என்று மொழிவது பொருத்தமாகப் படவில்லே. தந்திவர்மன் காலத்திலேயே வாழ்ந்த முத்தரையர்கள் அவர்கள் பட்டத்தை, வேறுவிதத்தில் பல்லவர் பட்டத் திலிருந்து பொருள் மாறுபடாத வகையில், அவர்களது தனித்தன்மையை வெளிப்படுத்தும் வகையில் பூண்டு, விளங்கிய பட்டங்களில் 'மாற்பிடுகு' என்பதும் ஒன்ருக இருந்திருக்கலாம். தந்திவர்மன் காலத்திலும் வாழ்ந்த 'மாற்பிடுகு பேரதியரையன்' பெயராலேயே இக்கிணறும் ஆலம் பாக்கத்து 'மாற்பிடுகு ஏரியும்' தோற்றுவிக்கப் பட்டன என்று எண்ணுவதே பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது.

திருவெள்ளறைக்கும் முத்தரையர்க்கும் எவ்வித தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை என்று எளிதில் கூறிவிட முடியாது. செந்தலையில் 'வெள்ளறை வாய்க் கால்' என்ற பெயருள்ள வாய்க்கால் ஒன்றிருந்தது[19]. செந்தலை முத்தரையர் தலைவனான குவாவன்மாறனை நினைவூட்டும் வகையில் வெள்ளறைச் சிவன் கல்வெட்டில் 'குவாவன் சேத்தி' என்ற ஒருவன் காணப்படு கின்றான்.[20] 'மாற்பிடுகு இளங்கோ வேளான் சாத்தன்' என்ற ஒருவனும் இக்கோயில் கல்வெட்டில் குறிப்பிடப் படுகின்றான்.[21] இன்று வெள்ளறையில் அதிகமாக வாழ்வது முத்துராசாக்களே ஆவர். வெள்ளறையின் சுற்றூர்களான திராம்பாளையம், காட்டுக்குளம், கால் வாய்ப்பட்டி, முதலியவற்றிலும் இம்மக்களே அதிகம் வாழ்கின்றனர்.

மேலும் ஒரு கருத்தினை இங்கு கூறிச் செல்வது நம் கருத்திற்கு வலுவூட்டுவதாக உள்ளது. பிற்காலப் பல்லவர்கள் காலத்தில் வாழ்ந்த இம்முத்தரையர்கள் நீர்பாசனத்திற்கு முதலிடம் அளித்து அதற்காக ஏரியும், குளமும், கால்வாயும், மதகும், மக்களது நன்மைக்காகத் தோற்றுவித்திருக்கின்றார்கள்.[22] புதுக்கோட்டைப் பகுதியில் தந்திவர்மனின் 5-ஆம் ஆட்சியாண்டில் வாலி வடுகனான கலிமூர்க்க இளவரையன் 'வாலி ஏரி' என்ற பெயரில் ஒரு ஏரியைத் தோற்றுவித்தான்.[24] ஆட்சி யாண்டு இல்லாத பல்லவர் கல்வெட்டொன்று தமிழதியரையன் என்பவன் நார்த்தாமலைப் பகுதியில் உள்ள ஏரி ஒன்றிற்கு மதகு அமைத்தான் என்று குறிப்பிடுகின்றது.[26] நிற்க.

### நன்றிக்கடன்

கம்பன் அரையன் அனைவருக்கும் பெருமைதந்து இக்கிணற்றினை எடுப்பித்துள்ளான். தன்குலத்துத் தலைவன் பெயரால் இக்கிணற்றிற்கும் பெயரிட்டிருக்கின்றான். கல்வெட்டில் ஆலம்பாக்கத்து விசைய நல்லூழான் தம்பி கம்பன் அரையன் என்று தன் முன்னோன் பெயரையும் கல்வெட்டில் சேர்த்துப் பொறித்துள்ளான். எல்லாவற்றிற்கும் மேலாக தந்திவர்மன் உருவத்தை இக்கிணற்றின் கீழ்ப்புறத்தில் மேலேயுள்ள சிற்பத் தொகுதியில் எடுப்பித்திருக்கின்றான்.

### தந்திவர்மனின் உருவம்

இச்சிற்பத்தொகுதியை மேலோட்டமாகக் கண்டவர்கள், நரசிம்மர் நடுவே வீற்றிருக்க வடபுறம் பிரமனும் தென்புறம் சிவனும் அமர்ந்திருக்கின்றனர்; இருபுறமும் சூரிய சந்திரர்கள் பறந்துவரும் காட்சி செதுக்கப்பட்டிருக்கின்றது என்று கூறிவிடுவர். இச்சிற்பங்களைச் சற்று ஆழ்ந்து நோக்கினால் கீழ்புறம் உள்ள உருவம் சிவன் இல்லை என்பது புலனாகும். இரண்டு கரங்களோடு வலக்கரத்தால் நரசிம்மமூர்த்தியைப் பரவிக்கொண்டிருக்கும் அவ்வுருவம் தந்திவர்மனாக இருக்கலாம். அகன்றமார்பு, தலையில் மணிமுடி, மார்பில் தடித்த யக்ஞோபவீதம், இவையெல்லாம் மாமல்லபுரத்தில் செதுக்கப்பட்டிருக்கும் பல்லவ மன்னர்களின் வழிவந்த ஒரு பல்லவனையே நினைவூட்டுகின்றன. தந்திவர்மன் சிறந்த வைணவன்.[27] ஆதலின் இங்கு நரசிம்மரைப் பரவிக் கொண்டிருக்கின்றான். திருமங்கையாழ்வார்

இவன் காலத்திலும் வாழ்ந்தவர்.[28] தந்திவர்மனது 16-ஆவது ஆட்சியாண்டில் குவாவன் சாத்தன் என்ற முத்தரையர் தலைவன் திருவாலந்துார் மலையைக் குடைந்து திருமாலை எழுந்தருளச் செய்திருக் கிறான்.[29] தந்திவர்மன் சச்சிபரமேஸ்வர விண்ண கரத்திற்குப் பொற்குடம் ஒன்றை அளித்திருக் கின்றான்.[30] திருவெள்ளறைப் பழைய பெருமாள் குடை வரையில் கிருஷ்ணன்-ருக்மணி உருவங்களைப் பிர திஷ்டை செய்திருக்கின்றான்[31] என்பதையெல்லாம் ஈண்டு நினைவுகூர்தல் பொருத்தமுடைத்தாகும்.

## கம்பன் அரையன் உருவம்?

தந்திவர்மன் இருக்கும் சிற்பத் தொகுதிக்குக் கீழே காணப்படும் கற்பட்டையில் உள்ள உருவங்கள் தெளிவாகத் தெரியாவிடிலும் ஓரளவு அடையாங் கண்டு கொள்ளும் அளவில் அமைந்துள்ளன. நடுவில் பெருமிதம் தோன்ற தலைவன் ஒருவன் காணப் படுகின்றான். அவனது வடபுறத்தில், அடுத்து பெண் ணொருத்தி அவனை நோக்கித் தலை சாய்த்து நிற்கின்றாள். அவளை அடுத்து யானை ஒன்று நிற்கின்றது. தலைவனின் இடப்புறம் குதிரை வீரன் ஒருவன் வலது தோளில் குடம் ஒன்றினைத் தாங்கிக் கொண்டு நிற்கின்றான். அவனை அடுத்துத் தென்புறம் குதிரை ஒன்று நிற்கின்றது. நடுவிலுள்ள தலைவனின் உருவம் கம்பன் அரையனின் உருவமாக இருக்கும் என்று எண்ண இடமுண்டு. அவனது யானை வலப்புறத்தில் நிற்கிறது. அவனுக்கு நீராடத் துணை புரியும் அவனது வீரன் குதிரையுடன் குடத்தை ஏந்திக் கொண்டு நிற்கின்றான்.

வலப்புறம் இருப்பது அவனது பணிப் பெண்ணுகவோ அல்லது மனைவியாகவோ இருக்கலாம். இவ்வுருவங்கள் மன்னனுக்கு மதிப்பளிப்பது போன்று தந்திவர்மன் இருக்கும் கற்பட்டைக்கும் கீழே அமைக்கப்பட்டிருக்கும் பொருத்தத்தையும் ஈண்டு குறிப்பிட வேண்டும்.

### கிணற்றின் அமைப்பு

இன்று 'ஸ்வஸ்திகம்' என்று அழைக்கப்படும் வடிவத்தில் இக்கிணற்றின் அமைப்பு காணப் படுகின்றது. இந்த அமைப்புடன் இக்கிணறு காணப் படுவது இதன் சிறப்புக்களுள் ஒன்று என்று தொடக்கத் திலேயே சொன்னேம். திட்டமிட்டே கம்பன் அரையன் இவ்வடிவத்தை தேர்ந்தெடுத்துக் கிணற்றை அமைத் திருக்கின்ருன். இதனை நோக்க நோக்கப் புதுமைகள் புலப்பட்டுக் கொண்டே இருக்கின்றன.

### ஸ்வஸ்திகம்

இக்குறியீடு இடப்பட்டுள்ள பதினைந்து முத்திரை கள் சிந்து வெளியில் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.[32] பெர்சியா, சுமேரியா முதலிய பழைய நகரங்கள் நிலவிய இடங்களிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.[33] இந்தியாவில் 'பஞ்மார்க்' காசுகளிலும் சாதவாகனர் காசுகளிலும் இக்குறியீடு காணப்படுகின்றது.[34] தென் னிந்தியாவில் குன்னத்தூர், கூர்க், கோவை முதலிய இடங்களில் காணப்பட்ட பெருங்கற்சின்னங்களிலும் பானை ஓடுகளிலும் இக்குறியீடுகள் காணப்படுகின்றன.[35] புகாரில் கிடைத்த தமிழ் நாட்டுக் காசுகளிலும் இக்

குறியீடுகள் காணப்படுகின்றன.[36] ஹிட்லரின் சின்ன மாகக் கூட இது விளங்கிற்று.

உலகெங்கும் காணப்படும் இக்குறியீட்டிற்குப் பல பொருள்கள் சொல்லப்படுகின்றன. இது இந்துக்கள், பௌத்தர்கள், சமணர்கள் ஆகியோரின் புனிதச் சின்ன மாக இருந்து வருகின்றது. பண்டைய உலகில் சூரிய னைக் குறித்தது. இக்குறியீடு வலப்புறமாக வளைந் திருந்தால் ஆண் தன்மையையும் (விநாயகர்) இடது புறமாக வளைந்துசென்றால் பெண் தன்மையையும் (காளி குறிக்கும்.[37] இவற்றில் முன்னது தோற்றத்தையும் பின்னது அழிவையும் குறிக்கும்.[38] சூரியன் எழுவதை யும், மறைவதையும் குறிக்கும். நால்வருணத்தையும், பால்புணர்ச்சியினையும் குறிக்கும் என்பர்.[39] இந்துக்கள் இக்குறியீட்டை பெரும்பாலும் விநாயகரைக் குறிக்கவே பயன்படுத்தி வருகின்றனர். இவ்விநாயகர் பல்லவன் காலத்தின் இறுதியில் பாசனக் கடவுளாக மாற்றப் பட்டார். திருப்பரங்குன்றத்தில் உள்ள விநாயகரே இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இப்பரங் குன்று விநாயகர் காலத்தினைச் சார்ந்த குடிநீருக் காகவும், தேவதான நிலத்திற்காகவும் தோற்று விக்கப்பெற்ற[40] இக்கிணற்றின் அமைப்பினை விநாயகரைக் குறிக்கும் பாசனக் குறியீடு என்று கொண்டால் தவறாகாது. கிணற்றின் பக்கங்களும் ஆண் தன்மையை (விநாயகர்) குறித்து வலப்புறத்தே வளைந்து செல்வது இக்கருத்திற்கு வலுவூட்டு கிறது.

இனி கிணற்றின் மற்ற அமைப்புகளைக் காண லாம். இன்றைய நிலையில் இக்கிணற்றின் பக்க அளவுகள் ஒன்றுக்கொன்று ஓரளவுதான் பொருந்தி வருகின்றன. ஆரம்பத்தில் இது நன்றாக இருந்து காலப்போக்கில் குழைந்து போயிருக்கலாம். நான்கு பக்கமும் இறங்கிச் செல்வதற்கு ஏறத்தாழ 52 படிகள் காணப்படுகின்றன. இப்படிகளில் ஒவ்வொன்றின் நீளம் 57 செ.மீ. அகலம் 29 செ.மீ கொண்டவை யாய் காணப்படுகின்றன. எல்லா வாயிலின் கீழே யுள்ள இறுதிப்படிகள் அரைவட்ட அமைப்பில் அமைக் கப்பட்டுள்ளன. ஒவ்வொரு புறமும் கீழே உள்ள பத்துப்படிகளுக்கு பல்லவர் காலத்துத் தமிழ் எண்கள் பத்துவரை இடப்பட்டுள்ளன. ஏனோ இவை மேலும் தொடரவில்லை. வடப்பக்க வாயிலிலேயே பத்து எண்களும் முழுமையாக உள்ளன. மற்ற பக்கங்களில் இடையிடையே எண்கள் காணப்படவில்லை. எண்கள் காணாத இப்படிகள் பின்வந்தோரால் மாற்றப்பட்டு குளம் திருத்தம் செய்யப்பட்டுள்ளது என்று எண்ண இடந்தருகின்றது. இவ்வெண்களில் ஒன்று என்றது எண் ‘க’ என்ற குறியீட்டால் குறிக்கப் பெறுமல் ÷ என்ற குறியீட்டால் குறிக்கப்பெற்றிருக்கின்றது.

கிணற்றின் உள்ளே தரையிலிருந்து சுமார் 15 அடி உயரம் வரை நான்கு புறமும் சதுர மதில் நான்கு வாயில்களுக்கும் இடைவெளி விட்டுக் காணப்படு கின்றது. அதற்குமேலே நடந்துசெல்வதற்கு ஏற்றாற் போல் சுற்றிலும் $3\frac{1}{2}$ அடி அளவில் நடைபாதை செல் கின்றது. நடைபாதைக்கும் மேலே பெரிய சுவர்

எழுப்பப்பட்டிருக்கிறது. இதையும் இடையில் ஒரு கற்பட்டி பிரிக்கின்றது. இம் மூன்று பிரிவுகளுக்கும் மேலே சுவற்றின் விளிம்பை அழகான குமுதம் போன்று வடித்த கற்களைக்கொண்டு கூரையாக மூடியிருக்கிருர்கள். இந்த 'ஸ்வஸ்திக அமைப்பில் பக்கங்கள் வலது புறம் நோக்கிச் செல்கின்றன. ஒவ்வொரு படிக்கட்டும் குளத்தோடு முடியும் இடத்திற்கு மேலே பெரிய அளவில் ஒன்றின்மேல் ஒன்ருக இடைவெளி விட்டு மூன்று கற்பத்திகள் செருகப்பட்டு நிற்கின்றன. இவற்றில் கிணறு எடுக்கப்பட்ட காலத்தில் செதுக்கப்பட்ட சிறிய சிற்பங்கள் காணப்படுகின்றன.

கீழ்ப்புறம் (மேலிருந்து கீழாக)

கற்பத்தி ஒன்று: நடுவே யோக நரசிம்மமூர்த்தி, அவரது தென்புறம் தந்திவர்மன், வடபுறம் பிரும்மா. இவர்களையடுத்து இருபுறமும் சூரியன், சந்திரன். அவர்களையடுத்து, இரண்டு சிம்மங்கள். தென்புறம், வடபுறம் திரும்பிக்கொண்டு நிற்கின்றன.

கற்பத்தி இரண்டு; நடுவில் தலைவன் (கம்பன் அரையன்) அவனது தென்புறம் வலது தோளில் குடத்தை வைத்துக்கொண்டு வீரன் ஒருவன் நிற்கின்ருன். அவனது இடது புறம் குதிரை ஒன்று காணப்படுகின்றது. வடபுறம் பெண்ணெருத்தியும், யானை ஒன்றும் நிற்கின்றனர்.

மேல்புறம்: (மேலிருந்து கீழாக)

கற்பத்தி ஒன்று: நடுவில் காளையை வீழ்த்தும் கண்ணன், தென்புறம் அவன் குதிரை அரக்கனை வீழ்த்

தும் காட்சி. வடபுறம் புள்ளின் வாயைப் பிளக்கும் காட்சி. இருபுறமும் பக்கத்திற்கொன்ருக வடபுறமும் தென்புறமுமாக இரண்டு சிம்மங்கள் திரும்பிக் கொண்டு நிற்கின்றன.

கற்பத்தி இரண்டு: நடுவே திருமால், ஸ்ரீதேவி வலப்புறமும் பூதேவி இடப்புறமும் காணப்படுகின் றனர். இருபுறமும் பக்கத்திற்கொருவராக இரண்டு முனிவர்கள் அமர்ந்திருக்கின்றனர். அவர்களையடுத்து இருபுறமும் சூரியனும், சந்திரனும் பறந்து வருகின் றனர்.

தென்புறம் (மேலிருந்து கீழாக)

கற்பத்தி ஒன்று: (கீழ்புறமிருந்து மேல்புற மாக) வீரபத்திரர், பிராமி, மாகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, விநாயகர் வரிசை யாக அமர்ந்திருக்கின்றனர்.

கற்பத்தி இரண்டு: நடுவே துர்க்கை நிற்கின் ருள். மேல்புறம் உள்ள பக்தன் வணங்கிக்கொண்டும் கீழ்ப்புறம் உள்ள பக்தன் தலையை அரிந்துகொண்டும் இருக்கலாம். உருவங்கள் பாசி பிடித்திருப்பதால் நன்ருகத் தெரியவில்லை. தேவியின் கீழ்ப்புறம் மானின் மீது ஒரு பெண்ணும், மேல்புறம் சிம்மத்தின் மீது ஒரு பெண்ணும் தேவியைப் பரவிக்கொண்டிருக் கிருர்கள்.

வடபுறம் (மேலிருந்து கீழ்நோக்கி)

கற்பத்தி ஒன்று: நடுவில் உமாசகிதர், இடப்புறம் இவர்களை மண்டியிட்டு ஒரு பெண் வணங்குகின்றாள். இருபுறமும் சூரியன், சந்திரன் பறந்து வருகின்றார்கள். இவர்களை அடுத்து பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு எருதுகள் மேல்புறம் கீழ்ப்புறமாகத் திரும்பிக் கொண்டு நிற்கின்றன.

கற்பத்தி இரண்டு: நடுவே தட்சிணாமூர்த்தி. இருபுறமும் பக்கத்திருவராக நான்கு முனிவர்கள் அமர்ந்திருக்கின்றார்கள். இதையடுத்து இருபுறமும் சூரியனும் சந்திரனும் பறந்து வருகின்றனர்.

எல்லாப் பக்கத்திலுமுள்ள மூன்றாவது கற்பத்திகள் பாசத்தால் பற்றப்பட்டுள்ளன. அவற்றில் என்ன உள்ளன என்று தெரியவில்லை. தென்புறத்தில் உள்ள கற்பத்தியில் மட்டும் கொஞ்சம் சித்திரவேலைப் பாடுகள் வெளியே தெரிகின்றன. இதுகொண்டு எல்லாப்பக்கத்தின் மூன்றாவது கற்பத்தியிலும் பல்லவர் காலத்து திருவாசியை அமைத்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

வாயில்கள்

கிணற்றுக்குள் அடியெடுத்து வைக்கும் எல்லா வாயில்களின் பக்கங்களிலும் இருபுறமும் இரண்டிரண்டாக நான்கு வாயில்களிலும் எட்டு உருவங்கள் காணப்படுகின்றன. இந்த உருவங்கள் தேய்ந்து சிதைந்து காணப்படுகின்றன. யமன், நிருருதி,

வர்ணன், வாயு, சோமன் அல்லது குபேரன், ஈசானன், இந்திரன், அக்கினி என்ற எட்டுத் திசைக்காவலர் களது உருவங்களாக இவை இருக்கலாம்.

கல்வெட்டுக்கள்

*1.* கிணற்றின் மேல்புறம் தந்திவர்மனின் 5-ஆம் ஆட்சியாண்டுக் (கி. பி. 801) கல்வெட்டு உள்ளது. ஆலம்பாக்கத்து விசைய நல்லூழான் தம்பி கம்பன் அரையன் இக்கிணற்றினே பரத்துவாஜ கோத்திரத் தின் வழிவந்த பல்லவ திலக அரசனுன தந்திவர் மனின் 4வது ஆட்சியாண்டில் தொடங்கி 5ஆம் ஆட்சி யாண்டில் முடித்தான். இதன் பெயர் 'மாற்பிடுகு பெருங்கிணறு'. ஊரின் தென்பகுதியில் உள்ள இத் தென்னூர் பெருங்கிணற்றினே இரட்சிப்பார் இவ்வூர் மூவாயிரத்து எழுநூற்றுவர் என்று இது குறிப்பிடு கின்றது.[41]

2. கிணற்றின் கீழ்புறம் ஹோய்சள வீரராம நாதனின் 25வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு காணப் படுகின்றது.[42] திருவெள்ளறை மகாகிராமத்தின் தெற்குவாசலில் உள்ள இக்குளம் வெள்ளத்திஞல் சீர்குலேந்தது. குடந்தை வாணிகன் சோன் வாரன் உய்யநெறிகாட்டிஞன் நகரத்தார் பக்கல் பணம் பெற்று இக்குளத்தினேத் திருத்தியமைத்தான் என்று இக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

*3.* மேல்புறம் உள்ள கல்வெட்டு மிகவும் அழகிய ஒரு பாடலாகக் காணப்படுகின்றது.

ஸ்ரீ கண்டார் காணுர் வுலகத்தே காதல் செய்து நில்லாதேய்
பண்டேய் பரமன் படைத்தநாள் பார்த்துநின்று நையாதேய்
தண்டார் மூப்புவந்துன்னைத் தளரச்செய்து நில்லாமுன்
உண்டேல் உண்டு மிக்கது உலகறியவைம்மினேய்.

இப்பாடலைப் படிக்கும்போது சமணர்களுடைய நாலடியார் பாடல் ஒன்றினைப் படிப்பது போன்ற உணர்வு ஏற்படுகின்றது.[43] ஆம் சமனர் பாடலைப் படிப்பது போன்ற உணர்வுதான் ஏற்படுகின்றது.

''முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கும் நோயுள–கொன்னே
பரவுமின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து . . . ''[44]

''வாழ்நாள்-உலவாமுன் ஒப்புர வாற்றுமின் யாரும்
நிலவார் நிலமிசை மேல்''[45]

புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை''[46]

''சொல்தளர்ந்து கோல் ஊன்றிச் சோர்ந்த
[நடையினராய்''[47]

''தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூண்டு வீழா''[48]

இந்நாலடியார் வரிகளைப் படித்தவர்க்கு இப்படித்தான் எண்ணத் தோன்றுகிறது. 'சமனர் சமயப் பண்புகள் இப்பாடலில் பொதுளித்தான் நிற்கின்றன. ஆனுல் இது சமணர்க்குரிய பாடல், இக்குளமும் அவர்களது சமய குறியீட்டைக் குறிப்பது, மொத்தத்தில் இக்குளமும் அவர்களுக்குரியதே என்ற முடிவுக்குப் போய்விடக்கூடாது'.

'அன்றறிவாம் என்றெண்ணுது அறஞ்செய்க என்ற குறளில் வள்ளுவர் ஒன்னரை அடியில் வார்த் துத் தந்த கருத்தை இப்பாடல் ஆசிரியன், யாரோ தெரியவில்லே, நான்கடியில் விரித்துத் தந்திருக்கின்ருன். இப்பாடலுக்கு இரண்டு முறையில் பொருள் கூறலாம். *1.* இப்பாடலின் தொடக்கத்திலுள்ள ஸ்ரீ என்பதை மங்கலச்சொல்லாகக் கருதி ஒதுக்கிவிட்டு, இப்போது தான் கண்டோமே அதற்குள் மறைந்து விட்டதே என்று பேசும்படியான நிலேயாமை மிக்க இக்கண்டார் காணுவுலகத்தின்கண் பற்று கொண்டு நில்லாமல்' உனக்காக பரமன் விதித்த முடிவு நாட்களில் அறம் செய்து கொள்வோமே என்று நில்லாமல், இறுதிக் காலத்தில் தண்டுண்றித் தவிக்கச் செய்யும் தள்ளாமை மிக்க காலமும் வந்து எதுவும் செய்ய இயலாது தளர்ந்துபோய் நில்லாமல், உன்னிடம் இருக்குமாளுல் அதை ஒழுங்காகத் துய்த்துவிட்டு எஞ்சியதை இவ்வு லகம் அறியும்படி அறங்களில் போட்டு வையுங்கள் என்பதை இப்பாடலின் திரண்ட பொருளாகக் கூறலாம். 2. ஸ்ரீ என்பதை மங்கலச் சொல்லாகக் கொள்ளாமல் ஸ்ரீவுலகமாகிய வீட்டுவுலகத்தைக் கண்டவர்கள் மீண்டும் வந்து காணமுடியாத இவ்வுலகத்தில் என்று முதலடிக்குப் பொருள் கூறுவது பொருத்தமாகப் படவில்லே.

பல்லவர் காலத்து எழுத்தமைதியைக் கொண்ட இப்பாடல் 'மாற்பிடுகுப் பெருங்கிணறு' தோற்று வித்த காலத்திலேயே பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். கம்பன் அரையன் தான் மட்டும் கேணி தொட்டு

அறஞ்செய்ததோடு நில்லாதேய் பிறரையும் அறஞ் செய்யத் தூண்டி இப்பாடலை இக்கிணற்றில் பொறித் துச் சென்றிருக்கவேண்டும்.

வட ஸ்ரீரங்கம் : (ஸ்வஸ்திக் கிணறு இரண்டு)

உடையார் குளத்திற்குத் தென்கிழக்கே உள்ளது. இடிந்த நிலையில் நாயக்கர் காலத்து மண்டபம் ஒன்று இங்குள்ளது. பங்குனி மாதம் தேர்த்திருவிழாவன்று இங்கு பட்டுநூல்காரர்கள் வந்து தங்கிச் செல்வர். இம் மண்டபத்தினெதிரே மாற்பிடுகுப் பெருங்கிணற்றினைப் போன்றே அமைக்கப்பட்ட 'ஸ்வஸ்திக வடிவக்கேணி' ஒன்று உள்ளது. இது எப்போது தோன்றிற்று என்றறிய இதன்மீது கல்வெட்டுக்கள் காணப்பட வில்லை. வடபுறமும், மேல்புறமும் இடிந்த நிலையில் காணப்படுகின்றன. இது அளவில் மாற்பிடுகுப் பெருங்கிணற்றல் கால் பங்கு இருக்கும். வாயில்களில் கற்பத்தி செருகியிருப்பதும், நுழைவாயில்கள் அமைத் திருப்பதும் மாற்பிடுகுக் கிணற்றினைப் போலவே அமைக்கப்படுகின்றன. சிறிய பிரும்மாவின் புடைச் சிற்பம் ஒன்று இக்கிணற்றின் உள்ளே மேல்புறச் சுவரில் உள்ளது.

---

1. Indian Antiquary vol XXXIV Ins 12
2. ARE 541 of 1905/06

2a. மயிலை. சீனி. வேங்கடசாமி தமிழ்சாசனச் செய்யுள் மஞ்சரி

3. ARE 542 of 1905/06

4. A Topographical list of inscriptions of the Madras Presidency vol. III No 687
5. Epigraphica Indica vol. XVIII No 14
6. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்; கல்வெட்டுக்களால் அறியப்பெறும் உண்மைகள்; பக் 57
7. Minakshi; Administration and Social life under the Pallavas p. 101
8. Epigraphica Indica Vol. XIII p. 139
9. K. V. Subramania Iyer Dantivarman inscription in Tiruvellarai Ep. Indica vol XI
10. S. I. I Vol. VI No 633
11. S.I.I. vol I, p 154
12. S.I.I. vol XIII, No 314; S.I.I vol XIII 222; ARE 712 of 190
13. இரா. நாகசாமி, தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் பக். 112
14. Ep. Report for 1936 p. 56
15. M. S. Govindaswamy; The Role of Feudatories in pallava History pp 44
16. S.I.I. vol XII No 48
17. Ep. Indica Vol. XI Dantivarman inscription in Tiruvellarai
18. S. R. Balasubramaniyam; Early Chola Art; pp. 61
19. S.I I. vol XII No. 187
20. Indian Antiquary vol. XXXIV p. 264
21. ARE 88 of 1910
22. M. S. Govindaswamy, The Role of Feudatories in Pallava History pp 51-52
23. Chronological list of Pudukottai State Inscriptions No. 17
24. Ibid 11
25. Ibid 16
26. S.I.I. vol II p. 515
27. M. Raghava Iyyangar, Alwargal Kala Nilai p 109-112

28. Chronological list of Pudukottai State Inscriptions p.2
29. S.I.I. vol IV No. 34
30. ARE 540 of 1905-06
31. Sir John Marshall-Mohenjo-Daro and the Indus civilization p. 426
32. T. Wilson-Swastika p. IV
33. Sharan M. K., Tribal coins A study, New Delhi 1972
34. V. S. Srivastra;Sunworship in Ancient India (1972) p. 32
35. பூம்புகார், ஆசிரியர் நால்வர்
36. Sir George Birdwood; Old Bewards of the India office London
37. Encyclopaedia of Religion and Ethics vol. IV p. 328
38. T. wilson Swastika p. V
39. Minakshi; Administration and Social life under the Pallavas-pp. 101–102
40. Ep. Indica Vol. XI Dantivarman Inscription in Tiruvellarai
41. ARE 541 of 1906
42. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும் பக் 16
43. நாலடியார், ஈகை பா. 2
44. நாலடியார், யாக்கைநிலையாமை பா. 2
45. Ibid பா. 9
46. நாலடியார் இளமை நிலையாமை பா. 3
47. Ibid 4
48. Ibid.



## திருவெள்ளறையில்
## கிராம தெய்வங்கள்

ஒவ்வொரு ஊரிலும் காணப்பெறும் கிராம தேவதைகளின் வழிபாடே மனிதன் தோன்றிய காலத்திலிருந்து தோன்றி வழங்கிவரும் தொன்மைமிக்க வழிபாடாகும். இயற்கைக்கு அஞ்சிய கிராம மக்கள் அறியாமையால் அவற்றிற்கு எருமை, ஆடு, கோழி என்று பலவற்றைப் பலியிட்டு வணங்கி வருகின்றார்கள்.

மதுரைவீரன், முன்னடியான், கறுப்பன், இருளப்பன், வீரபத்திரன், ஐயனார் என்று பலபெயரிட்டு ஆண் தெய்வங்களை வணங்கினர். பிடாரி, காளி, அங்காளம்மன், செல்லியம்மன், மாரியம்மன் முதலியன இவர்களது சிறப்புமிக்கப் பெண் தெய்வங்களாகும், இத்தாய்த் தெய்வ வழிபாடே வரலாற்றில் ஆண் தெய்வ வழிபாட்டைக் காட்டிலும் பழமையானது ஆகும். ஆலம்பாக்கம், வேளச்சேரி முதலிய இடங்களிலுள்ள செல்லியம்மன் கோயில்களும், திருவக்கரையிலுள்ள வக்கர காளி அம்மன் கோயிலும், பண்டைய பெண்தெய்வக் கோயில்களுக்குச் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன.

வெள்ளறையில் ஐயனார் முதலிய ஆண் தெய்வங்கள் காணப்பட்டாலும் இத்தாய்த்தெய்வ வழிபாடே அதிகமாகக் காணப்படுகிறது.

### வெள்ளறையில் சப்தகன்னியர் வழிபாடு

வெள்ளறையில் பண்டைக் காலத்திலிருந்தே சப்த கன்னியர்கள் வழிபாடு அதிகமாக இருந்து வந்தமைக்குச் சான்றுகள் உள்ளன. தந்திவர்மன் காலத்து 'ஸ்வஸ்திக'க் கிணற்றின் தென்புறம் அவன் காலத்தினைச் சார்ந்த சப்தமாதர் தொகுதி உள்ளது. பண்டைச் சோழர் காலத்தினைச் சார்ந்த சப்தகன்னியர் தொகுதிகள் நான்கு வடஜம்புநாதர் கோயிலின் வெளியேயும், உள்ளேயும் உள்ளன. கிராமதெய்வங்கள் என்ற பெயரில் வேறு பெயர் சூட்டப்பட்ட ஏழு கன்னியர் கோயில்கள் ஐந்து வெள்ளறையில் உள்ளன. ஊருக்குக் கிழக்கே பெருவழிக்குக் கீழ்புறம் ஒன்றுள்ளது. இங்கு பிற்காலத்தினைச் சேர்ந்த வராகி, கௌமாரி, முதலியோரின் உருவங்கள் உள்ளன. சிவன் கோயிலின் வடபுறம் சப்தமாதர் தொகுதி ஒன்று சேட்டை சிலைக்கருகில் உள்ளது. இதே போன்று சிவன் கோயிலுக்குத் தென்மேற்கே இரண்டு உடைந்த சப்தமாதர் தொகுதிகள் வழிபாட்டில் உள்ளன. இத்தொகுதிகளில் காணப்படும் சப்தமாதர் 1. ஐயனர் அல்லது வீரபத்திரன் 2. பிராமி 3. மகேஸ்வரி 4. கௌமாரி 5. வைஷ்ணவி 6. வராகி 7. இந்திராணி 8. விநாயகர் என்று ஸ்வஸ்திக் கிணற்றில் காணப்படுவது போன்று வரிசை எண் பிறழாது காணப்படுகின்றன. சற்றும் மரபு பிறழாத கன்னியர் வழிபாடு வெள்ளறையில் நடந்திருக்கவேண்டும். வேறு ஊர்களுக்குச் சென்றால் இத்துணை அளவு சப்தமாதர் தொகுதிகளைக் காண்பது என்பது அரிதே ஆகும். மேற்கண்டவை தவிர கன்னியர் கோயிலில், செல்லாண்டியம்மன் என்ற

இரண்டு சப்தகன்னியர் கோயிலும் வெள்ளறையில் உள்ளன.

## கன்னிமார் கோயில்

பெரியபெருமாள் கோயிலின் தென் மேற்கு மூலையில் மாற்பிடுகு பெருங்கிணற்றின் மேற்புறத்தில் இது அமைந்துள்ளது. தற்போது பாழடைந்த நிலையில் வழிபாடற்று காணப்படுகிறது. இங்கு ஏழு சிற்றாலயங் களும் ஒரு பலி பீடமும் இருந்தமைக்குத் தடையங்கள் காணப்படுகின்றன. இவற்றில் நான்கு இடிந்த நிலையில் காணப்படுகின்றன. மற்றவற்றில் அடிப் பகுதிகள் (base) மட்டும் காணப்படுகின்றன. தென்கோடியிலும் அதையடுத்து வடமேற்கிலுமுள்ள கட்டிடங்கள் பெரிய தாக உள்ளன. வடமேற்கே உள்ளதில் மூன்று அறை கள் உள்ளன. இவற்றில் தற்போது நாயக்கர் காலத்து வீரர்களின் உருவங்கள் மனைவியரின் உருவங் களுடன் காணப்படுகின்றன. தென்மேற்குக் கோடி யிலுள்ள சிற்றாலயத்தில் பழைய சப்தமாதர் தொகுதி ஒன்று உள்ளது. பிற்காலத்தைச் சேர்ந்த லட்சுமி நரசிம்மர் சிலை ஒன்றும் அமர்ந்த நிலையில் வைஷ்ணவி உருவம் ஒன்றும், பிராமி உருவம் ஒன்றும் உள்ளன. இவ்விரண்டு சிற்றாலயங்களுக்கும் இடையே அடிப்பகுதி மட்டுமுள்ள சிற்றாலயத்தில் விநாயகர் காட்சியளிக் கின்றார்.

இக்கன்னிமார் கோயிலுக்கென்று அமைந்த கிணறு வடமேற்கு மூலையில் உள்ளது. இக்கோயிலைச் சுற்றி இடிந்த சுவர் காணப்படுகின்றது. எதிரே வெளியே

பண்டைச் சோழர் காலத்து நந்தி ஒன்றும், பாழடைந்த பிற்காலத்துக் குளம் ஒன்றும் காணப்படுகின்றன.

இக்கன்னிமார் கோயிலின் வடபுறம் மூன்று சிலைகள் பூமியோடு ஒட்டிக் கிடக்கின்றன. இவை பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த சப்தமாதர்கள் தொகுதியைச் சார்ந்த உருவங்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். மூன்னரை அடி உயரம் உள்ள பிராமி, சாமுண்டி, ஐயனார் முதலிய மூவரின் உருவங்கள் இங்கே அழகுடன் விளங்குகின்றன.

## செல்லாண்டியம்மன் கோயில்

இதுவரை கண்ட சப்தகன்னியர்கள் கோயிலுக்குச் சிகரம் வைத்தாற்போல் செல்லாண்டியம்மன் கோயில் காணப்படுகின்றது. இது பெருமாள் கோயிலுக்கு வடமேற்கே அரைக் கல் தொலைவில் இராஜா தோட்டத்தில் உள்ளது. கருங்கல்லாலான கருவறை அர்த்த மண்டபத்துடன் விளங்குகின்றது. இதைத் தற்போது திருப்பணி செய்து இதன் பழைய வடிவத்தை மாற்றி விட்டார்கள்.

## தொன்மையான சப்தகன்னியர் கோயில்

ஆலம்பாக்கத்திலுள்ள செல்லியம்மன் கோயில் பண்டைச் சோழர் காலத்தில் சப்தமாதர்களுக்கென்று ஏற்பட்டது என்று அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது. இதுவே சப்தமாதர்கள் கோயில் பற்றிக் கிடைத்த பழமையான சான்றாகும். 'இக்கோயிற் சுவரிலுள்ள

கல்வெட்டு ஒன்று இது திருவொற்றியூரான் இராயர்-அலங்காரப்பிரியன் என்பவனல் கட்டப்பட்டதெனவும், இவனே இக்கோயில் செலவுகளுக்காக நிலம் ஒன்றை நிவந்தமாக விட்டான் எனவும் குறிப்பிடுகிறது'. இந்த ஆலம்பாக்கத்து சப்தமாதர் கோயில் தோன்றிய காலத்திலேயே திருவெள்ளறையில் காணப்படும் செல்லாண்டி அம்மன் கோயில் என்றழைக்கப்படும் சபதமாதர் கோயிலும் தோன்றியிருக்கவேண்டும். இதற்குச் சான்ருய் இங்குள்ள பண்டைச் சோழர் காலத்திய சப்தமாதர்களின் உருவங்கள் விளங்குகின்றன. ஐயனர் (உயரம் $32\frac{1}{2}$ செ.மீ. அகலம் 16செ.மீ.) பிராமி (உ. $38\frac{1}{2}$ செ.மீ. அ. 17 செ.மீ.) மகேஸ்வரி (உ. $30\frac{1}{2}$ செ.மீ. அ. 13செ.மீ.) கௌமாரி (உ. $30\frac{3}{4}$ செ.மீ. அ. 17 செ.மீ.) வைஷ்ணவி (உ. 33 செ.மீ. அ. 17செ.மீ.) வாராகி (உ. $32\frac{1}{2}$ செ.மீ. அ. 19 செ.மீ.) இந்திராணி (உ. 34 செ.மீ. அ. 14 செ.மீ.) சாமுண்டி (உ. $28\frac{1}{2}$ செ.மீ. அ. $15\frac{3}{4}$ செ.மீ.) பிள்ளையார் (உ. 36 செ.மீ. அ. 16 செ மீ.) முதலியோரது சிலேகள் முற்காலச் சோழர் சிற்பங்களுக்குரிய பண்புகளுடன் பொலிவோடு விளங்குகின்றன. பழைய கட்டிடம், கல்வெட்டுக்கள் இல்லாமையால் இதன் சிறப்பு வெளியுலகு அறியாது குடத்தில் இட்ட விளக்காக இருக்கிறது.

கருவறையின் மேலே சாலே வடிவில் சுதையால் ஆன புதுப்பிக்கப்பட்ட விமானம் ஒன்றுள்ளது. இதன் நான்கு திக்குகளிலும் நான்கு காவற் பெண்டுகள் காணப்படுகின்றனர். வாயிலின் இருபுறமும் தற்காலத்தில் செய்யப்பட்ட ஒரு துவாரபாலர் உருவ

மும், ஒரு துவாரபாலிகை உருவமும் நிற்கின்றன. வடக்கே பார்த்த இக்கோயிலின் முன்னால் பலிபீடம் ஒன்றுள்ளது.

### வழிபாடு

இக்கோயிலில் பண்டாரம் பூசை செய்கின்றார். இப்போது நித்தியப்படி நின்றுவிட்டது. பெருமாள் கோயிலில் இருந்து திங்கள்தோறும் வாரம் ஒரு நாள் இக்கோயிலுக்கென்று ஒருபடி அரிசி தருகின்றார்கள். மற்றபடி உபயக்காரர்களை நம்பித்தான் வழிபாடுகள் அவ்வப்போது நடைபெற்றுவருகின்றது. இதற்கு இக்கோயிலைச் சுற்றி மூன்று காணி புஞ்சை நிலம் இருக்கிறது. இத்தெய்வத்தை அதிகமாக முத்து ராசாக்களே வணங்குகின்றார்கள். இவர்கள் இக் கோயில் காவலை இலவசமாகத் தருகின்றார்கள்.

### மாசிவிழா

ஆண்டுதோறும் மாசித்திங்களில் 12 நாட்கள் இக்கோயிலில் திருவிழா நடைபெறுகின்றது. திரு வெள்ளறை, பூனம்பாளையம், தீரம்பாளையம், தில்யாம் பட்டி, காலவாய்ப்பட்டி, காட்டுக்குளம், புதுப்பட்டி, தெற்குத்தெரு முதலிய ஊரார் சேர்ந்து இவ்விழாவை நடத்துகின்றார்கள். முதல்நாள் காப்புகட்டு நடை பெறுகிறது. 7-ஆம் நாள் இளங்காப்பு கட்டுதல் நடக்கிறது. முதல்நாளன்று மஞ்சள் கயிறும் இவ் விளங்காப்பு கட்டு நாளில் வெறும் வெள்ளைக் கயிறும் கட்டுகின்றார்கள்.

இடைப்பட்ட நாட்களில் தினமும் ஆடு வெட்டு டன் சிறப்புப் பூசைகள் செய்யப்படுகின்றன. எட்டாம் நாள் சப்ரத்திருவிழா. தெய்வத்தை ஒரு ஓலையில் எழுதி சப்ரத்தில் வைத்து தெய்வம் ஏற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்கின்றார்கள். சப்ரம் பெருமாள் கோயிலை ஒருமுறை வலம் வந்து அதன் தென்மேற்கு மூலையி லுள்ள ஆலமரத்தடியில் கன்னிமார் கோயிலுக்கு வடக்கே வைக்கப்படுகிறது. உடனே இரு ஆட்டுக் குட்டிகளை அறுத்து அவற்றின் குறுதியை சோற்றுடன் கலந்து சட்டியில் போடுகின்றார்கள். அதை நால்வர் சாலப்பட்டி எல்லைக்கு எடுத்துப்போய் அங்கு உடைத்துவிட்டுத் திருப்புகின்றார்கள்.

பன்னிரண்டாவது நாள்வரை பூசைகளுடன் சப்ரம் ஆலமரத்தடியிலேயே இருக்கும். இந்நாட்களில் மாவிளக்கு, சோழி முதலியன பூசையில் படைக்கப் படுகின்றன. இறுதி நாளன்று சப்ரம் கோயிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு விழா முடிவடைகிறது.

### அங்காளம்மன் கோயில்

பெருமாள் கோவிலின் தென்புறம் உள்ளது. பிற்காலத்தில் கட்டப்பட்ட கருவறை, அர்த்தமண்டபம், முன் மண்டபம், மகாமண்டபத்துடன் பெரியதாக இது காணப்படுகின்றது. மருதி, வீரபத்திரன், பேச்சாயி, கருப்பணசாமி, இருளப்பன் என்ற ஐந்து தெய்வங் களுக்கும் மகாமண்டபத்தில் சிற்றாலயங்கள் உள் ளன.

இக்கோயிலுக்குப் பண்டாரமே வழிபாடு செய்கின்றார். காலையில் மட்டும் அரிசிப் பொங்கலைப் படைத்துப் பூசை நடைபெறுகின்றது. ஒரு காணி நிலம் இக்கோயிலுக்கு இருப்பதாகக் கூறுகின்றார்கள். கருவறையில் அங்காளம்மன் கற்சிலை உள்ளது. இக்கோயிலுக்கென்று ஒரு உற்சவ மூர்த்தம் உள்ளது. இதற்கு நான்கு கரங்கள்; மேலிரு கரங்களில் சூலம், பாசம் காணப்படுகின்றன. கபாலமாலை பூணூலாகக் காட்சியளிக்கிறது. வலது கீழ்கரம் அபயத்தில் இருக்கிறது. இடது கீழ்க்கரத்தில் கபாலம் காணப்படுகிறது. மார்பில் நாகபந்தம் காணப்படுகின்றது. இது நாயக்கர் காலத்ததாக இருக்கலாம். சிறிது காலத்திற்கு முன்பாக சிவன்ராத்திரி அன்று இவ்வுருவத்தை ஊர் வலமாக பாரிவேட்டைக் குளத்திற்கு எடுத்துச் சென்று விழாக்கள் நடத்தினர் என்று இப்பகுதியில் வாழும் மக்கள் கூறுகின்றார்கள்.

---

1. K. R. Srinivasan-Some aspects of religion as revealed by early monuments and Literature of the South.
2. S. R. பாலசுப்பிரமணியம்; முற்காலச் சோழர்கலையும் சிற்பமும் பக். 92.

<★>

# திருவெள்ளறையில்

# கலைகள்

திருவெள்ளறையில் காணப்படும் கட்டிடம், சிற்பம், ஓவியம் என்ற மூன்று பிரிவுகளை மட்டும் இப்பகுதியில் காணலாம்.

## கட்டிடக் கலை

திருவெள்ளறையில் காணப்படும் கட்டிடக் கலை பற்றி விரிவாக ஆங்காங்கே கூறியிருந்தாலும் அவற்றை ஒரு முறை சுருக்கமாகத் தொகுத்துப் பார்ப்பது நல்லது. பல்லவர் காலத்திலிருந்து தற்காலம் வரை எல்லாக் காலத்தினையும் சார்ந்த கலைப்பாணிகள் வெள்ளறையில் காணப்படுகின்றன.

சிவன் கோயில் குடைவரையும், பெருமாள் கோயில் குடைவரையும், ஸ்வஸ்திக் கிணறும் பல்லவர் காலத்தின் இறுதியில் எழுந்தவை. குடைவரைகள் சிறப்பித்துப் பேசும்படியாக மிகவும் அழகிய முறையில் அமைக்கப் படவில்லை. எளிமை மிக்கதாகவே காணப்படுகின்றன. ஆனால் 'ஸ்வஸ்திக் கிணற்றினை' வியக்கத்தக்க முறையில் அமைத்திருக்கின்றனர். இத்தகைய ஓர் அமைப்பினைத் தமிழ்நாட்டில் காண்பது அரிதாகும். இவற்றின் ஒவ்வொரு பகுதியும் திட்டமிட்டே

அமைக்கப்பட்டிருப்பதாகத் தெரிகின்றது. நான்கு வாயில்கள்; அவற்றின் மேலே கோயில்களில் விமானத்தில் தேவகோட்டங்களை அமைத்து அந்தந்த திசைக்குரிய தெய்வங்களை வைப்பது போன்று கற்பத்தி களில் தெய்வங்கள் செதுக்கப்பட்டுள்ளன. நான்கு வாயில்களின் நுழைவில் எட்டுத் திசைக் காவலர்கள் நிறுத்தப்பட்டுள்ளனர். புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலில் பல்லவர் காலத்தின் இறுதியைச் சார்ந்த சிம்மத் தூண்கள் காணப்படுகின்றன. சிம்மங்கள் அடியில் குந்தியிருக்கும் இத்தூண்கள் தாயார் சன்னதி யையும், சிங்கர் சன்னதியையும் அணி செய்கின்றன.

பண்டைச் சோழர் காலத்தினைச் சேர்ந்த முன் மண்டபம், சிவன் குடைவரையின் முன்னால் அமைக்கப் பட்டுள்ளது. குடைவரையைப் போன்றே இதுவும் எளிமையாகக் காணப்படுகின்றது. இதில் காணப்படும் பூதவரி அழகியது ஆகும். புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலில் பிற்காலச் சோழர் காலத்தினைச் சார்ந்த முதல் திருச்சுற்று மாளிகையும் இக்காலத்திலேயே எடுக்கப்பட்ட திருச்சுற்று மதிள்களும் உள்ளன. மூன்றும் நான்காம் திருச்சுற்று மதிள்கள் இடிந்து போய் தற்காலத்தில் நிறைவு செய்யப்பட்டவை.

புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலில் காணப் படும் மற்ற கட்டிடப் பகுதிகள் பழமையான வடிவத் தைக் குலைத்துச் செய்யப்பட்டவையே ஆகும். இங்குள்ள கணுமண்டபம், அனந்தராய மண்டபம், சேத்தி மண்டபம், நவராத்திரி மண்டபம், ஊஞ்சல்

மண்டபம் முதலியன விஜயநகரத்தார் நாயக்கர் காலத்தில் எழுந்தவையே. மண்டபத் தூண்களில் குடுமியான் மலை மதுரை போன்ற இடங்களில் காணப்படுவது போன்று அழகிய வேலைப்பாடுகள் காணப்படவில்லை வாயிலில் நிறைவுருத அழகிய ஹொய்சளர் கோபுரம் ஒன்று நிற்கிறது. இது முடிவுற்று நின்றிருந்தால் திருவெள்ளறை கட்டிடக்கலையில் இது சிறப்பு மிக்க ஒன்ருக விளங்கி இருக்கும்.

### சிற்பக்கலை

கட்டிடத்தைப் போன்றே பல்லவர் காலத்தின் இறுதியிலிருந்து இக்காலம் வரையுள்ள சிற்பங்கள் வெள்ளறையில் காணப்படுகின்றன. அவற்றில் சிறப்பு மிக்கவையை விளக்கத்துடன் காணலாம்.

### சிவன் கோயில் குடைவரைச் சிற்பங்கள்

செந்தாமரைக் கண்ணன் [திருமால்]: நின்ற கோலத்தில் நடுவிலுள்ள கருவறையை அடுத்து தென் புறத்தேயுள்ள கருவறையில் காணப்படுகின்றது. உயரம் 57 செ.மீ. அகலம் 31 செ.மீ. பல்லவர் காலத்தின் இறுதியைச் சார்ந்தது. கணுக்காலுக்கு மேல் வரை பல்லவர் காலத்திற்குரிய கனத்த ஆடை காணப்படுகின்றது. இடையில் கடி சூத்திரம். மார்பில் பட்டையான புரி நூல். அது வலக்கையின் மேலும் ஓடுகிறது. காதுகளில் குண்டலங்கள். மார்பும் முகமும் தட்டையாய் அகன்று காணப்படுகின்றன. கிரீடமகுடம், நான்கு கரங்கள். கத்திரி முத்திரைக்கு மேல் மேலிருகரங்களில் சக்கரமும் சங்கும் காணப்படுகின்றன. வலது கீழ்க்கரம்

அபயத்திலும் இடது கீழ்க்கரம் கடிவல பீதத்திலும் காணப்படுகின்றன. சங்கு பிரயோக நிலையிலுள்ளது. தோளில் வாகுவலயம் காணப்படுகின்றது. மார்பில் மரு உள்ளது. இத்திருமால் இலக்கியங்களில் பரக்கப் பேசப்பட்டு வந்துகொண்டிருக்கிறார்.

'வலம்புரி பொறித்தமா தாங்கு தடக்கை.....மாஅல்போல
— (முல்லைப்பாட்டு 1–3)

என்று சங்க இலக்கியம் பேசும்.

*பிள்ளையார் :* இதுவும் பல்லவர்களின் இறுதிக் காலத்தினைச் சேர்ந்த புடைச் சிற்பம். இடது காலை மடித்து வலது காலை மடித்துக் குத்திட்டு அமர்ந்த நிலை. காது இரண்டும் விரிந்த நிலையில் காணப் படுகின்றன. மார்பில் பட்டையான புரிநூல். முகம் சிதைந்து தட்டையாய் காணப்படுகின்றது. கழுத்தில் ஆரம். நான்கு கரங்கள். மேல் வலக்கரத்தில் கெட்டி யாக உடைந்த தந்தத்தைப் பற்றியிருக்கிறார். கீழ் வலக்கை மடித்த வலது முழங்காலின் மீதும் கீழ் இடக்கை மடித்துக் குத்திட்ட இடது தொடையின் மீதும் உள்ளன-இடம்புரி விநாயகன்.

கணபதியைப் பல்லவர்களின் முற்காலச் சிற்பங் களில் காணமுடியவில்லை. சப்தமாதருடன் சேர்த்து வடிக்கப்பட்டுள்ள சாளுக்கியருக்குரிய கணபதி இராஜசிம்மன் காலத்தில் தமிழகத்தில் நிலைபெற்றது என்பர்.[1] பிள்ளையார்பட்டியிலுள்ள கணபதி தமிழ கத்திலேயே மிகவும் புகழ் படைத்ததாக விளங்கு கின்றது. அதனை இக்கணபதி நினைவூட்டுகின்றது.

### முன்மண்டபம்

பிரும்மா : வடபுறத் தேவகோட்டத்தில் நின்ற நிலையில் உள்ளது. பண்டைச் சோழர் காலத்தினைச் சேர்ந்தது. அழகு படைத்த உருவம். பீடத்துடன் உயரம் 59 செ.மீ. பீடம் நீங்கலாக உயரம் 49செ.மீ. அகலம் 15 செ.மீ. மூன்று முகம் வெளியே தெரிகிறது. கழுத்தில் பட்டையான அணி, மார்பில் தடித்த பட்டையான புரிநூல். கணுக்கால் மேல்வரை ஆடை. கடிசூத்திரம் காணப்படுகின்றது.

துவாரபாலர் : முன்மண்டபத்தின் இருபுறங்களிலும் நின்ற நிலையில் இரு துவாரபாலகர்கள் காணப்படுகின்றனர்.

### வாயிலின் வடபுறம்

வலக் காலை நன்ருக ஊன்றி, இடக் காலைச் சற்று நெரித்து நின்ற நிலை. எண்ணெய் பூசப்பெற்று உருவம் தெளிவாகத் தெரியவில்லை. இருகரங்கள், வலக் கரம் தர்ஜனி முத்திரையிலும், இடக் கை ஊன்றிய தண்டின் மீதும் காணப்படுகின்றன. மார்பில் தட்டையான யக்ஞோபவீதம். கழுத்தில் பட்டையான ஆரங்கள் காணப்படுகின்றன. இடுப்பில் மட்டும் ஆடையுள்ளது. கடிசூத்திரமும் காணப்படுகின்றது. அகலம் 17 செ.மீ. உயரம் $47\frac{1}{2}$ செ.மீ.

### வாயிலின் தென்புறம்

வலக் காலை ஊன்றி, இடக் காலை வீசி, மடித்து முகத்தை இடப்புறமாகத் திருப்பிய நிலை. இடக்கை

ஊன்றிய தண்டின் மீதும் வலக் கை வில் மையத்திலும் உள்ளன. மற்றவற்றில் வடபுறம் உள்ள துவார பாலரை ஒத்துள்ளது. அகலம் 160 செ.மீ. உயரம் 55 செ.மீ.

பரிவார தெய்வங்கள்

சூரியன் : உடலிழந்த சூரியனின் அழகிய முகம் ஒன்று சிவன் கோயிலின் தென்புறம் கிடக்கின்றது. கரண்ட மகுடம். பொலிவுடன் திகழ்ந்த முகம். இடக் கையிலுள்ள தாமரையின் பகுதி உடைந்து நுனி மட்டும் தெரிகிறது. ஒளி வட்டம் தலைக்குப் பின்னால் காணப்படுகிறது. காலம் 10-ஆம் நூற்றாண்டு.

முருகன் : பின்னப்பட்டு அழிந்த நிலையில் இருக்கும் முருகன் சிலை ஒன்று சிவன் கோயிலுக்குத் தெற்கே வெளியில் காணப்படுகின்றது. தடித்த கண்ணியும் பண்டைச் சோழர் காலத்திற்குரிய உருவ அமைதியுடனும் விளங்குகின்றது. இடையில் தடித்துக் கனத்த ஆடை. இடையில் கடி சூத்திரம் காணப்படுகின்றது. நான்கு கரங்கள் மேலிரு கரங்களில் இருப்பது என்னவென்று அறிய முடியவில்லை. கீழ் வலக்கரம் அபயத்திலும், கீழ் இடக்கரம் கடிவலம்பிதத்தில் காணப்படுகின்றன. உயரம் 33 செ.மீ. அகலம் 16 செ.மீ.

சேட்டை: (சேஷ்டா) சேட்டை வழிபாடு தமிழகத்திற்குரிய தனிச் சிறப்பாக இருந்தாலும் சேட்டையின் சிலைகள் முற்காலப் பல்லவர் பாண்டியர் பணிகளில்

அதிகமாகக் காணப்படவில்லை. முதன்முதலில் காஞ்சி கயிலாசநாதர் கோயிலிலேயே காட்சிக்கு வந்தது. பல்லவர், பாண்டியர், சோழர் சிற்பங்களில் 11-ஆம் நூற்றுண்டு வரை இடம்பெற்றுள். பாண்டியன் மாறன் சடையனின் அமைச்சன் சாத்தன் கணபதியின் மனைவி நக்கன்கொற்றி துர்க்கைக்கும் சேட்டைக்கும் கோயில் எடுத்தாள்.[2] சோழர் காலத்தில் பரிவார தேவதைகளில் ஒன்ருயிற்று. தொண்டரடிப்பொடி யாழ்வார் முதன்முதலில் தமிழிலக்கியத்தில் சேட்டை பற்றி குறிப்பிடுகின்ருர். இவள் நந்திக்கலம்பகத்தில்,

'செய்ய கமலத்திருவுக்கு முன்பிறந்த தையல்'

என்று குறிப்பிடப்படுகின்ருள்.

"முகடி, தௌவை, கலதி, மூதேவி
காக்கைக் கொடியாள் கழுதைவானி சேட்டை
கெடலணங்கு சேட்டை பெயரே"

என்று இவரைப்பற்றி உரைக்கின்றது. சேட்டையின் வலப்பக்கம் அவள் மகன் என்று சொல்லப்படும் சிறுவன் (நந்திகேஸ்வரர்) இருப்பான். அவன் வலக் கையில் குச்சியும் இடக்கையில் பாசமும் இருக்கும் இடப்பக்கம் சேட்டையின் மகள் என்று சொல்லப் படும் அக்கினிமாதா அழகுடன் இளமைப் பொலி வுடன் இருப்பாள். கரண்ட மகுடம், இடக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்திருப்பாள். வலக்கரத்தில் நீலோற்பலம் இருக்கும். இவர்கள் இருவருக்கும் இடையே சரிந்த மார்பகங்கள், தட்டையான வயிறு டைய சேட்டை வலக்கையில் நீலோற்பல மலருடன் அமர்ந்திருப்பாள்.[3]

கையில் மலருடன் விளங்கும் மூன்று சேட்டையின் உருவங்கள் திருவெள்ளறையில் உள்ளன. எல்லாம் சோழர் காலத்தினைச் சார்ந்தவை.

1. சிவன் கோயில் வடபுறம்
2. சிவன் கோயிலின் வடபுறம் சற்றுத் தள்ளி உள்ளது.
3. கன்னிமார் கோயிலின் தென்புறம்.
4. குசலன் குளத்தின் கீழ்புறம்.
5. உடையார் குளம்.

சண்டி

முற்காலச் சோழர் காலத்தினைச் சார்ந்த சண்டியின் சிற்பம் சிவன் கோயில் வடபுறம் காணப்படுகின்றது. சுகாசனம், வலக்கரத்தில் மழு; இடக்கரம் இடது தொடையின் மீது உள்ளது. உயரம் 32 செ.மீ. அகலம் 12 செ.மீ.

சந்திரசேகரர்

கேவலசந்திர சேகரனின் உருவம் சிவன் கோயிலில் முன்மண்டபத்திற்கு எதிரே சுவற்றில் சாற்றி வைக்கப் பட்டிருக்கின்றது. நின்றநிலை; வலக்கரத்தில் மழுவும் இடக்கரத்தில் மானும் காணப்படுகின்றன. இது முற் காலச் சோழர்காலத்தினைச் சார்ந்ததாகும்.

அகிலாண்டேஸ்வரி

முன்மண்டபத்திற்கு எதிரே தனியே சிற்றாலயத்தில் உள்ளது. நாயக்கர் காலத்தின் இறுதியைச்

சார்ந்தது. மேல் இருகரங்களிலும் மலர்கள் உள்ளன வலது கீழ்க்கரம் அபயத்திலும் இடது கீழ்க்கரம் வரதத் திலும் காணப்படுகின்றன. பத்மத்தின் மீது நின்றநிலை. உயரம் 44 செ.மீ. அகலம் 21 செ.மீ.

சப்தமாதர்கள் : கி.பி. 600க்கு 700க்கு மிடையில் சப்தமாதர் சிற்பங்கள் பல்லவர், பாண்டியர் பணிகளில் காணப்படவில்லை. முதன் முதலில் காஞ்சி கயிலாசநாதர் கோயிலில்தான் இடம் பெறுகின்றனர். எட்டாம் நூற்ருண்டைச் சார்ந்த முத்தரையர் குடை வரைக் கோயில்களில் இவர்கள் இடம் பெற்றனர். கி.பி. 903-இல் அபராஜித பல்லவன் காலத்தில் திருத்தணிகை கோயிலில் சப்தமாதர் இருந்தது கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறது. இதன் சிறப்பு ஒவ்வொரு மாதமும் அவர்களது வாகனங்களோடு காணப்பெறுகின்றனர். இராசசிம்மன் காலந்தொடங்கி இரண்டாம் இராசேந்திரன் காலம் வரை சப்தமா தர்கள் கோயிலில் தனியிடம் பெற்றனர். இம்மாதர்கள் வழிபாடு சாளுக்கியர் பகுதியிலிருந்து தமிழகத்திற்கு வந்தது என்பர்.[4]

தந்திவர்ம சதுர்வேதி மங்கலமான ஆலம்பாக்கத் தில் பண்டைச் சோழர் காலத்தில் சப்தமாதர் கோயில் கட்டப்பட்டது.[5] மேலும் செங்கை மாவட் டத்தினைச் சார்ந்த வேளச்சேரியில் சப்தமாதர்களுக்கு கோயில் இருந்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது.

அசுரனை அழிப்பதற்காக பெரிய ஏழு கடவுளர்கள் தங்களது சக்தியை அனுப்பி வைத்தனர். அவர்களே

சப்தமாதர்கள் என்றழைக்கப்பட்டனர். சப்தமாதர்களின் தொகுதியில் இருபுறமும் வீரபத்திரரும், விநாயகரும் இருப்பர். எல்லா சப்தமாதர்களும் இடது காலை மடித்து வலது காலைத் தொங்க விட்டு அமர்ந்திருப்பர். இரண்டு கரங்கள் அபயத்திலும் வரதத்திலும் மற்ற இரண்டு கரங்களில் தொடர்புடைய ஆண் கடவுளரின் ஆயுதங்களும் இருக்கும்.[6]

**பிராமி**

| சூலம் | அக்கமாலை |
|---|---|
| அபயம் | வரதம் |

நான்கு முகங்கள்-வாகனம் அன்னம் - அன்னக்கொடி-கரண்டமகுடம்.

**வைஷ்ணவி**

| சங்கு | சக்கரம் |
|---|---|
| அபயம் | வரதம் |

கருடவாகனம்-கருடக்கொடி-கீரீடமகுடம் இவருக்குரியவை.

**இந்திராணி**

| வச்சிரம் | சக்தி |
|---|---|
| அபயம் | வரதம் |

கிரிடமகுடம்-வாகனமும் கொடியும் யானை.

**சாமுண்டா**

| கபாலம் | சூலம் |
|---|---|
| அபயம் | வரதம் |

பரந்துவிரிந்த சடாபாரம். இவருக்குரியது.

மாகேஸ்வரி

| சூலம் | மான் |
|---|---|
| அபயம் | வரதம் |

ஜடாமகுடம்-வாகனமும் கொடியும் காளை ஆகும்.

கௌமாரி

| சக்தி | வச்சிரம் |
|---|---|
| அபயம் | வரதம் |

வாகனமும் கொடியும் மயில்-நெற்றியில் தடித்த கண்ணி காணப்படும்.

வாராகி

| கலப்பை | சக்தி |
|---|---|
| அபயம் | வரதம் |

வராகமுகம்-கரண்டமகுடம்-வாகனமும் கொடியும் யானை ஆகும்.

இவையே சப்தமாதர்களுக்குரிய அடையாளங்களாக நூல்களில் உரைக்கப்படுகின்றன.

சிவன் கோயிலில் பண்டைச் சோழர் காலத்தினைச் சேர்ந்த சப்தமாதர் தொகுதிகள் காணப்படுகின்றன. மடைப்பள்ளிச் சுவரில் உள்ள தொகுதியில் வாகனமும் காணப்படுகின்றது. இது தவிர சிவன்கோயில் சுவரில் சார்த்திவைக்கப்பட்ட தொகுதி ஒன்றும், வெளியேயுள்ள கோயில் சுவற்றில் இரண்டும் உள்ளன. இவற்றில் வீரபத்திரரும் அடுத்து பிராமி மாகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, இந்திராணி,

சாமுண்டி, விநாயகர் உருவங்கள் வரிசையாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இச்சிற்பங்கள் தவிர சிவன் கோயிலில் பிற்காலத்தினைச் சார்ந்த சிற்பங்களும் உள்ளன.

| | |
|---|---|
| பைரவர் (குடைவரை கருவறை) | |
| சம்பு முனிவர் ,, | ,, |
| தக்ஷிணமூர்த்தி - முன்மண்டபம் | |
| நாவுக்கரசர் | ,, |
| நவக்கிரகம் | ,, |
| சூரியன் | ,, |
| சந்திரன் | ,, |
| சுப்பிரமணியர் | சிற்றாலயம் |
| ஐயனர் 2 | சிவன் கோயிலுக்கு வெளியில் [உள்ளது. |

## செல்லாண்டி அம்மன் கோயில் சிற்பங்கள்

இங்கு பண்டைச் சோழர் காலத்து சப்தமாதர்கள் உருவங்கள் உள்ளன.

ஐயனர்: அமர்ந்த நிலை. நான்கு கரங்கள். மேலிரு கரங்களின் விரல்கள் கெட்டியாக மடிந்துள்ளன. (கையில் ஏதோ பற்றியது போன்ற நிலை) முன் வலக்கை வலது தொடைமேலும் முன் இடக் கை தொடையின் மீதும் உள்ளன. தலையில் விரிந்த ஜடா பாரம் காணப்படுகின்றது. கழுத்தில் பட்டையான

ஆரம். இடையில் ஆடை காணப்படுகின்றது. உயரம் 32½ செ.மீ. அகலம் 16 செ.மீ.

*பிராமி:* வலக்காலை மடித்து இடக்காலை தொங்க விட்டு அமர்ந்த நிலை; எல்லா மாதர்களும் இந்த நிலையிலேயே அமர்ந்திருக்கின்றனர். தலையில் மகுடம்; காதில் பத்திர குண்டலங்கள்; நான்கு கரங்கள்; பின்னிரு மேல் கரங்களின் விரல்கள் கெட்டியாக மடிந்துள்ளன. முன் கீழ் வலக்கை அபயத்திலும் இடது கீழ் கை இடது தொடையின் மீதும் உள்ளன. மார்பில் கச்சை இல்லை. இடையில் ஆடையிருப்பது தெரிகிறது. முகம் பொலிவுடன் வட்டமாகத் திரண்டு இருக்கின்றது. பீடத்துடன் உயரம் 38½ செ.மீ. பீடம் நீங்கலாக 36¾ செ.மீ. அகலம் 17 செ.மீ.

*மகேஸ்வரி:* அமர்ந்த நிலை; தலையில் ஜடாபாரம்; காதுகளில் பத்திர குண்டலங்கள்; முகம் பொலிவுடன் உருண்டு திரண்டு காணப்படுகின்றது. நான்கு கரங்கள்; மேலிரு கரங்கள் எதையோ கெட்டியாகப் பற்றியிருப்பது போன்ற நிலையில் உள்ளன. வலது கீழ்க்கரம் அபயத்திலும் இடது கீழ்க்கரம் இடது தொடையின் மீதும் உள்ளன. மார்பில் கச்சை இல்லை. இடையில் ஆடை காணப்படுகின்றது. பீடத்துடன் உயரம் 30½ செ.மீ, பீடம் நீங்கலாக 23 செ.மீ. அகலம் 13 செ.மீ.

*கௌமாரி:* அமர்ந்த நிலை; உருண்டையாகத் திரண்ட கண்ணி நெற்றியில் காணப்படுகின்றது. காதுகளில் பத்திர குண்டலங்கள்; முகம் தேய்ந்து

உள்ளது. மார்பில் கச்சை இல்லை. மேலிரு கரங்களின் விரல்கள் எதையோ பற்றியிருப்பது போன்று மடிந்துள்ளன. முன் வலக்கை அபயத்திலும் இடக்கை இடது தொடையின் மீதும் உள்ளன. பீடத்துடன் உயரம் $30\frac{1}{2}$ செ.மீ. பீடம் நீங்கலாக 23 செ.மீ. அகலம் 13 செ.மீ.

*வைஷ்ணவி:* அமர்ந்த நிலை; கிரீடமகுடம்; காதில் வளையங்கள்; மார்பில் கச்சை இல்லை. நான்கு கரங்கள்; மேலிரு கரங்களின் விரல்கள் எதையோ பற்றியிருப்பது போன்று மடிந்துள்ளன. முன் வலக்கை அபயத்திலும் இடக்கை இடது தொடையின் மீதும் உள்ளன. பீடத்துடன் 33 செ.மீ. பீடம் நீங்கலாக 25 செ.மீ. அகலம் 17 செ.மீ.

*வாராகி:* அமர்ந்த நிலை; தலையில் மகுடம் காணப்படுகின்றது; வராகமுகம். மேலிரு கரங்களின் விரல்கள் எதையோ பற்றியிருப்பது போன்று மடிந்துள்ளன. வலது முன் கரம் அபயத்திலும் இடது முன் கரம் இடது தொடையின் மீதும் உள்ளன. மார்பில் கச்சை இல்லை. இடையில் ஆடையுள்ளது. பீடத்துடன் உயரம் $32\frac{1}{2}$ செ.மீ. பீடம் நீங்கலாக $25\frac{3}{4}$ செ.மீ. அகலம் $13\frac{1}{2}$ செ.மீ.

*இந்திராணி:* அமர்ந்த நிலை; கிரீடமகுடம்; காதுகளில் குண்டலங்கள் காணப்படுகின்றன. மேலிரு கரங்களின் விரல்கள் எதையோ பற்றியிருப்பது போன்று மடிந்துள்ளன. பின் வலக்கை அபயத்திலும் முன் இடக்கரம் இடது தொடையின் மீதும் உள்ளன.

இடையில் ஆடையும் கழுத்தில் ஆரமும் காணப் படுகின்றன. பீடத்துடன் உயரம் 34 செ.மீ. பீடம் நீங்கலாக $24\frac{3}{4}$ செ.மீ. அகலம் 14 செ.மீ.

சாமுண்டி: அமர்ந்த நிலை; தலையில் பரந்த ஜடா பாரம்; நான்கு கரங்கள்; மேலிரு கரங்களின் விரல்கள் எதையோ பற்றியிருப்பது போன்று மடிந்துள்ளன. முன் வலக்கை அபயத்திலும் முன் இடக்கை இடது தொடையின் மீதும் உள்ளன. மார்பில் கச்சை இல்லை. இடையில் ஆடையுள்ளது. பீடத்துடன் உயரம் $28\frac{1}{2}$ செ.மீ. பீடம் நீங்கலாக 24 செ.மீ. அகலம் $15\frac{3}{4}$ செ.மீ.

பிள்ளையார்: வலக்காலைக் குத்திட்டு இடது காலை மடித்துச் 'சப்பென்று' அமர்ந்த நிலை; காதுகள் இரண்டும் விரிந்துள்ளன; இடம்புரி விநாயகர்; மகுடம் உள்ளது. மேலிரு கரங்களின் நிலை சப்தமாதர்கள் போன்றே உள்ளது. இடது கீழ்க்கரம் இடது தொடையின் மீதும், வலது கீழ்க்கரம் ஆகுயவரதத் திலும் உள்ளன. உருவம் தேய்ந்து போய் காணப் படுகின்றது. பீடத்துடன் 36 செ.மீ. நீங்கலாக 26 செ.மீ. அகலம் 19 செ.மீ.

**மற்ற கிராம தேவதை கோயில்கள்**

**கன்னிமார் கோயில்**
1. சப்தமாதர்தொகுதி
2. கௌமாரி
3. பிராமி
4. லட்சுமி நரசிம்மர்
5. வீரர்கள் அவர்களது மனைவியர் உருவங்கள்

இக்கோயிலுக்கு வெளியே சோழர் காலத்தின் இடைப் பகுதியைச் சார்ந்த ஐயனர் பிராமி சாமுண்டியின் சிலைகள் உள்ளன.

## புண்டரீகாட்சப் பெருமாள் கோயில்

### செப்புத்திருமேனிகள்

புண்டரீகாட்சர், பங்கயச்செல்வி, கிருஷ்ணன் உருவங்கள் மட்டும் பிற்காலச் சோழர் காலத்தினைச் சார்ந்தவை. மற்றவை விஜயநகரத்தார் காலத்தினை யும், நாயக்கர் காலத்தினையும், தற்காலத்தினையும் சேர்ந்தவை.

| பெயர் | இடம் |
|---|---|
| புண்டரீகாட்சர் | பெருமாள் கருவறை |
| பங்கயச்செல்வி | ,, |
| கிருஷ்ணன் | ,, |
| இராமர் | ,, |
| சேனைமுதலியார் | அனந்தராயர் மண்டபம் |
| திருக்கச்சிநம்பிகள் | தாயார் சன்னதி |
| பேயாழ்வார் | தசாவதாரமண்டபம் |
| பூதத்தாழ்வார் | ,, |
| பொய்கை ஆழ்வார் | ,, |
| திருமழிசையாழ்வார் | ,, |
| மதுரகவியாழ்வார் | ,, |
| திருப்பாணாழ்வார் | ,, |

| | |
|---|---|
| நாதமுனி | நாதமுனி சன்னதி-<br>சேத்தி மண்டபம் |
| நம்மாழ்வார் | ,, |
| கூரத்தாழ்வார் | சேத்தி மண்டபம் |
| தொண்டரடிப்<br>பொடியாழ்வார் | ,, |
| பெரியாழ்வார் | ,, |
| எங்கள் ஆழ்வார் | ,, |
| நாடதூரம்மாள் | ,, |
| அன்ன மூர்த்தி | ,, |
| நம்மாழ்வார்-2 | நம்மாழ்வார் சன்னதி |
| குலசேகர ஆழ்வார் | சேத்தி மண்டபம் |
| திருமங்கையாழ்வார் | ,, |
| செங்கமல நாச்சியார் | தாயார் கருவறை |
| ஆண்டாள் | நவராத்திரி மண்டபம் |
| மணவாள மாமுனி | மணவாளமாமுனி சன்னதி |

பெருமாள் கோயில்: 1. பெருமாள் 2. சூரியன் 3. சந்திரன் 4. கருடன் 5. மார்க்கண்டேயர் 6. ஆதிசேடன் 7. பூமிதேவி ஆகிய பெருமாள் கருவறையிலுள்ள இவையனைத்தும் சுதையில் ஆனவை.

கற்சிலைகள்: 1. நர்த்தன கிருஷ்ணன் 2. குழல் ஊதும் கண்ணன் 3. ருக்மிணி பாமாவுடன் கண்ணன் (சித்திர மண்டபம்) 4. சங்கநிதி 5. பதுமநிதி (சித்திர மண்டபம்) 6. சுபத்திராள் 7. பத்திராள் 8. சேனை முதலியார் (அனந்தராயர் மண்டபம்)

*தாயார் சன்னதி :* 1. திருக்கச்சி நம்பிகள் 2. பேயாழ்வார் 3. பூதத்தாழ்வார் 4. பொய்கை யாழ்வார் 5. திருமழிசையாழ்வார் 6. மதுரகவி யாழ்வார் 7. திருமங்கையாழ்வார் 8. கல்கி 9. திருப் பாணாழ்வார் 10. நாதமுனிகள் 11. கிருஷ்ணன் 12. பலராமன் 13. கோதண்டராமன் 14. பரசுராமன் 15. வாமனன் 16. நரசிங்கர் 17. வராகம் 18. கூர்மம் 19. மீனம் 20. திருத்துடைப்பன் ஸ்ரீதேவியும் பூதேவி யும் சேர்ந்து 21. கூரத்தாழ்வார் 22. எங்களாழ்வார் 23. தொண்டரடிப்பொடியாழ்வார் 24. பெரியாழ்வார் 25. செங்கமல நாச்சியார் 26. நம்மாழ்வார் 27. குல சேகர ஆழ்வார் 28. ஸ்ரீனிவாசர் 29. அலமேலு மங்கைத் தாயார் 30. சக்கரத்தாழ்வார்.

*கோபுர வாசல் :* 1. கிருஷ்ணன் 2. லட்சுமி நரசிம்மர்.

*அதிட்டானச் சிற்பங்கள் :* மேற்கண்ட சிற்பங் களை விட சிறப்பித்துப் பேசும்படியாக பெருமாள் கருவறையின் வெளிப்புறத்தில் அதிட்டானத்திலுள்ள சிற்பங்கள் காணப்படுகின்றன. இச்சிறிய சிற்பங்கள் (உயரம் 18 செ.மீ. அகலம் $7\frac{1}{2}$ செ.மீ.) நிருபதுங்கன் காலத்தியவை ஆகும். இவை திருமாலின் திருவிளை யாடல்களைச் சித்தரிக்கின்றன. கி.பி. 9-ஆம் நூற்றாண் டிலும் அதற்கு முன்னரும் தமிழகமெங்கும் நாமக்கல், மாமல்லபுரம், ஆனைமலை போன்ற இடங்களில் சிறந்து விளங்கிய நரசிங்கமூர்த்தி, வராகமூர்த்தி, திருவிக்கிரமர் உருவங்கள் இங்கும் காணப்படுகின்றன. இவற்றில்

கண்ணன் அவதாரச் சிற்பங்களே அதிகமாகக் காணப் படுகின்றன.

தென் புறம் : (கிழக்கிலிருந்து மேல்புறம்)

குடமெடுத்து ஆடிய கோபாலன்

கண்ணன் இரு கால்களையும் பின்னிக்கொண்டு நடமாடுகின்ருன். வலக்கை கீழ் நோக்கித் தொங்கு கிறது. இடக்கை கீழ் நோக்கி மடித்து வீசிய நிலையில் சுட்டு விரல் கீழே எதையோ சுட்டிக் கொண்டு இருக்கின்றது. இக்கரத்தின் மேலே முழங்கைக்கு அருகில் குடம் ஒன்றுள்ளது. தலையில் பெருத்த கொண்டை; இது நன்ருகச் சுருட்டப்பட்டு இடையில் அழகாக முடியப்பட்டுள்ளது. கண்ணன் இடப்புறம் தலையைச் சாய்த்துக் கொண்டு ஆடுகின்ருன். அந்த சிறிய முகத்தில் அன்பும், அருளும் பொங்கி வழி கின்றன. காதில் நீண்ட வளையங்கள்; கழுத்தில் தடித்த பெரிய ஆரம் காணப்படுகின்றது. தடித்த முத்து முத்தாகக் கோர்த்துச் செய்யப்பட்ட யக்ஞோப வீதம் மார்பின் குறுக்கே ஓடி வலக்கையின் மீதும் ஓடுகின்றது. அகன்ற சின்னஞ்சிறு மார்பு; வயிற்றில் உதர பந்தம்; இடையில் முடியப்பட்ட ஆடை கடி சூத்திரம் காணப்படுகின்றன. தோளில் வாகுவலயம், கரங்களில் வளையல்கள், காலில் கழல்கள் அணிந் திருக்கின்ருன். இச்சிற்பத்திற்குக் கீழ்ப் புறத்தே அன்னத்தின் கொடியலங்காரம் காணப்படுகின்றது. இது குடம் எடுத்து ஆடிய கோவிந்தனுக இருக்க வேண்டும்.

புள்வாய் கீண்ட கண்ணன்

கண்ணனின் இடக்கால் மறைந்து வந்த அரக்கனின் தலையின் மீது உள்ளது. அரக்கன் வலி பொறுக்கவியலாது கதறுகின்றான் அவனது அழகின் பாவம் இச்சிறிய சிற்பத்திலும் காட்டப்பட்டிருப்பது வியக்கத்தக்கது. கண்ணன் இடது காலால் பறவையை மிதித்து இரண்டு கரங்களாலும் பறவையின் அலகு களைப் பற்றிப் பிளக்கின்றான். அலகுகளுக்கிடையே பறவையின் நாக்கு கூட காட்டப்பட்டுள்ளது. கண்ணன் தலையில் கரண்ட மகுடம் காணப்படுகின்றது. காதில் வளையங்களும் தோளில் அழகிய வாகு வளையங் களும், கரங்களில் முத்துப்பதித்த வளையல்களும், காலில் கழலும் காணப்படுகின்றன. மார்பில் முத்துப்பதித்த பட்டையான ஆரம் காணப்படுகின்றது. தொடை வரை துகில் காணப்படுகின்றது. பரந்த அழகிய சின்னஞ்சிறு மார்பு; கண்ணன் தலை விளையாட்டாக இடப்புறம் சாய்ந்து காணப்படுகின்றது. ஆழ்வார்கள் இக்காட்சியினை

"மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனை"

என்று பாடுவார்கள். இச்சிற்பம் ஸ்வஸ்திக் கிணற்றிலும் உள்ளது.

திருமால்: வலக்காலை மடித்து இடக்காலைத் தொங்க விட்டு அமர்ந்த நிலை; இதன் மேல் சுண்ணும்பு அடித்து இதனழகைக் குலைத்திருக்கின்றனர். நான்கு கரங்கள்; வலது மேல் கரத்திற்கு மேலே தனியாக

சக்கரம் பிரயோக நிலையில் செதுக்கப்பட்டுள்ளது. இடது மேல் கரத்திற்கு மேலே சங்கு காணப் படுகின்றது. தலையில் கிரீட மகுடப்; மார்பில் தடித்த யக்ஞோபவீதப்; அது வலக்கரத்தின் மீதும் ஓடுகிறது. இடகைை உடைந்து விட்டது. வலது கீழ்க்கரம் வலது தொடையில் உள்ளது. தொடை வரை இடையில் ஆடை காணப்படுகின்றது. இதையடுத்து வலப்புறம் அன்னக்கொடி அணிச்சிற்பம் காணப்படுகின்றது.

காளிங்க நடனம்: கண்ணன் இடப்புறம்; காளிங்கன் படமெடுத்து அவன் தலைக்கருகில வாயைப் பிளந்து கொண்டு செல்கின்றது. அதன் தலையளவு வரை உயர்ந்து நிற்கும் சின்னக் கண்ணன் தன்னிரு கரங்களால் அதனைப் பற்றி அதனுடைய பின்புறம் (வால் பாகத்தில்) ஏறி நிற்கின்றான். கண்ணன தலை யலங்காரம் இங்கு மாறிக் காணப்படுகின்றது. தலைப் பாகை ஒன்று கண்ணன் தலையில் காட்டப்பட்டுள்ளது. காதுகளில் குண்டலங்கள் காணப்படுகின்றன. இடை யில் தொடைவரை ஆடையுள்ளது. வயிற்றில் உதர பந்தம் உள்ளது. இந்த புராணக் காட்சியை

"பூணாகம் பிளவெடுத்த போர் வல்லானை
. . . . . . . . . கண்டு கொண்டேன்
கடிபொழில் சூழ் கடல் மல்லைத் தலசயனத்தே

என்று திருமங்கையாழ்வார் பாடுவார்.

இரணியன்வதை: நரசிங்கர் இரணியனின் தோளோடுதோள் பொருத்திச் சண்டையிடுகிறார்: இடது கீழ்க்கரத்தால் இரணியனின் வலது கரத்தினைப்

பற்றியுள்ளார். வலது கரத்தால் அவனது இடது தோளைப் பற்றித் தன் பக்கம் இழுக்கின்றார். இரணியனின் முகம் கர்ச்சிக்கும் நரசிங்கர முகத்தினை ஏறிட்டு நோக்க முடியாது வேறு பக்கம் திரும்பிக் கொண்டிருக்கின்றது. நரசிங்கர் இரணியனின் வலது தொடையின் மீது தனது இடது காலை வைத்தழுத்தி அவனை வீழ்த்த முயலுகின்றார். அவரது மேலிரு கரங்கள் அவனை அடிக்க ஓங்கியுள்ளன. கீழே ஒரு பெண் மண்டியிட்டு வணங்குகின்றாள். இவள் இரணியனின் மனைவியாக இருக்கலாம்.

> 'வெய்ய ஞயுலகேழுடன் நலிந்தவன் உடலக மிருபிளவா
> கையில் நீளுகிர்ப் படையது வாய்த்தவனே எனக்
> கருள்புரிவாய்'.

என்று இதனைத் திருமங்கையாழ்வார் பாடுகின்றார்.

இதையடுத்து சிற்பக்கொடி காணப்படுகின்றது. இதில் அன்னத்திற்குப் பதிலாக மனித உருவங்கள் உள்ளன.

*அனந்த வைகுந்தர்:* (மேல்புறம் தென்புற மிருந்து வடக்காக).

இந்த அனந்த வைகுந்தர் சிற்பம் நாமக்கல்லி லுள்ள அதியேந்திர விஷ்ணுகிரகத்து அனந்தவைகுந் தரை நினைவூட்டுகின்றது.

ஐந்தலை அரவின் கீழ் இடது காலை மடித்துக் குத்திட்டு வலது காலைத் தொங்க விட்டு வலக்கரத்தினை

வலப்புறம் ஊன்றி இடக்கரத்தினை இடப்புறம் ஊன்றி அமர்ந்திருக்கின்றார். வலது கரத்தின் மேல் பிரயோக நிலையில் சக்கரமும், இடது கரத்தின் மேல் சங்கும் காணப்படுகின்றன. இடது காதில் மகர குண்டலம்; கைகளில் வளையங்கள் காணப்படுகின்றன. கழுத்தில் பட்டையான ஆரமும், மார்பில் தடித்த யக்ஞோப வீதமும் காணப்படுகின்றன. யக்ஞோபவீதம் வலது கரத்தின் மீதும் சென்றுள்ளது. வயிற்றில் உதர பந்தம்; கணுக்கால் வரை ஆடை காணப்படுகின்றது. வடபுறத்தில் ஊன்றிய வலது கரத்திற்குக் கீழே வலது காலுக்கு வடக்கே நரசிங்கமூர்த்தி பத்மாசனத்தில் அமர்ந்து இருகரத்தினையும் கூப்பி வைகுந்தரை வணங்குவது போன்று காட்டப்பட்டுள்ளது.

இரணியனை ஆகம் கீண்ட காட்சி: முன்னர் இரணியனுடன் சண்டையிடும் காட்சி காட்டப்பட்டது. அடுத்து அவன் வீழ்ந்த காட்சி காட்டப்பட்டுள்ளது. நரசிம்மர் இரு தொடைகளின் மீது இரணியனைக் கிடத்திக் கீழ் இடக்கரத்தால் அவனது வலது தோளினைப் பற்றி கீழ் வலக்கரத்தால் அவனது வலது மார்பைக் கிழிப்பது போன்ற காட்சி சித்திரிக்கப் பட்டுள்ளது, மேல் வலக்கரத்திற்கு மேலே பிரயோக நிலையில் சக்கரமும் இடக்கரத்திற்கு மேலே சங்கும் காணப்படுகின்றன. இதைக் கண்டு இரணியனின் மனைவி கதறும் காட்சி காட்டப்பட்டுள்ளது.

**கோபிகை**

கோபிகை ஒருத்தியின் உருவம் அழகாக வடிக்கப் பட்டுள்ளது. வலது காலை ஊன்றி இடக் காலை மடித்துப்

பின்னால் உள்ள மரத்தின் மீது வைத்துக் கொண்டு வலப்புறம் தலை சாய்த்து நிற்கின்றாள். அவளது இடக் கரம் தென்புறம் பின்னால் சென்று மரத்தினைப் பற்றிக் கொண்டிருக்கிறது. வலக்கரத்தைத் தன் முகம் நோக்கிக் கொண்டு சென்றுள்ளார். இடது தொடையும், மார்பும், வலது கரமும் பின்னப்பட்டுள்ளன. கணுக்கால்வரை ஆடை அணிந்துள்ளாள். கழுத்தில் ஆரம்; கரங்களில் வளையங்கள். காதில் குண்டலங்கள் தொங்குகின்றன. தலையில் அழகான கொண்டை ஒன்று விசிறி போன்று போடப்பட்டுள்ளது.

## நர்த்தனமாடும் சின்னக்கண்ணன்

வலக்காலை ஊன்றி இடக்காலைச் சற்று எடுத்து கண்ணன் ஆடுகின்றான். இடதுகரம், மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது. வலதுகரம் கீழ்நோக்கித் தொங்கு கிறது. தலையில் கரண்ட மகுடம் காணப்படுகின்றது. காதுகளில் வளையங்கள், மார்பிலும், தோளிலும், கரங் களிலும் அணி கலன்கள் காணப்படுகின்றன. அகன்ற சின்ன மார்பு; அதில் தடித்த பெரிய யக்ஞோபவீதம்; அதுவலது கரத்தின் மீதும் சென்றுள்ளது. வயிற்றில் உதரபந்தம்; இடையில் தொடை வரை ஆடை காணப் படுகின்றது.

## கோபிகை

கண்ணனின் வடபுறத்திலும் கோபிகை ஒருத்தி யின் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. வலக்கரம் எதன் மீதோ வைக்கப்பட்டுள்ளது. இடக்கரத்தினை வயிற்றில் வைத்திருக்கின்றாள்; கணுக்கால்வரை ஆடை; மார்பில்

ஆடை இல்லை. இதையடுத்துக் கொடியொன்று சித்திரிக்கப்பட்டுள்ளது.

வாமன அவதாரம்

உயரமான மாபலிச்சக்கரவர்த்தி குள்ளமான வாமனனுக்குத் தாரை வார்த்துத் தரும் காட்சி மிகவும் அழகிய முறையில் வடிக்கப்பட்டுள்ளது. வாமனர் வலக் கையில் சிறிய தாளக் குடையை ஏந்தி இடது கையில் மாபலியிடம் தானம் பெறுகின்றார். மணிமுடி அணிந்த மாபலி குனிந்து கமண்டலத்தைக் கவிழ்த்து இருகரங் களாலும் தாரை வார்த்துக் கொடுக்கின்றான். அவன் தோளின் மீதும் இடையின் மீதும் அழகிய துகில்கள் தவழ்கின்றன. வயிற்றில் உதரபந்தம் காணப்படு கின்றது. இக்காட்சியை,

"ஞால மூன்றடித்தாய முதல்வர்க்கு"

என்று நெய்தற்கலியும்,

"நீயிரு மிருங்குடங் கடந்த திருமார்பின்
முந்நீர்வண்ணன்"

என்று திருமுருகும் (149) பேசுகின்றன.

திருமங்கையாழ்வார் இக்காட்சியினை முழுமையாக வடித்துத் தந்துள்ளார்.

வெந்திறல் வாணன் வேள்வியிடம் எய்தி அங்கு
ஓர் குறளாகி மெய்மை உணர
செந்தொழில் வேதநாவின் முனியாகி வையம்
அடி மூன்றும் இரந்து பெறினும்
மந்தர மீது போகி மதிநின்று இறைஞ்ச

மலரோன் வணங்க வளர்சேர்
அந்தரம் ஏழினூடு செல உய்த்தபாதம்
அது நம்மை ஆளும் அரசே.

இதையடுத்து ஒரு உருவம் உள்ளது. சுண்ணும்பு நன்ருகப் பூசப் பெற்று மறைந்துள்ளமையால் என்ன வென்று அறிய முடியவில்லை.

வடபுறம்: (மேல்புறமிருந்து கீழ்புறமாக)

நிலமங்கை எழில் கொண்டான்: வராக மூர்த்தி யின் இடது தொடையின் மீது பூதேவி அமர்ந்து இரு கரம் கூப்பி வணங்குகின்ருள். அவளது தலையில் கரண்ட மகுடம் காணப்படுகின்றது. மூர்த்தியின் இடக்கரம் விஸ்மயத்திலும், வலக்கரம் கத்திரி முத்திரையிலும் காணப்படுகின்றன. வலப்பாதத் தினைத் தரையில் ஊன்றி, இடப்பாதத்தினை ஆதிசேடன் தலையின் மீது வைத்து நிற்கின்ருர். தலையில் கிரீடம்; மார்பில் பட்டை யக்ஞோபவீதம்; கழுத்தில் பட்டை யான ஆரம்; இடையில் கனத்த தடித்த ஆடை, கடி சூத்திரம் காணப்படுகின்றன. தோளில் வாகுவலையமும் கழுத்தில் ஆரமும் அணிந்துள்ளார்.

"கேழல் திகழ்வரக் கோலமோடு பெயரிய ஊழி"

என்று பரிபாடல் வராக அவதாரத்தைப் பேசுகிறது.

"ஏனத்தின் உருவாகி
நிலமங்கை எழில் கொண்டான்"

"பாரிடத்தை எயிறு கீற
இடந்தானை வளைமருப்பின் ஏனமாகி

இருநிலனும் பெருவிசும்பும் எய்தாவண்ணம்
கடந்தானை எம்மானைக் கண்டு கொண்டேன் ''

என்று திருமங்கையாழ்வார் இக்காட்சியை அழகாகப் பாடுகிறார்.

## குன்றுகுடையா எடுத்தவன்

அடுத்து ஆயர்களை இந்திரனிடமிருந்து காக்க கண்ணன் மந்தாரமலையைக் குடையாகப் பிடித்த காட்சி வடிக்கப்பட்டுள்ளது. கண்ணனின் இடக்கரம் மலையைத் தாங்கியுள்ளது. வலக்கரம் வலத்தொடையின் மீது வைக்கப்பட்டுள்ளது. வயிற்றில் உதரபந்தமும் இடையில் ஆடையும் கடி சூத்திரமும் காணப்படுகின்றன. உருவம் சுண்ணும்பு பிடித்து மழுங்கிப் போயுள்ளது.

இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த
எழில் விழவினில் பழநடைசெய்
மந்திர விதியில் பூசனை பெருது
மழைபொழிந்திட தளர்ந்து ஆயர்
எந்தம்மோடு இன ஆட நிரை தளராமல்
எம்பெருமான் அருள் என்ன
அந்தம்இல் வரையால் மழை தடுத்தான் . . .

என்று திருமங்கை மன்னன் இவ்வரலாற்றினைத் தம் பாசுரத்தில் வடித்துள்ளார்.

## மாற்பிடுகுப் பெருங்கிணற்றுச் சிற்பங்கள்

கிணற்றின் நான்கு வாயில்களுக்கும் மேலேயுள்ள சுற்பட்டிகளில் அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை பார்ப்பதற்கு மிகச் சிறியவையாய் இருந்தாலும் கலையழகில் பெரியவை. பல்லவர் காலத்தின் இறுதியில்

சிறப்புப் பெற்று விளங்கிய எல்லாச் சிற்பங்களையும் இக்கற்பத்திகளில் காணலாம்.

கீழ்புறம்: (மேலிருந்து கீழாக)

மேற்பத்தி: இடப்புறமும் வலப்புறமும் திரும்பிக் கொண்டு வாயைப் பிளந்து வாலைச் சுருட்டிக் கொண்டு சிம்மங்கள் முன் வலக்காலை உயர்த்திக் கம்பீரமாக நிற்கின்றன. இருபுறமும் சூரியசந்திரர் இருகரங்களை ஏந்திக் கொண்டு பறந்து வருகின்றனர். இவர்கள் தலைக்குப் பின்னால் ஒளி வட்டம் காணப் படுகின்றது. இவர்களுக்கு நடுவில் யோக நரசிம்மர் அமர்ந்திருக்கிறார். கீழ் வலக்கையும், இடக்கையும் மடித்துக் குத்திட்டு நிற்கும் கால்களின் மீதுள்ளன. முகத்தில் சாந்தம் குடிகொண்டுள்ளது. வடபுறம் பிரும்மாவும் இடப்புறம் தந்திவர்மனும் வீற்றிருக் கின்றனர்.

கீழ்ப்பட்டி: இதிலுள்ள மூன்று சிற்பங்கள் பற்றி விளக்கமாக மாற்பிடுதப் பெருங்கிணறுப் பகுதியில் சொல்லப்பட்டிருத்தல் காண்க.

மேல்புறம்:

கண்ணன் குதிரை அசுரனை அழித்தது: (மேற் பட்டி) கொண்டையுடன் இளம் பாலனாக கண்ணன் காட்சியளிக்கின்றான். இடையில் ஆடையும், கடிசூத்திர மும் காணப்படுகின்றன. கண்ணனை நோக்கி முன்னிரு கால்களைத் தூக்கிக் குதிரை அசுரன் பாய்கின்றான். கண்ணன் இடக் கரத்தால் அதன் தாடையைப் பற்றி

மேல்புறம் வளைத்து ஒடிக்கின்றான். வலக்கரம் குதிரை அரக்கனை அடிக்க ஓங்குவது போன்று காட்டப் பட்டுள்ளது.

கண்ணன் விடையை அழித்தது: ஏறுக வந்த அரக்கன் அருகில் கண்ணன் நிற்கின்றான். அவனது வலக்கரம் விடையின் தாடையை பற்றிக் கழுத்தை மேல்புறம் உயர்த்தி ஒடிக்கின்றது. இடக்கரம் திமிலைப்பற்றிக் கீழ்நோக்கி அழுத்துகின்றது. வலக் காலை விடையின்மேல் வைத்து மிதித்து அழுத்துகின் றான். இக்காட்சி உயிருள்ள காட்சிபோல் காணப் படுகின்றது.

> பதைத்தேபின் எழுந்தான் நிலனுயரும் பருபதம்போல்
> கொதித்தே யெதிர்நடந்தான் றனையிடு கொப்பையும்பற்றி
> யுதைத்தே யிருநிலத்தின் மிசையுறத் தள்ளி வரத்தின்
> மிதித்தானிறை யரிட்டாசூரன் வீழ்ந்தானுயிர் மாய்ந்தே[7]

என்று பாகவதம் இதைப் பாடுகிறது.

## புள்வாய் பிளந்த காட்சி

புள் மல்லாந்து கிடக்கக் கண்ணன் அதன் மீது அமர்ந்து இருகரங்களாலும் அதன் அலகுகளைப் பற்றிப் பிளக்கின்றான். இந்நிலையில் அது வலிதாங்காமல் விழி பிதுங்க அலறுவது சிற்பத்தில் அழகுற வடிக்கப்பட்டு உள்ளது.

இதன்கீழ் உள்ள பத்தியில் திருமால் தேவியருடன் வடிக்கப்பட்டுள்ளார்.

### வடபுறம்

*உமாசகிதர் (மேற்பட்டி)*

வலக்காலைத் தொங்கவிட்டு இடக்காலை மடித்து நிமிர்த்திய நிலையில், இருகரங்களை பின்னால் ஊன்றி உமா நிமிர்ந்து அமர்ந்திருக்கின்றாள். அருகில் சிவன் நான்கு கரங்களுடன் அமர்ந்திருக்கின்றார். இரு புறமும் இரண்டு விடைகள் நிற்கின்றன.

*தக்ஷிணாமூர்த்தி (கீழ்ப்பட்டி)*

வலக்காலைத் தொங்கவிட்டு இடக்காலை மடித்துக் குத்திட்டு அமர்ந்திருக்கின்றார். மேலிரு கரங்களில் மான்மழு காணப்படுகின்றன. கீழ்வலக்கரம் யோக முத்திரையிலும் இடக்கரம் இடது தொடையிலும் இருக்கின்றன. இவரது பக்கங்களில் பக்கத்திற்கிருவ ராக நான்கு முனிவர்கள் அமர்ந்து அறம் கேட்பது போன்று சிற்பம் அழகாக வடிக்கப்பட்டுள்ளது.

> **காது பொத்தரை கின்னரர் உழுவை**
> **கடிக்கும் பன்னகம் பிடிபருஞ்சியம்**
> **கோதில் மத்தவர் குடையடன் கேட்பக்**
> **கோல ஆழ்நிழற் அறம் பகர**
> **ஏகஞ் செய்தார்.**

என்று சுந்தரர் ஆலமர் செல்வனைப் பாடுவார்.

### தென்புறம்

*சப்தமாதர்கள் (மேற்பட்டி)*

மேற்புறம் விநாயகரும், கீழ்ப்புறம் வீரபத்திரரும் அமர்ந்திருக்கின்றனர். இடையில் கன்னியர் எழுவர்

நான்கு கரங்களுடன் அவரவர்களுச்குரிய ஆண் கடவுளரின் ஆயுதங்களுடன் காணப்படுகின்றனர்.

துர்க்கை: (கீழ்ப்பட்டி) இங்குள்ள துர்க்கை சிறப்பு வாய்ந்தது. துர்க்கையின் வாகனம் மான். எனவே அது 'கலேப்பரியூர்தி', என்றும் அவள் 'பாய்கலேப்பாவை' என்றும் அழைக்கப்பெறுகிருள். சென்னே கண்காட்சியகத்தில் மானுடன் நிற்கும் துர்ச்கை சிற்பம் ஒன்றுள்ளது. இங்கும் அவளது வாசனமாகிய சிம்மத்துடன் மானும் காட்டப்பட்டுள்ளது. தேவியின் மேலிரு கரங்களில் சக்கரமும் சங்கும் காணப்படுகின்றன. கீழ் வலக்கரம் அபயத்திலும் கீழ் இடக்கரம் கடிவலம்பிதத்திலும் காணப்படுகின்றன. மாமல்லபுரம் திரௌபதை ரதத்தில் காணப்படும் துர்க்கையைப் போன்றே இருபுறமும் இரு பக்தர்கள் இருக்கின்றனர். ஒருவன் அமர்ந்து தலேயை அறுத்துக் கொண்டு இருக்கின்ருன். மற்ருெருவன் அவளே வணங்கிக்கொண்டிருக்கின்ருன்.

## ஓவியங்கள்

புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலின் சித்திர மண்டபத்திலும் தாயார் சன்னதியின் திருச் சுற்று மாளிகையின் விதானங்களிலும் நாயக்கர் காலத்து[8] ஓவியங்கள் காணப்படுகின்றன. பெருமாள் கோயிலின் முதல்த் திருச்சுற்று மாளிகையின் விதானங்களிலும், கருவறைச் சுவர்களிலும் ஓவியம் தீட்டப் பெற்று அழிந்து போய் விட்டன. இவற்றில் திருமால்

அவதாரங்களின் காட்சிகள் தெளிவில்லாமல் மங்கிப் போய்த் தெரிகின்றன. ஓவியங்களுக்கு மஞ்சள், காவி, கருப்பு, வெண்மை, இளஞ்சிவப்பு, பச்சை, நீலம் முதலிய வண்ணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

சிந்நிரமண்டபம் : இம்மண்டபத்தின் தூண்களிலும் போதிகைகளிலும் ஓவியங்கள் காணப் படுகின்றன. போதிகைகளில் தொடர்பில்லாத சிறுசிறு உருவங்களும் காட்சிகளும் தீட்டப்பட்டுள்ளன.

போதிகை: (வடமிருந்து தென்புறம்)

முதல் தூண் வரிசை: (கீழ்புறம்) 1 மீனுடலும் மனித உடலும் கூடிய உருவம் 2 எருதிற்கும் களிற் றிற்கும் ஒரே தலை; வலப்புறம் நின்று பார்த்தால் எருதின் உருவமும், இடப்புறம் நின்று பார்த்தால் யானையின் உருவமும் தெரிகின்றது 3. தலை ஒன்றும் உடல் இரண்டுமாக மீனின் உருவம் 4. தாமரைக் குளம் அதில் மீன்களும் இரால்களும் நீந்துகின்றன 5. பாம்பாட்டி ஒருவன் இரண்டு குரங்குகளுடன் காணப் படுகின்றான். அவன் முன் அவனது மகுடி கேட்டு அரவு ஒன்று ஆட இருவர் அதை வேடிக்கை பார்க்கின்றனர். 6. ஒரு மலர் வட்டம் இருபுறமும் கிளிகள் நிற்கின்றன. 7. மிருகவுடலும் பறவையின் அலகும் கொண்ட உருவம். 8. மலர் வளையங்கள் 9. சக்கரத்தைப் பின்னிக் கயிறுகள் செல்கின்றன. 10. இராவணன் அரியணையில் அமர்ந்திருக்கின்றான். அவனிடத்து மூக்கறுந்த சூர்ப்பனகை முறையிடு கின்றாள். இதில் இரண்டு மான்களும் இரு காவலர்.

களும் சாட்டப்பட்டுள்ளனர். 11. அரக்கியர் இடையே அனுமன் தோன்றுகின்ருன். 12. யானை யாளிப் போர்.

இரண்டாவது தூண் வரிசை: போதிகையின் கீழ்ப்பக்கம் அன்ன வரிசை தீட்டப்பட்டுள்ளது. 1. காளையை ஒருவன் பிடித்துக் கொண்டு இருக்கிருன். 2. அன்னமிரண்டு மீனைப் பிடிக்க குளத்தில் தலையை நீட்டியுள்ளன. 3. புறவுகள் பறந்து திரிகின்றன. 4. பெண்கள் நடனமாடுகின்றனர். 5. பெண் குரங்கினை ஆண் குரங்கு அணையும் காட்சி. அதைத் தென்புற மிருந்து ஒரு குரங்கு பரிகாசம் செய்ய வடபுறமிருந்து இரண்டு குரங்குகள் விரகதாபத்துடன் உற்று நோக்கு கின்றன. 6. பசு மடியில் கன்று பால் பருகும் காட்சி. பசு கன்றினை நக்குகிறது. ஆயன் வலக்கையில் கயிறு டனும் இடக்கையில் குவளையுடனும் பசுவின் முன் நிற்கிருன். 7. மூன்று ஒட்டகங்கள்.

போதிகையின் மேற்புறம்: 1. பசுவின் இருபுறமும் அழகுடன் கொண்டையிட்ட ஆய்ச்சியர் நிற்கின்றனர். பாலகிருஷ்ணன் பசுவின் மடியில் மண்டியிட்டு பால் பருகுகிருன். 2. எருதிற்கும் கன்றிற்கும் ஒரே தலை. 3. கண்ணன் காளிங்கனின் மீது நர்த்தனம் புரிகிருன்.

மூன்ருவது தூண்வரிசை: 1. எருமைக் கிடாவை புலி தாக்கும் காட்சி. 2. யாளி யானையை அடித்து வீழ்த்தும் காட்சி.

இராமாயணக் காட்சிகள்: இக் காட்சிகள் விதா னத்தில் தூண்களுக்கு இடையே மூன்று வரிசைகளில்

தீட்டப்பட்டுள்ளன. இவற்றில் இராமாயணத்தில் வான ரங்கள் தொடர்புடைய காட்சிகளே பெரும்பாலும் தீட்டப்பட்டுள்ளன. கம்ப இராமாயணத்தில் கிட்கிந்தா காண்டத்தில் இராமன் வானரங்களைச் சந்தித்தது தொடங்கி வாலி வதைப்படலம், அரசியல் படலம், தானைகாண் படலம் என்று சுந்தரகாண்டம் முடிய உள்ள படலங்களில் வரும் 'கருவான காட்சிகள்' இவற்றில் சித்தரிக்கப்பட்டுள்ளன.

சுக்ரீவனும், அனுமனும், இராமனைக் கண்டு அரசிழந்த கதையைக் கூறுகின்றனர். வாலியைப் பற்றிக் கேட்ட இராமன் அவனைக் கொல்லும் திறன் யாருக்குண்டு என்று கேட்கிறான். அனுமன், ஒரே அம்பில் ஏழு மராமரங்களை வீழ்த்துகிறவனுக்கு அத் திறனுண்டு என்கிறான். அதுகேட்டு இராமன் ஏழு மராமரங்களை ஒரே அம்பில் வீழ்த்துகிறான். இக் காட்சி இங்குள்ள ஓவியம் ஒன்றில் தீட்டப் பட்டுள்ளது.

வாலியும் சுக்ரீவனும் போரிடுகின்றனர். இராமன் மறைந்து நின்று வாலியின்மீது அம்பு தொடுக்கிறான். அம்பு கதலியின் கனியில் பாய்வதுபோன்று அவன் மார்பில் பாய்கின்றது. அதை வாலி தடுத்து நிற்கிறான். இக்காட்சியினையும் இங்குள்ள ஓவியத்தில் காணலாம்.

சாரும் வார்சுவைக் கதலியின் கனியினைக் கழிய
சேருஞ் சூசியிற் சென்றது நின்றதென் செப்ப
நீருநீர் நெருப்பும் வன்காற்றுங்கீழ் நிமிர்த
பாருஞ்சார் வலிபடைத்தவனு ரத்தைப் பகழி9

வெற்றிவீரன் தருகணை யவன் மிடலுரத்தூ
டுற்றப் புறத்து ருதமுனுறு வலிகரத்தாற்
பற்றி வாலினுங் காலினும் பிணித்தகப்படுத்தான்
கொற்ற வெங்கொடு பறலியுஞ் சிரத்தால் குலைந்தான்10

என்று கம்பன் இக்காட்சியினைப் பாடுவான். இப்படி பல சிறப்புமிக்க காட்சிகள் இங்கு தீட்டப்பட்டுள்ளன.

கீழ்ப்புற வரிசை: 1. இராமனுக்கு முன்னால் வானரப் படைகள்; அனுமன் இராமனிடமிருந்து சூடாமணியைப் பெறுகின்றான். 2. மஞ்சள் வண்ணத்தில் அனுமன் சிறப்பித்து காட்டப்பட்டுள்ளான். அவனுடன் வானர சேனைகள் காணப்படுகின்றனர். 3. அழிந்துள்ளது 4. வானரப்படைகள் சம்பாபதியை சந்தித்தல் 5. மகேந்திர மலைக்காட்சி 6. அனுமன் கடலைத் தாண்டுதல். வழியில் சுரசையின் வாயில் புகுந்து வெளியே செல்லும் காட்சி. இங்கு கடலில் மீன்கள் நீந்துவது போன்ற கடற்காட்சிகளும் காட்டப் பட்டுள்ளன. 7. அனுமன் இலங்காதேவியிடம் போரிட்டு மதிலைத் தாண்டி இலங்கையினுள் நுழைகிறான். 8. அனுமன் சீதையைத் தேடி துயிலுகின்ற இராவணனைக் காணல்.

நடுவிலுள்ள வரிசை

1. வாலியும் சுக்ரீவனும் போர் செய்கின்றனர் இராமன் வடபுறம் மரத்தின் பின் நின்று வாலியின் மீது அம்பு தொடுக்கின்றான். 2. வாலி அம்புபட்டு வீழ்ந்து கிடக்கின்றான். தலைமாட்டில் வலக்கையினைத் தூக்கி முறையிட்டு தாரை கதறுகிறாள். 3. சிதையில்

வாலி கிடக்கிறான். இராமன் தன் அம்பினை அவன் மார்பிலிருந்து எடுக்கிறான். இலக்குவன் அவன்பின் நின்று இடது கரத்தினைத் தூக்கி ஏதோ கூறுகிறான். அங்கதன் சிதைக்கு எரி மூட்டுகிறான். 4. இராமனைச் சுக்ரீவன் வணங்கி நிற்கின்றான். 5. இராமன் சுக்ரீவனுக்கு முடி சூட்டும் காட்சி. அருகில் அங்கதனும் அனுமனும் நிற்கின்றனர். இங்கு இலக்குவனைக் காணவில்லை. இடப்பக்கம் மூன்று வானரங்கள் நிற்கின்றன. சுக்கிரீவனை வலப்புறமிருந்து இரு மறையோர் வாழ்த்துகின்றனர். மங்கையர் இருவர் மங்கலப் பொருள்களை கரங்களில் ஏந்தி நிற்கின்றனர்.

மறையோ ராசி வழங்க வானுளோர்
நறைதோய் நாண்மலர் தூவ நன்னெறிக்
கிறையோர் வினை செய்ய வேந்தகத்
துறையோர் நூன்முறை மௌலி சூட்டினான்.10

என்று கம்பன் இதைப் பாடுவான். 6. கார் காலப் படலம். இராமன் இலக்குவனன் தனியே அமர்ந்த காட்சி. 8. தானை காண் படலம். இலக்குவணன் கிட்கிந்தை சென்று வானரப் படைகளை அழைத்து வருகிறான். சுக்ரீவன் வானரப் படைகளை இராமனுக்குக் காட்டி நிற்கிறான்.

மூன்றாவது வரிசை

1. காட்டில் சீதையைத் தேடி இராமனுடன் வானரங்கள் செல்கின்றன. வழியில் கிடந்த சீதையின் அணிகலன்களை எடுத்து வந்து அனுமன் இராமனிடம் கொடுக்கிறான். காட்டில் உள்ள விலங்குகள் காட்டப்

பட்டுள்ளன. 2. இராமன் ஏழு மராமரங்களை வீழ்த்து கிறான். இராமனின் வலதுகால் பாம்பின் வாலை மிதித் துள்ளது. அம்பு ஏழு மராமரங்களைத் துண்டித்து பாம்பின் தலைப் பக்கம் செல்கின்றது. 3 அனுமன் ஜாம்பவான் 4. அசோகவனம். சீதையும் திரிசடையும் அயர்ந்திருக்கின்றனர்.

இக்காட்சிகள் அனைத்தும் கம்பராமாயணத்தை விட வான்மீகி இராமாயணத்தை அடியொற்றியே காணப்படுகின்றன.

தாயார் திருச்சுற்று ஓவியங்கள்: செங்கமல வல்லித் தாயார் திருச்சுற்று நடையின் விதானங்களில் காணப்படும் ஓவியங்கள் சித்திர மண்டபத்தில் இருப்பதை விடக் காலத்தால் சற்று பிந்தியதாக இருக்க வேண்டும்.

இவ்வோவியங்களில் பெரும்பாலானவை பெண் கள் போடும் வகைவகையான கோலங்களே. மொத்தம் ஒன்பது வகையான கோலங்கள் காணப்படுகிறது. இக்கோலங்களுக்கு இடையே பல காட்சிகள் தீட்டப் பட்டுள்ளன. கண்ணன் விளையாடுதல், அன்னங்கள், நடனமாடும் பெண்கள், மத்தளமிடும் அபிநயம் பிடிக்கும் பெண்கள், மான், கிளி, புலி, குரங்கு, பெண் மானின் மீது அம்பெய்தல், வேட்டுவன், பூதம், வேட்டுவச்சியோடு வேட்டுவன் வேட்டையாடல், கரடி யின் மீது வாளைப் பாய்ச்சும் பெண், புலியை உடலோடு உடலாக அணைத்து நிற்கும் பெண், பெண்டிர் கோலாட்டம் என்று பலவகையான உருவங்களும்,

காட்சிகளும் காணப்படுகின்றன. இச்சித்திரங்கள் அக்காலத்தார் அணிந்த ஆடை அணிகலன்களை நன்கு காட்டி நிற்கிறது.

---

1. K. R. Srinivasan, Some aspects of religion as revealed by early monuments and Literature of the South.
2. S. I. I. Vol. VI No. 633.
3. T A Gobinatha Rao, Elements of Hindu iconography Part II Vol. I.
4. K. R. Srinivasan, Some aspects of religion revealed by early monuments and Literature of the South.
5. A R E 1909. No. 705.
6. T. A. Gobinatha Rao, Elements of Hindu iconography part II Vol. I.
7. வரதராச அய்யங்கார். ஸ்ரீ மகாபாகவதம் அரிட்டா சுரப் படலம். பா. 8.
8. இரா. நாகசாமி, மா. சந்திரமூர்த்தி, தமிழகக் கோயில் கலைகள். பக். 24.
9. கம்பராமாயணம், கிட்கிந்தை, வாலிவதைப் படலம் 57, 60.
10. கம்பராமாயணம், கிட்கிந்தை,அரசியற் படலம். பா. 23.

<★>

# திருவெள்ளறைச் சமூக வரலாறு

திருவெள்ளறையில் மக்கள் கோயிலைச் சுற்றி வாழ்கிறார்கள். பெருமாள் கோயிலின் வடபுறமும், கீழ்புறமும் இரண்டு சாலைகள் செல்கின்றன. இவற்றின் இருபுறமும் வீடுகள் காணப்படுகின்றன. மேல்புறம் வீடுகள் இல்லை. பிராமணர்கள் வடக்குத் தெருவில் வசிக்கின்றனர். கிழக்குத் தெருவில் முதலியார்கள் இருக்கின்றனர். பண்டாரம், பண்டிதர், முத்து ராசாக்கள் முதலியோர் தென்பகுதியில் வாழ் கின்றனர். முத்துராசாக்களின் வீடுகள் மேல்புறத்தே ஊரை விட்டு ஒதுங்கிக் காணப்படுகிறது. கோயிலுக்குத் தென்கிழக்கே ஊரை விட்டுத் தள்ளி பறைச்சேரி உள்ளது. (கட்டுரையில் இந்த பகுதியின் மக்கள் வரலாற்றினை முன்னமே இடை இடையே கூறி இருப்பதால் வெள்ளறையில் வாழும் மக்கள் பிரிவு; அவர்களது பழக்க வழக்கங்கள் மட்டும் இங்கு சற்று விரிவாகப் பேசப்படுகிறது).

ஊரின் தோற்றம்: வெள்ளறையின் தோற்றம் பற்றி பின்வருமாறு புராண வரலாறு காணப்படுகிறது. இலக்குமி பூலோகத்தில் ஆதிக்கம் செய்ய விரும்பி விஷ்ணுவிடம விருப்பத்தை வெளியிட்டாள். அவர் சொன்னபடி பின்னர் பூவுலகத்திற்கு வந்து வெள்ளறையில் வெண்குன்றில் விஷ்ணு பூலோக

ஆதிக்கம் கொடுக்கும் நாளை எதிர் நோக்கித் தவம் புரிந்தாள். வெள்ளறையில் அவளுக்கு முன்னமே தவம் புரிந்து கொண்டிருந்த மார்க்கண்டேயரும் அவளுடன் சேர்ந்து கொண்டார். இந்த வேளையில் வடக்கேயிருந்து தெற்கேயுள்ள இராவணனை அடக்க சிபிச்சக்கரவர்த்தி புறப்பட்டு வந்தார். நீலிகாவனம் எனப்படும் திருவெள்ளறைக் காட்டில் வந்து தங்கி இருந்தார். அப்போது ஒரு பெரிய வெள்ளைப்பன்றி உருவில் விஷ்ணு அக்காட்டிற்கு வந்து தோன்றினர். அதனை அறியாத சிபிமன்னன் அதனைத் தொடர்ந்து சென்று அம்பெய்தினர். வெள்ளைப்பன்றியோ பூமியில் பல இடங்களில் புகுந்து புகுந்து மறைந்து வெளிப் பட்டது. அது புகுந்து வெளிவந்த இடங்களில் எல்லாம் புதிய புதிய சுனைகள் தோன்ற ஆரம்பித்தன. அவையே விமா, குச, சக்ர, புஷ்கல, பத்ம, வராக மணிகர்ணிகா என்ற ஆறு தீர்த்தங்களாக பெயர் பெற்றன.[1] இறுதியில் வெண்பன்றி தனது உடலைச் சுருக்கி அரவாக மாறிப் புற்றில் புகுந்து கொண்டது. சிபிச்சக்கரவர்த்தி அங்கு தவம் புரிந்து கொண்டிருந்த மார்க்கண்டேயரிடம் சென்று முறையிட்டார். அவர் புற்றில் பாலூற்றித் திருமஞ்சனமாட்டச் சொன்னர். புற்றில் பாலை வார்த்தபோது பெருமாள் வெளித் தோன்றி இலட்சுமி, மார்க்கண்டேயர், சிபி முதலி யோர்க்குக் காட்சி கொடுத்தார். இலக்குமியின் விருப்பத்தினை நிறைவேற்றினர். தர்மராஜா, சூரியன் முதலியோர்க்கும் அப்போது காட்சியளித்தார் என்றும் கூறப்படுகிறது.[2]

மார்க்கண்டேயர் சிபிச்சக்கரவர்த்தியின் நோக்க மறிந்து, திருமால் திருமகள் இருவருச்கும் வெள்ளறை யில் கோயிலெடுக்கத் தூண்டினர். வடக்கே அந்தர் வேதி என்ற இடத்திலிருந்து மூவாயிரத்தெழுநாற்று ஒரு பிராமணர்களை அழைத்துக்கொண்டு வந்தார். வழியில் மூவாயிரத்து எழுநாற்று ஒருவரில் ஒருவர் இறந்தது கண்டு வருந்தலானர். விஷ்ணு, பிராமணர் வேடம் பூண்டு வந்து அந்த இடத்தை நிறைவு செய்து அனைவரையும் திருவெள்ளறையை அடையச் செய்தார். இதை நினைவுறுத்தும் வகையில் இன்றும் திருவெள் ளறையில் ஆவணி அவிட்டத்தன்று பிராமணர்கள் அனைவரும் பூணூலணிந்து பெருமாள் கோயிலுக்குச் சென்று சந்தியாவந்தனம் செய்து பின்பு பெருமாளைப் பார்த்து வீடு திரும்புகிறார்கள். இந்தச் சடங்கில் திருமாலும் தங்களுடன் சேர்ந்து கொள்வ தாக அவர்கள் நினைக்கிறார்கள். நிற்க; பிறகு சிபி அழைத்து வந்த அனைவரையும் குடியேற்றி கோயிற் கோபுரங்களை எடுத்து ஊர் உண்டாக்கினர்.[3]

## திருவெள்ளறையில் சமூகப் பிரிவுகள்

*1971*-ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின்படி,[4] திருவெள்ளறையில் வாழ்ந்த மக்கள் பிரிவும் அவர் எண்ணிக்கை வீதமும் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| மொத்த மக்கள் தொகை | .... | 2184 |
| முத்துராசாக்கள் | .... | 61.8 % |
| பறையர்கள் | .... | 7.7 % |

| | | |
|---|---|---|
| செங்குந்த முதலியார்கள் | .... | 5.8 °/. |
| மற்றவர்கள் | .... | 5 °/. |

மற்றவர்கள் எண்ணிக்கை :

| | | |
|---|---|---|
| கல் நட்டான்+மண் நட்டான் | .... | 42 பேர் |
| ஆர் நாட்டுப்பிள்ளை+சைவப்பிள்ளை | .... | 19 பேர் |
| அய்யங்கார்+அய்யர் | .... | 35 பேர் |
| ரெட்டியார் | .... | 30 பேர் |
| சக்கிலியர் | .... | 28 பேர் |
| பண்டாரம் | .... | 23 பேர் |
| ஆசாரி | .... | 16 பேர் |
| வன்னிய செட்டியார்<br>ஆரிய வன்னிய செட்டியார் | .... | 14 பேர் |
| பண்டிதர் | .... | 22 பேர் |
| வண்ணான் | .... | 8 பேர் |
| சௌராட்டிரர் | .... | 5 பேர் |
| உடையார் | .... | 5 பேர் |
| கவுண்டர் | .... | 3 பேர் |
| நாயுடு | .... | 1 |
| கள்ளர் | .... | 4 பேர் |
| முகமதியர் | .... | 4 பேர் |
| குறவன் | .... | 25 பேர் |

இங்கு காணப்படும் பிரிவுகளில் வெள்ளறைக்குரிய சில முக்கிய பிரிவுகளின் பழக்க வழக்கங்களையும் வரலாற்றினையும் மட்டும் இனி காணலாம்.

**முத்துராசாக்கள்:** இவர்கள் திருவெள்ளறைக்கு எப்போது வந்தார்கள் என்பது தெரியவில்லை. இவர்கள் பிராமணர்களுக்கும், முதலியாருக்கும் முன்னரே கூட திருவெள்ளறைக்கு வந்திருக்கலாம். இவர்களிடையே இவர்கள் இங்கு வந்து குடியேறியது பற்றி பிராமணர்களைப் போன்ற எவ்விதக் கதையும் காணப்படவில்லை.

இவர்களைப் பற்றி 'முத்தரைசர் நாடு பாவிய ஞான்று' என்று முதன்முதலில் நரசிம்மவர்மன் நடுகல் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. இவர்களைப் பற்றிய பிற செய்திகளை முன்னால் சான்றுகளுடன் பார்த்தோம். அதை மீண்டும் இங்கு கூறாது வேறு செய்திகளைக் கூறிச் செல்கிறேன்.

முத்தரையர் என்பதே முத்துராசா என்று கூறப்படுகிறது. தெலுங்கு பேசும் முத்துராசா ஆந்திராவிலும் வட ஆர்க்காட்டிலும் அதிகமாக வாழ்கின்றார்கள். திருவெள்ளறையில் உள்ள முத்துராசாக்கள் தமிழ் பேசுகிறவர்கள். இவர்களே தமிழ் நாட்டில் அம்பலக்காரர், காவல்காரர், மணியக்காரர் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகின்றார்கள். 1901 சென்னை மாநில கணக்கெடுப்பு இவர்களை The tamil speaking cast of cultivators and village watchman[5] என்று குறிப்பிடுகிறது. இவர்கள் கட்டான உடலும், கடுமையான மேனியும் கொண்டவர்கள். தங்கள் பெயருக்குப் பின்னர் முத்துராசா என்ற பட்டத்தை இணைத்துக் கொள்கின்றனர்.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் திருச்சியில் நடந்த இவர்கள் மாநாட்டில் தங்கள் பெயருக்குப் பின்னர் அரசினரிடமிருந்து அனுமதி பெற்று முத்துராஜா என்று அழைத்துக் கொண்டார்கள்.

பிள்ளை, ரெட்டி, முதலி, ஆசாரி முதலியவர்களை விட இவர்கள் சமூகத்தில் மதிப்பில் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். ஆனால் ஒட்டர் பறையர், பண்டாரம் முதலியவர்களை விட உயர்ந்தவர்களாகக் கூறப்படுகின்றார்கள். காவல் தொழிலும், பயிர்த் தொழிலும் செய்வதையே வெள்ளறையிலுள்ள முத்து ராசாக்கள் பரம்பரைத் தொழிலாகக் கொண்டிருக் கின்றனர். சில ஆண்டுகளாகச் சிலர் வைரம் பட்டை தீட்டும் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். வெள்ளறை யைப் பொருத்தமட்டில் இவர்களே செல்வாக்கு பெற்று விளங்குகின்றார்கள். வெள்ளறையில் மட்டுமல்லாது வெள்ளறையைச் சுற்றியுள்ள தீரம்பாளையம், பூனம் பாளையம், காலவாய்பட்டி முதலிய இடங்களிலும் இவர்கள் செல்வாக்கு நிறைந்து விளங்குகின்றார்கள். இவர்கள் முடிவே ஊரின் முடிவைத் தீர்மானிக் கின்றது.

### பழக்கவழக்கங்கள்

உயர்ந்த தாழ்ந்த சாதிப் பழக்கவழக்கங்கள் இவர் களிடத்து காணப்படுகின்றன. பிராமணர்களைப் போலவே திருமணத்தின்போது புரிநூல் அணிந்து கொள்கின்றார்கள். பரிசப்பணம் கொடுக்கும் வழக்கம் காணப்படுகின்றது. இவர்கள் எந்த சமயத்தைச்

சார்ந்தவர்கள் என்று சொல்லமுடியாது. 'அரியையும், அரனையும் இவர்கள் வணங்கினாலும் ஊர்காவலர் களான இவர்கள் தெய்வமும் ஊர்க்காவல் தெய்வமான பிடாரி என்பதே பொருத்தமாகும். இவர்கள் தங்களுக்குள் பல கோத்திரங்களைக் கொண்டிருக் கின்றார்கள். ஒரு கோத்திரத்தார் மற்றொரு கோத்திரத் தாரிடம் மணவுறவுகள் வைத்துக் கொள்வதில்லை.

பெண் பார்ப்பதற்கு முன்னர் நல்ல சகுனம் பார்க் கின்றார்கள். பெண் பெரியவளான பொழுதை (ருது சதகம்) முக்கியமானதாகக் கருதுகின்றனர். நல்லநாளில் மணம் நிச்சயம் செய்யப்படுகிறது. இதில் மண மக்களின் மாமன்மார் பெரும் பங்கு ஏற்கின்றனர். மணம் இருவரது மாமன்மார் தாம்பூலம் மாற்றிக் கொள் வதால் உறுதிச் செய்யப்படுகின்றது. இவ்வேளையிலேயே பரிசப்பணம் மணமகன் வீட்டாரால் மணமகள் வீட்டார்க்குக் கொடுக்கப்படுகின்றது. பணத்தின் அளவு அவாரவர்களது பொருளாதார நிலையைப் பொருத்தமை கிறது. இவ்விழாவில் இரு வீட்டாரது நெருங்கிய உறவினர்களே பங்கேற்கின்றனர்.

திருமணம் மணமகன் வீட்டிலேயே நடைபெறு கிறது. மணத்திற்கு முதல் நாள் பெண் அழைப்பு மணமகன் வீட்டாரால் நடத்தப்படுகிறது. மணமகன் வீட்டில் சாப்பாடு முடிந்ததும் மணமகளுக்குப் புதிய உடை அளிக்கின்றனர். மணத்திற்கு முதல் நாள் மாலையில் மணமகள் ஊர்வலமாக மணமகன் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுகின்றாள். மறுநாள் மணநாள்.

முர்த்தக்கால் நடுதலோடு தொடங்குகிறது. மணமகன் மணக்கோலம் பூண்டு காலில் கங்கணம் கட்டிக்கொள் கிறான். பின்னர் பிள்ளையார் கோயிலுக்கு அழைத்துச் செல்கின்றனர். அங்கு மணக்கோலம் பூண்ட மணமகள் கையில் மணமகன் கங்கணம் கட்டுகிறான்.

பிள்ளையார் கோயிலில் இருந்து திரும்பியதும் மணப்பந்தல் வாசலில் மணமகனின் மைத்துனன் அவனது காலில் 'மிஞ்சி' அணிவிக்கிறான். பிறகு மணப் பந்தலில் மணச்சடங்குகள் தொடங்குகின்றன. முதலில் மணமக்களது தந்தையர் எதிர் எதிராக அமர்ந்து தாம்பூலம் மாற்றிக் கொள்கின்றனர். முத்துராசா திருமணச் சடங்கில் அந்தணர்கள் உண்டு. மண மகளது தாய் தந்தையர் பெண்ணை மணமகனிடத்துத் தாரை வார்த்துக் கொடுக்கும் வழக்கம் காணப்படு கிறது. பெரியவர்கள் வாழ்த்துப் பெற்ற தாலியை கெட்டி மேளத்திற்கிடையே மணமகன் மணமகள் கழுத்தில் கட்டுகிறான். மணமக்கள் தீவலம் வருகின்ற னர். அம்மிமிதித்தலும், அருந்ததி பார்த்தலும் அதைத் தொடர்ந்து நடைபெறுகிறது. மொய் எழுதும் வழக்கமும் முத்துராசாக்களிடையே நிலவுகிறது.

மாலையில் 'திட்டி கழித்தல்' நடந்து முடிந்ததும் இருவரது கைகளிலிருந்து கங்கணத்தை கழற்றுகிறார் கள். இது மணம் நிறைவடைந்ததற்கு அடையாள மாகக் கொள்ளப்படுகிறது. இதில் நெருங்கிய உறவினர் களே பங்கேற்கின்றனர். அன்றைய இரவே 'சாந்தி முகூர்த்தம்' நடைபெறுகிறது. முத்துராசாக்கள் அத்தை

மகள் அல்லது மாமன் மகளையே பெரும்பாலும் மணந்து கொள்கிறார்கள். அக்காவின் மகளை மணப்பதும் உண்டு. விவாகரத்தும், விதவை மணமும் இவர்களிடையே இல்லை. தர்ஸ்டன் விதவை மணம் சில அம்பலக்காரர்களிடம் உண்டு என்கிறார்.[6] ஆனால் வெள்ளறையில் இல்லை.

முன்பெல்லாம் திருமணச் சடங்குகள் மூன்று நாட்களாக நடைபெறுமாம். இப்போதெல்லாம் சில மணி நேரத்திலேயே முடிவடைந்து விடுகிறது. ஏழை மக்களது மணச் சடங்குகள் கோயிலிலேயே பெரும் பாலும் முடிந்து சாப்பாடு மட்டும் வீட்டில் போடப் படுவதில் முடிவடைகிறது.

குழந்தை பிறந்தவுடன் மூத்தவர் ஒருவர் இனிப் புத் துளியை குழந்தையின் வாயில் இடுகின்றார். இதனைச் 'சீனி கொடுத்தல்' என்கின்றனர். உலகில் வந்து தோன்றிய அக்குழவியின் தொடக்கம் இனிமை யாகத் தொடங்கட்டும் என்ற நோக்கில் இதைச் செய்கிறார்கள். ஒன்பதாம் நாளன்று புண்ணியாக வாசனம் நடத்துகின்றனர். குழந்தைக்கும், தாய்க்கும் தலைமுழுக்கு நடைபெறுகிறது. குழந்தைக்குப் பெயர் வைப்பதற்காக இவர்கள் எந்த விழாவும் செய்வ தில்லை. குழந்தை மூன்று, நான்கு வயது அடைந்த வுடன் குலதெய்வத்தின் சன்னதியில் மாமன் மடியில் வைத்து முடியெடுத்துக் காது குத்துகிறார்கள்.

பெண் பூப்பெய்தல்: இது அவள் வாழ்வில் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. அவள் பதினாறு

நாட்கள் தனியே குடிசை கட்டி ஒதுக்கி வைக்கப் படுகிறாள். இந்த நாட்களில் அவளுக்கு உறவினர்கள் நல்ல உணவைக் கொண்டு போய் கொடுக்கின்றனர் பதினாறும் நாள் 'கம்பன் தட்டு' என்றழைக்கப்படும் அவளிருந்த குடிசையைத் தனியே எடுத்துப் போய் யாரும் பார்க்க இயலாத காலைப் பொழுதில் எரித்து விடுகிறார்கள். பிறகு மாமன் தலைமுழுக்கு செய்து நிற்கும் அப்பெண்ணிற்கு முதலில் வரிசை கொண்டு வந்து கொடுக்கிறான். இதன் பின்னரே மற்றவர்கள் அப்பெண்ணிற்குச் சிறப்பு செய்கிறார்கள்.

முத்துராசாக்கள் குழந்தைகள், மணமாகாத வர்களைத் தவிர மற்றவர்களை எரிக்கிறார்கள். சாவு அனைவருக்கும் அறிவிக்கப்படுகிறது. அனைவரும் கூடுகிறார்கள். 'வழி அனுப்புதல்' என்ற சடங்கு தொடங்குகிறது. சுடுகாடு நோக்கிப் பாடையில் பிணம் பயணமாகிறது. வழியில் நாற்சந்தி கூடுமிடத்தில் இறந்தவரின் ஆன்மா அமைதி அடைவதற்காக தேங்காய் உடைக்கப்படுகிறது. தண்ணீரை இட மிருந்து வலமாக வழக்கத்திற்கு மாறாகச் சுற்று கிறார்கள். தேங்காயின் ஒரு துண்டினை பிணத்தின் தலைக்கருகில் வைக்கிறார்கள். இறந்தவன் மணமானவனாக இருந்தால் 'பானை உடைத்தல்' என்ற சடங்கு ஊர்வலம் புறப்படுவதற்கு முன்பு நடைபெறுகிறது. மனைவி மண்குடத்தில் நீரைச் சுமந்து பிணத்தை மூன்று முறை வலம் வந்து தலைப்பக்கத்தில் போட்டு உடைப்பாள். அவளது தாலி பிறகு அறுக்கப்பட்டு பால்நிறைந்த கிண்ணத்

தில் போடப்படுகிறது. பிறகு அவள் புத்தாடை அணிகிருள். உறவினர்கள் அரிசியைக் குத்திப் பாடையில் வைக்கிருர்கள். இதற்கு 'வாய்க்கரிசி குத்துதல்' என்று பெயர். இதுவும் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. பிணம் சுடுகாட்டிற்குச் செல்லும் வழியில் நிறுத்தப்பட்டு, மரபு வழி வந்த பாடலை இறந்தவனின் நலனுக்காகப் பாடுகிருர்கள். இதுவரை வீட்டை நோக்கி இருந்த பிணத்தின் பாடையை, இதன்பிறகு சுடுகாட்டை நோக்கித் திருப்பிக்கொண்டு சுடுகாட்டை நோக்கிப் போகிருர்கள். இதற்குமேல் எந்த பெண்ணும் தொடர்ந்து போவதில்லை. சுடுகாட்டை அடைந்ததும் உறவினர்கள் 'வாய்க்கரிசியை' பிணத்தின் வாயில் போடுகிருர்கள். கொள்ளி வைப்பதற்கு முன்னர் தண்ணீர்க் குடத்துடன் மூன்று முறை பிணத்தைச் சுற்றிவந்து உடைக்கிருர்கள். கொள்ளிவைப்பு நடந்து முடிந்ததும், முக்காடிட்டுக் கொண்டு உறவினர்கள் வீடு திரும்புகிருர்கள்.

பிணத்தை எரித்தால் மறுநாள் சாம்பலை எடுத்து ஆற்றிலோ அல்லது குளத்திலோ கலக்கின்ருர்கள். இல்லாவிட்டால் புதை இடத்திற்கு வந்து பால் ஊற்றுகிருர்கள். பதினாறு நாட்கள் துக்கம் இருந்த பின் கருமாதி செய்கிருர்கள். பிராமணர் வீட்டிற்கு வந்து புண்ணியாகவாசனம் செய்கின்ருர். காக்கைகளுக்கு வீட்டுக் கூரையில் உணவு படைக்கப்படுகிறது. காக்கைகள் அதைக் உண்ணாது இருந்துவிட்டால் அதைக் கெட்ட சகுனமாகக் கருதுகின்றனர்.

முத்துராசாக்கள் இந்த இறந்த சடங்குகள் செய்யும் போது பூணூல் தரித்துக் கொள்கிறார்கள்.

முதலியார்கள்: இவர்கள் வாழ்க்கை கோயிலோடு தொடர்புடையது. கோயில் தேவைகளுக்காக இவர்கள் இங்கு வந்து குடியேறியிருக்கலாம். தங்களது பெண் பிள்ளைகளில் ஒரு பெண்ணைக் கோயிலுக்கு அளிக்கும் தேவதாசி முறை முன்பு இவர்களிடத்துக் காணப்பட்டது.

முத்தரையர்க்கு அடுத்தபடி இவர்கள் கிராமத்தில் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறார்கள். இங்குள்ள முதலியார்கள் அசைவம். இம்முதலியார்கள் தோற்றம் பற்றி தர்ஸ்டன் பின்வரும் இருகதைகளைக் கூறுகிறார்.[7] 1. ஒரு முறை உலகத்தை வருத்திக் கொண்டிருந்த அரக்கர்களை அழிக்க தனது நெற்றிக் கண்ணைச் சிவன் திறந்தார். அதைக் கண்டு அஞ்சி ஓடிய பார்வதியின் பாதத்திலிருந்த அணியிலிருந்து ஒன்பது மணிகள் சிதறி ஓடின. அவற்றை அழகிய பெண்களாக்கிக் கூடியதில் ஒன்பது வீரர்கள் மகுடத்துடனும் சிவந்த வாளுடனும் தோன்றினார்கள். இவர்கள் முருகனைத் தலைவனாகக் கொண்டு அரக்கனை அழித்தார்கள். இவ்வொன்பது வீரர்களில் ஒருவரான வீரபாகுவின் வழி வந்தவர்கள் செங்குந்த முதலியார்கள். செங்குந்தர் என்றால் சிவந்த வாளுடையவர் என்று பொருளாகும். 2. சிவன் ஒரு முறை 'நான் கண்ணை மூடினால் இவ்வுலகும் இருளடைந்து விடும்' என்று சொல்ல பார்வதி, அது

உண்மையா என்று பார்க்கச் சிவனது கண்ணைப் பொத்தினள். உலகம் இருளடைந்தது; பார்வதி பயந்து கொண்டு ஓடியபோது ஒன்பது முத்துக்கள் சிதறின. அதை ஒன்பது பெண்ணாக்கிச் சிவன் கூடினர். அப்பெண்கள் கருக்கொண்டு நின்றனர். இது கண்டு பார்வதி கோபம் கொண்டு அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்காதபடி சாபமிட்டாள். இந்நிலையில் அசுரன் உலகைத் துன்புறுத்த அவனை அழிக்கச் சிவன் சிவன் முருகனை அனுப்பினர். அப்போது பார்வதி மகனைத் தனியே அனுப்ப வேண்டாம் என்று சொல்ல சிவன் அவளது சாபத்தை விடுமாறு கூறினர். பார்வதி சாபத்தைக் கைவிட ஒன்பது பெண்களுக்கும் ஒன்பது வீரர்கள் பிறந்து முருகனுக்குத் துணையாகச் சென்றார் கள். இவர்களில் வீரபாகுவின் வழிவந்தவர்கள் செங்குந்தர்கள் ஆவார்கள்.

### பழக்கவழக்கங்கள்

செங்குந்தர் முதலியார் கைக்கோளர் என்றும் அழைக்கப்படுகின்றார்கள். இது ஒன்பது வீரர்கள் ஏந்திய வாளின் பெயர் என்றும், இவர்கள் கையினல் செய்யப்படும் நெசவுத் தொழிலைக் குறிக்கும் என்றும் இதற்கு இரண்டு பொருள் கள் கூறப்படுகின்றன. இவர்கள் சைவர்களாக இருந்தாலும் திருமாலை அதே அளவுக்கு மதிக் கின்றார்கள். முத்திரையர்களைவிடச் சமூகத்தில் மதிப்பு பெற்றிருக்கின்றார்கள். 1891-கருப் பிறகு கைக் கோளர்கள், பிள்ளை ரெட்டியார் முதலியவர்களுக்கும் கீழ்ப்பட்டவர்களாக அரசினரால் கருதப்பட்டார்கள்.

இங்குள்ள முதலியார்களிடத்தில் 'தேவதாசி முறை' சென்ற தலைமுறைக்கு முன்னர் வரை நிலவியது. தேவதாசியாக இறுதியாக இங்குள்ள பெருமாள் கோயிலில் ஆறு பேர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவர் இன்றும் வெள்ளறையில் இருக்கின்றார்.

தேவதாசி முறை

இம்முறையைப் பற்றிச் சற்றுவிரிவாகத் தெரிந்து கொள்வது அச்சமூகத்தினரை முழுமையாகப் புரிந்து கொள்ள உதவும். 1901-ஆம் ஆண்டு இந்தியாவின் மக்கள் கணக்கெடுப்பு இத்தேவதாசி முறையைப் பின் வருமாறு கூறுகிறது.[8]

"தென்னிந்தியாவின் கோயில்கள் அனைத்திலும் இத்தேவதாசி முறை நிலவியது. இராசராசன் நானூறு தளிச்சேரிப் பெண்டுகளைத் தஞ்சாவூர் கோயிலில் நியமித் திருந்தான் என்று தஞ்சாவூர்க் கல்வெட்டுக்கள் கூறு கின்றன.[9] சென்ற நூற்றாண்டு வரை இவர்கள் மதுரை, காஞ்சிபுரம், தஞ்சாவூர் கோயில்களில் இருந்தார்கள். இவர்களுக்கெனத் தனி நிவந்தங்கள் இருந்தன". 15-ஆம் நூற்றாண்டில் விசயநகரத்திற்குத் துருக்கியி லிருந்து வந்த தூதுவர் அப்துல் ரஜாக் இப்பெண்கள் அரசியலில் சிறந்த செல்வாக்குப் பெற்றிருந்தார்கள் என்று கூறுகின்றார். ஆனால் இந்நாளில் இவர்கள் சமூகத்தில் மற்றவர்களைப் போன்று வாழும் நிலையைப் பெற்று விட்டார்கள்.

பொதுவாக இவர்கள் வாள் அல்லது இறைவன் முன் நிறுத்தப்பட்டு அக்குலத்திலுள்ள பெரியவர்

களால் தாலி கட்டப்படுகிறார்கள். பிறகு அவர்கள் கோயில் தொண்டு புரியும் பணியைத் தொடர் கிறார்கள். இவர்கள் பிள்ளைகள் நட்டுவக்காரர்களா கவும், மேளக்காரர்களாகவும், நாதஸ்வரக்காரர்க ளாகவும் சமுதாயத்தில் மாறியிருக்கிறார்கள். இத்தாசி களுக்குள்ளேயே வலங்கை இடங்கை என்று இரண்டு பிரிவுகள் உள்ளன.

திருவெள்ளறையில் இருந்த தேவதாசிகள் பல பணிகளைக் கோயிலில் செய்திருக்கிறார்கள். விழாக் காலங்களில் ஆடலும் பாடலும் நிகழ்த்தினர். தேர்த் திருவிழாவன்று தேரின் மீது நின்று ஆடுவார்கள். பூசைக்கு உதவுவதும், ஆராதனம் செய்வதும், சாமரம் வீசுவதும், மங்களம் பாடுவதும் இவர்களது தொண்டு களாக இருந்திருக்கின்றன.

ஆரம்ப காலத்தில் ஒரு நன்மை கருதித் தொடங் கப்பட்ட இம்முறை பிற்காலத்தில் ஒரு தீயசெயலுக்குக் கருவியாக்கப்பட்டு விட்டது. இந்நிலை நீடித்தது. 1947 சட்டத்திற்குப் பிறகு இத்தேவதாசி முறை சட்டப்படி குற்றம் என்று அறிவிககப்பட்டு ஒழிக்கப்பட்டு விட்டது.

பொட்டுக் கட்டும் முறை: தேவதாசியாக வரும் பெண் சிறு பெண்ணாக இருக்கும் போது ஆடல், பாடல் முதலியன பயிற்றுவிக்கப்படுகிறாள். அவள் பூப் பெய்தியதும் அவளைக் கோயிலுக்குக் கொடுக்கும் நல்ல நாளைக் குறிக்கிறார்கள். அந்நாள் வந்ததும் புத்தாடை அணிவித்து அவளை உறுதி செய்த

கோயிலுக்கு அழைத்துச் செல்கிறார்கள். அவளை இரு படியின் மீது நிற்கச் செய்து அவள் முன் மடித்த, துணிகளை இரு தேவதாசிகள் படிகளின் மீது நின்று பிடித்துக் கொள்கிறார்கள். பின்னால் அவளது நட்டு வான் அப்படிகளைத் தாளத்திற்கு ஏற்ப மேலும் கீழும் தூக்கி ஆட்டுவான். இது அப்பெண் அக்கோயி லுக்கு முழுமையாக ஆடலும், பாடலும் தொண்டு செய்ய ஆட்பட்டாள் என்று உணர்த்துகிறது. தெய்வத்தின் காலடியில் மல்லிகை மலர்களுக்கிடையே வைத்துப் பூசிக்கப் பெற்ற தாலி அவளது கழுத்தில் அவளது இனத்தைச் சார்ந்த பெரியவர்களால் அல்லது அர்ச்சகரால் கட்டப்படுகிறது. இந்நிகழ்ச்சியைப் 'பொட்டுக்கட்டுதல்' என்று அழைக்கிறார்கள். வட்ட வடிவில் ஆன (டாலர்) உலோகத்தகடு நூலில் கட்டப் பட்டு பொட்டுத் தாலியாக ஆக்கப்படும்.

அன்று மாலையில் அப்பெண்ணின் உறவி னர்களுக்கு விருந்து நடைபெறுகிறது. பிரா மணன் ஒருவன் தீவளர்த்து அவளைப் புனிதப் படுத்தும் சடங்குகளைச் செய்கின்றான். அடுத்தபடியாகப் பிராமணன் ஒருவன் அவளை கண்காணித்துக் கொள்ள இறைவனது பிரதிநிதியாக அமர்த்தப்படு கிறான். அப்பெண் ஊர்வலமாக அழைத்து வரப்படு கிறாள். அவளது வீட்டார் நாதசுரம், மேளம் இசைத் துக்கொண்டு முன்வருகின்றனர். இவர்களை மேளக் கார முதலியார் என்றழைக்கின்றார்கள். தேவதாசி யான பெண் சாகும்வரை சுமங்கலியாகவே இருக்கின் றாள். அவள் இறந்த அன்று கோயில் பூசைகள்

நடைபெறுது. அவளைப் புத்தாடை அணிவித்து சுடு காட்டிற்கு எடுத்துச் சென்று எரிக்கின்றூர்கள்.

மேளக்கார முதலியார்களிடத்து மட்டுமல்லாது திருச்சி, கோயம்புத்தூர் முதலிய இடங்களில் வாழும் திருமுடிக்கவுண்டர்களிடத்தும் இம்முறை காணப்படு கிறது.[10] தேவதாசி முறையைப் பின்பற்றுத மேளக் கார முதலியார்களோடு மற்ற முதலியார்கள் திருமண உறவு வைத்துக் கொள்கிருர்கள். திருவெள்ளறையில் இறுதியாக அறுவர் தேவதாசியாக இருந்தார்கள். அம்முறை ஒழிக்கப்பட்டபின் 1971 வரை இருவர் இருந்தார்கள். மற்றவர்கள் திருச்சி, ஸ்ரீரங்கம் போன்ற இடங்களுக்குச் சென்றுவிட்டார்கள் என்று தற்போது கோயில் திருவலகிடும் முன்பு 'தேவதாசியாக' இருந்த ஒரு பெண் கூறுகிருள். இவள் தனது பொட்டைப் (தாலி) பத்துமுறை அறுத்தெறிந்தாளாம். திரும்பத் திரும்ப அது அவளுக்குக் கட்டப்பட்டது என்று கண் ணீருடன் கடந்த கால நினைவில் மூழ்குகிருள். இவளது பழக்கங்கள் பெரும்பாலும் முத்தரையரைப் போன்றே காணப்படுகின்றன.

பிள்ளை

சைவப்பிள்ளை, ஆர்நாட்டுப்பிள்ளை என்று இரண்டு வகைப்பட்ட பிள்ளைகள் வெள்ளறையில் வாழ்கின்றூர் கள். ஆர்நாட்டுப் பிள்ளைகள் அசைவக்காரர்கள். சைவப்பிள்ளைகள் பிராமணர்களுக்கு அடுத்தபடி சமூக மதிப்பைப் பெறுகின்றூர்கள். வெள்ளறையில் பிள்ளை களின் தொகை சொற்பமே. ஆர்நாட்டுப் பிள்ளைகள்

'மொட்டை வெள்ளாளர்கள்' என்றழைக்கப்படு கிறார்கள் இவர்கள் நான்கைந்து தலைமுறைகளுக்கு முன் னர் கவுண்டர்களாக இருந்ததாகக் கூறிக் கொள் கிறார்கள். இவர்கள் ஓமந்தூரில் இருந்து வந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

பிராமணர்கள் அல்லாதவர்களிடத்துக் காணப் படும் சடங்குகள் இவர்களிடத்து காணப்படுகின்றன. அக்காவின் மகளை மணப்பது காணப்படுகிறது. மணம் நிச்சயம் செய்வற்குச் சாதகம் பார்க்கிறார்கள். சிலர் வெள்ளை, சிவப்புப் பூக்களைக் கட்டிப் போட்டு எடுத்துப் பார்க்கிறார்கள். வெள்ளை வந்தால் மங்கலமாகக் கருதுகின்றனர். மணமாகுமுன் மணமகளின் உடன் பிறந்தாள் புதிய புடவையும் சந்தனமும் கொடுத்து மாலை அணிவிக்கிறாள். திருமணம் மணமகன் வீட்டில் நடைபெறுகிறது. முதல் நாளிலேயே மணமகள் வீட்டார் சிலர் மங்கலப் பொருட்களுடன் மணமகனின் வீட்டிற்குச் செல்லும் வழக்கம் காணப்படுகிறது. பரிசம் போடுதலும் இவர்களிடத்துக் காணப்படுகிறது. மற்ற சடங்குகள் முத்துராசாக்கள் போன்றே செய்யப்படுகின்றன.

*பிராமணர்கள்:* பிராமணர்கள் திருவெள்ளறைக்கு எப்போது வந்தார்கள் என்று தெரியவில்லை. 'தில்லை மூவாயிரம் திருவெள்ளறை ஆறாயிரம்' என்ற வழக்கு காணப்படுகிறது. ஸ்தல புராணத்தில் இவர்கள் அந்தர்வேதியிலிருந்து குடியேறியதாகக் கூறப் படுகிறது.[11] மாற்பிடுகுப் பெருங் கிணற்றில் உள்ள

தந்திவர்மன் காலத்துக் கல்வெட்டில் "இதன் பியர் மார்ப்பிடுகு பெருங் கிணறென்பது. இது ரஷிப்பார் இவ்வூர் மூவாயிரத்து தெழுநூற்றுவர்" என்றும்,[12] ஹொய்சள வீரராமநாதன் கல்வெட்டில் இது மூவாயி ரத்துநூற்றுவர்[13] என்றும்,மாமல்லபுரத்து இராசராசன் காலத்துக் கல்வெட்டொன்றில் திருவெள்ளறை மூவாயிரத்து எழுநூற்றுவன்[14] என்றும், திரு வெள்ளறைச் சிவன் கோயில் விக்கிரம சோழன் கல்வெட்டில் 'திருவெள்ளறை மூவாயிரத்துப் பட்டதும்'[15] என்றும் இத்தொகை குறிப்பிடப்படுகிறது. இம் மூவாயிரத்தை வணிகர் குழாத்தைக் குறித்த தாகக் கொள்வாரும் உளர்.

பழக்க வழக்கங்கள்: வெள்ளறையில் வாழும் பிராமணர்களில் பெரும்பாலோர் தென் கலையைப் பின்பற்றுகின்றவர்கள். இவர்கள் பூர்வாசிகை (முன் குடுமி) உடையவர்களாக இருந்திருக்கின்றனர். பெரும்பாலோர் பெருமாள் கோவிலில் அர்ச்சகர் தொழில் செய்கிறார்கள். வெள்ளறையில் முன்னர் ஏராளமான அந்தணர்கள் வாழ்ந்தார்கள். சமுதாயத் தின் மாற்றத்தினால் அவர்கள் நகர்ப்புறங்களுக்குப் பெயர்ந்து சென்று விட்டார்கள்.

குருக்கள் என்றழைக்கப்படும் பிராமணர் ஒருவர் சிவன் கோயிலில் பூசை செய்கிறார். இச்சிவபிராமணர் கள் பொருளாதாரம் போன்றவற்றில் தாழ்ந்தவர் களாகவே இருக்கின்றார்கள், அய்யங்கார்கள் திருமாலைத் தவிர பிற தெய்வங்களை வணங்குவது கிடையாது. அய்யர் இரண்டையும் வணங்குகின்றனர்.

பிராமணர்கள் செய்யும் மணச்சடங்குகள் மற்றவர்களிடமிருந்து பலவகையில் வேறுபடுகின்றன. திருமணத்தன்று மணமகன் காசியாத்திரை புறப்பட்டுச் செல்வான். கிராம எல்லையை அடைந்ததும் அவனை அவனது மைத்துனர் திருமணப்பந்தலுக்கு அழைத்து வருவர். தீவலம் வருதலும், தாரைவார்த்துக் கொடுத்தலும், தாலிகட்டுதலும் திருமணத்தின் சிறப்பு நிகழ்ச்சிகள். மணமகன் மணமகளை மாமனார் மடியில் வைத்துத் தாலிகட்டும் வழக்கம் பிராமணர்களிடையே காணப்படுகின்றது. அம்மி மிதித்து அருந்ததி காட்டுதல் தொடர்ந்து நடைபெறுகின்றது. சாந்திமுகூர்த்தம் வேறொரு குறித்த நாளில் நடைபெறுகின்றது.

குழந்தைகள், இளையவர்கள் புதைக்கப்படுகிறார்கள். இறந்தவனை உடனே நீராட்டி உறவினர்கள் மூன்று முறை வலம் வந்து பாடையில் கிடத்திச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்கின்றார்கள். மூத்தமகனால் அரிசியும், வெண்ணையும் பிணத்தின் மீது போடப்படுகின்றது. பிணத்தைச் சுற்றிவந்து நீர் குடத்தைத் தலைப்பக்கம் அவனே உடைக்கின்றான். மறுநாள் அஸ்தி ஆற்றில் கலக்கப்படுகின்றது. பத்து நாட்கள் துக்கம் அனுஷ்டிக்கப்படுகிறது. பத்தாம் நாள் புண்ணியாகவாசனம் நடைபெறுகிறது.

## உபநயனம்

எல்லாப் பிராமணச் சிறுவர்களுக்கும் பூணூல் அணிவித்தல் பிராமணர்களிடையே முக்கிய சடங்காக நடைபெறுகிறது. இதை அணிவித்த பின்பே அவன்

ஒரு முழுமையான பிராமணன் என்று கருதப்படுகின்ருன். உபநயனச்சடங்கு பந்தலின்கீழ் விஸ்வசேனர் வழிபாட்டுடன் தொடங்குகிறது. சிறுவன் அக்கினி முன் வேதஒலிக்களுக்கிடையே தர்ப்பையில் அமர்ந்திருக்கின்ருன். குரு சொன்ன வேதமொழிகளைத் திரும்பச் சொல்கிருன். பின்னர் அவனுக்கு பூணூல் அணிவிக்கப்படுகிறது. அவனுக்கும் அவனது குருவிற்கும் புத்தாடை தருகின்ருர்கள். குரு மெதுவாக அவன் காதில் காயத்திரி மந்திரத்தைச் சொல்கிருர். இது 'பிராமண உபதேசம்' எனப்படும். இப்புரிநூல் ஒவ்வொரு ஆவணி ஆவிட்டத்தன்றும் மாற்றப்படுகின்றது. ஒவ்வொரு பிராமணனும் திருமணத்தின் முன்னர் இச்சடங்கைச் செய்து கொள்கிருன்.

## பண்டாரம்

இவர்கள் சைவப் பிள்ளைகள் போன்றவர்கள். லிங்கப் பண்டாரங்கள் என்று தங்களை அழைத்துக் கொள்கின்ருர்கள். பிராமணர்கள் அல்லாதோர். கோயில்களில் பூசைசெய்வதே வெள்ளறையில் இவர்களது தொழிலாக இருக்கின்றது. வெள்ளறையிலுள்ள அங்காளம்மன், செல்லாண்டியம்மன் முதலிய கோயில்களுக்கு இன்றும் இவர்களே பூசாரிகளாக இருந்து வருகின்ருர்கள். பிள்ளைகளுக்கும் இவர்களுக்கும் பழக்கவழக்கங்களில் ஒற்றுமைகள் காணப்படுகின்றன. ஆனல் பண்டாரம் திருமணத்தன்று பிராமணரை வைத்துக் கொள்வதில்லை. இதற்கு அவர்களே 'வாத்தியார்' என்று தங்களுக்குள் ஒருவரை நியமித்துக் கொண்டு இச்சடங்குகளை நடத்தச் செய்கின்றனர்.

பிணத்தை எரிப்பதில்லை. கருமாதியை வீட்டிலேயே நடத்துகின்றனர்.

மற்ற பிரிவுகள்

ஒட்டான் : ஒட்டானில் கல்ஒட்டான் மண் ஒட்டான் என்று இரண்டு பிரிவுகள் உள்ளன. இருவற்கிடையே மணவுறகள் இல்லை. மண் ஒட்டான் கல் ஒட்டானை விட உயர்ந்தவனுகக் கருதப் படுகிறுன். இவர்கள் குலதெய்வம் அங்காளப்மனுக இருக்கிறது. இவர் களிடத்தில் தாரைவார்த்தல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் போன்ற சடங்குகள் காணப்படவில்லை. தாலிகட்டு முடிந்ததும் மணமக்கள் குளத்திற்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர். அங்கு மணமகன் மண்ணைத் தோண்டுகிறுன். மணமகள் மூன்று கூடை மண்ணைச் சற்று தூரம் தூக்கிக் கொண்டு நடக் கின்ருள். இது இவர்களது பரம்பரைத் தொழிலைச் சுட்டும் வழக்கமாகக் கருதப்படுகின்றது பெண் பூப் பெய்தியதும் தனியே குடிசையில் வேப்பிலை, இருப்புத் துண்டுடன் வைக்கப்படுகின்ருள். ஏழாம் நாள் நீராட்டி அழைத்து வரப்படுகின்ருள்.

குயவன் : குயவர்கள் பிராமணர்களுக்கும் சூத்திரப் பெண்களுக்கும் பிறந்தவர்கள் என்று கூறப் படுகின்ருர்கள்.[16] இவர்களிடையே புரிநூல் அணியும் வழக்கம் காணப்படுகிறது. இவர்கள் மண்ணீட்டாளர் களாகக் கிராமத்தில் தொழில் புரிகிருர்கள்.

பறையர்: பறை கொட்டுதலாகிய தொழில் புரி

கிறவர்கள். விவாகரத்து இவர்களிடையே அனுமதிக்கப் படுகிறது. பெண் விரும்பவில்லை யென்றால் கட்டிய தாலியையும், சேலையிலிருந்து ஒரு நூலையும் எடுத்துத் தந்து விடுவாளாம். இது விவாகரத்து முடிந்தமைக்கு அடையாளமாகக் கருதப்படுகிறது. மறுமணம் அனுமதிக்கப்படுகிறது.

சக்கிலியர்: இவர்கள் தோலினால் செருப்பு முதலியன செய்யும் தொழிலைக் குலத் தொழிலாகக் கொண்டவர்கள். பறையர்களை விட சமூகத்தில் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுகின்றார்கள்.

---

1. திருவெள்ளறை மகாத்மியம்.
2. நூற்றெட்டுத் திருப்பதிகள் விவரம். சென்னை அரசினர் கீழ்த்திசை பழஞ்சுவடி நூலகம்.
3. திருவெள்ளறை ஸ்தல வரலாறு
4 Census of India, Report of 1971.
5. Census of India, Report of 1901.
6. Thirston's castes and tribes of Southern India.
7. Ibid.
8. Census of India, Report of 1901.
9. இரா. நாகசாமி தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள்.
10. Census of India, 1971 Madras vol. 9 part 8. Village Survey Monograph, Thiruvellarai.
11. திருவெள்ளறைப் புண்டரீகாக்ஷர் சிலாசாசனம் சென்னை அரசினர் கீழ்த்திசை பழஞ் சுவடி.

12. Dantivarman inscription in Tiruvellarai. Ep. Indica. Vol. XI.
13. ARE 542 of 1906.
14. S.I.I Vol. I No. 40.
15. ARE 87 of 1910.
16. Census of India 1971, Madras Vol. 9, part 8, Village Survey Monograph, Thiruvellarai.



# திருவெள்ளறைச் சாக்கைக்கூத்து

தமிழகத்தில் நிலவி மறைந்த தொன்மையான கூத்துக்களில் சாக்கைக்கூத்தும் ஒன்றுகும். தமிழகத்தில் ஒரு காலத்தில் செழித்திருந்த இக்கூத்து இன்று மறைந்து கேரளத்தில் சிறப்புற்று விளங்குகின்றது. கேரளத்தில் சாக்கியார் என்று அக்கூத்தைத் தொழிலாகக் கொண்ட சாதி ஒன்று இன்றும் அங்கே இருக்கின்றது. அதன் சிறப்பையும் தோற்றத்தையும் அறிய அங்கேதான் செல்லவேண்டும்.

## கேரளத்தில் சாக்கைக்கூத்து

கேரளத்தில் இருந்த, இருக்கும் கூத்துக்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. தொன்றுதொட்டுவரும் கிராமியக்கூத்து. 2. உயர்ந்த இலக்கணங்களைப் பெற்றுத் திகழும் பரதக் கூத்து. 3. கிராமியக்கூத்தும் பரதக்கூத்தும் இணைந்த கலவைக்கூத்து. வடமொழிப் பண்பாட்டையும் நாகரிகத்தையும் பரதக்கலை வாயிலாகப் படித்தவர்களுக்கு மட்டும் புரியும் வகையில் வெளிப்படுத்திவந்த பிராமண உயர்குடிமக்கள் அதைச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் வழிமுறையைத் தேடினார்கள். அதற்கென ஓர் இனத்தினைத் தேர்ந்தெடுத்தனர். அவர்களே சாக்கியாராவர். அவர்களுக்கு வடமொழி நாடகங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலியவற்றைக் கற்றுக் கொடுத்தனர். பரத

நாட்டியத்தின் நாடக இலக்கணத்தையும் கற்றுத் தந்தனர். அதற்குப் பிறகு இச்சாக்கியார் நாடகங்களை நடத்துவதையும் நடனங்கள் ஆடுவதையுமே தொழிலாகக் கொண்டனர், தம் சாதி மரபாகக் கொண்டனர்.[1]

சாக்கியார் என்ற சொல் சொல்வன்மை மிக்கவர் என்ற பொருளுடைய சிலாக்கியவாக்கியர் என்ற சொல்லின் திரிபு. இவர்கள் அம்பலவாசியர் என்ற வகுப்பைச் சார்ந்தவர்கள். பிராமணப் பெண்ணுக்கும் சத்திரிய வகுப்பைச் சார்ந்த ஆணுக்கும் பிறந்தவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.[2]

சாக்கியாரும் சாக்கைக்கூத்தும்

சாக்கியார், நங்கியார், நம்பிமார் எனப் பலதரப்படுவர். கோயில் மானியம் பெற்று, கோயில் விழாக்களில் சமஸ்கிருத நாடகங்கள் நடத்துவார்கள். சாக்கியாரன்றி மற்றையோர் இவற்றை ஆடக் கூடாது. சாக்கியார் ஆடுவர்; நம்பிமார் முழவு முழக்குவர். நங்கியர் ஆடுவர் அல்லது கைத்தாளம் போடுவர்.[3] சிலபோது சமஸ்கிருதப் பாடல்களை அவர்கள் இசையோடு பாடுவர். இவர்கள் தமது நடன நாடகங்களை வடமொழி புராண இதிகாசக் கதைகளைத் தழுவி கோயில் எல்லைக்குள் நடத்தினார்கள்.

கூத்தின்போது சாக்கியார்கள் பட்டினாலான வேலைப்பாடுகள் நிறைந்த தங்கச்சரிகை நிறைந்த விநோதமான தலைப்பாகையும், அதிக மடிப்புகள்

நிறைந்த அழகிய வண்ண ஆடைகளையும் அணிந்து கொள்வார்கள். அரங்கம் பூ தேங்காய், தழை, வாழை முதலியவற்ருல் அலங்கரிக்கப்பட்டிருக்கும். பெரிய விளக்கின் ஒளி பெற்றுத்திகழும்.

### சாக்கையின் பிரிவுகள்

சாக்கியார்கூத்து, பிரபந்தக்கூத்து, நங்கியார் கூத்து, கூடியாட்டம் என மூவகைப்படும்.

பிரபந்தக்கூத்து வெறும் கதாகாலட்சேபம் போன்றது. நங்கியார்கூத்தில் நிருத்தம் மட்டுமே இருக்கும். கூடியாட்டம் என்பது முழு நாடகமாகும். முதல் வகையிலும் மூன்ரும் வகையிலும் சாக்கியார், நங்கியார், நம்பிமார் ஆகிய மூவருமே மேடையில் தோன்ற வேண்டியிருக்கும். இரண்டாம் வகையில் சாக்கையார் மேடையில் தோன்ற வேண்டுவதில்லை. பிரபந்தக்கூத்து மாலையிலும், நங்கியார் கூத்து கதிரவன் மறைந்தவுடனும், கூடியாட்டம் இரவிலும் நடை பெறும்.[4]

### பிரபந்தக்கூத்து

இதில் நம்பிமார் முழவு முழக்க, நங்கியார் கைத் தாளம் போட, சாக்கியார் ஆடுவர். சாக்கியார் பிரபந்தத்திலிருந்து ஒரு பாடலை எடுத்தோதி அதற் கேற்ப ஆடுவார், விளக்கிச் சொல்வார். இக்கூத்திற்கு ஆட்டத் திறமையும் விளக்கத் திறமையுமே முக்கிய மாகும்.[5]

**நங்கியார்கூத்து**

இதில் சாக்கியாருக்குப் பதிலாக நங்கியரே ஆடுவர். நங்கியார் அழகிய வண்ண ஆடைகள் அணிந்து பாட்டிசைத்து அதற்கேற்ப அபிநயம் பிடிப்பர்.

**கூடியாட்டம்**

கூத்துப்புறப்பாடு முடிந்ததும் சாக்கியார் மேடையில் தோன்ற ஆயத்தம் ஆன பின்பு மத்தளம், முழவு, கொம்பு முதலியவை முழங்கும். நம்பிமார் அலங்காரஅறைக்குச் சென்று புனிதநீர் கொண்டுவந்து மேடையில் தெளிப்பார்கள். சுலோகம் பாடுவார்கள். அடுத்தநாள் யார் மேடையில் தோன்றுவர் என்ற அறிவிப்போடு முதல்நாள் கூத்து முடியும். இரண்டாம் நாள் குறிப்பிட்ட நடிகர் கதாநாயகனுக மேடையில் தோன்றித் தாம் நடிக்கப்போகும் அங்கத்தை அறிமுகப் படுத்துவார். இதற்கு நில்வசனம் என்று பெயர். கூத்தில் எப்போதும் நாடகம் முழுவதுமே நடிக்கப் பெறுவதில்லை. சில குறிப்பிட்ட அங்கங்கள் மட்டுமே நடிக்கப்பெறும். மூன்ரும் நாளில் விதூஷகன் நாடகத்தில் இருந்தால் அவன் தனது கொள்கைப்படி புருஷார்த்தங்களை விளக்கி மூன்றுநாள் ஆடுவான். அவன் இல்லையென்ருல் மூன்ரும்நாளே நாடகக் கதை தொடங்கும். சாக்கியார் தாம் எடுத்துக் கொண்ட நாடகத்தில் தேர்ந்தெடுத்த அங்கத்தையே நடிப்பர். கதாநாயகன் அபிநயம் பிடிக்கும் பாடலுக்கு விதூஷகன் விளக்கம் சொல்லுவான்.[6]

சாக்கியாரின் பரம்பரைப்படி அவர்கள் ஓரங்க நாடகங்கள் உட்பட மொத்தம் 72 அங்கங்களில் பயிற்சி

பெறுவார்கள். இந்த சமஸ்கிருத நாடகத்தைக் குறிக்கும் கூடியாட்டத்திலிருந்து அபிநயம் போன்ற சிறப்பான அம்சங்கள் கதக்களிக்கு வந்தன. சாக்கியார் கூத்தின் அபிநயமும் அதன் முத்திரைகளும், பாவ அபிநயமும், அரங்க இலக்கணங்களும் கதக்களிக்குத் தக்கவாறு எடுத்துக் கொள்ளப்பட்டது. சாக்கியார் கூத்துதான் கதக்களியாக வளர்ந்தது என்பர்.[7]

### தமிழகத்தில் சாக்கைக்கூத்து

இத்தகைய சிறப்பு வாய்ந்த சாக்கையார் கூத்து தமிழகத்தில் தடந்தெரியாமல் அழிந்தது நமக்கு வியப்பினை அளிக்கிறது. பண்டைய தமிழ் இலக்கண உரைகள், இலக்கியங்கள், சிற்பம், கல்வெட்டுகள் முதலியவற்றின் மூலமாகத்தான் சாக்கைக்கூத்து பற்றி அறிய முடிகிறது. அவையும் மேலே கண்ட விளக்கங்கள் இல்லாத நிலையில் நமக்கு மயக்கத்தையே தருகின்றன.

### இருவகைக்கூத்து

கூத்து இருவகைப்படும். அவை வசைக் கூத்து, புகழ் கூத்து; வேத்தியல், பொதுவியல்; வரிக் கூத்து, வரிச் சாந்திக் கூத்து; சாந்திக் கூத்து, விநோதக் கூத்து; ஆரியம், தமிழ், இயல்புக் கூத்து, தேசிக் கூத்து; எனப்படும்.[8] இவற்றுள் ஆரியக்கூத்திற்கும் தமிழ் கூத்திற்கும் உரையாசிரியர்கள் விடைதராது 'விரிந்த நூற்களில் கண்டு கொள்க' என்று விளக்கம் தராது விட்டுச் சென்றுள்ளனர்.

சிலம்பில் சேரன் செங்குட்டுவன் ஆடகமாடத்தில் அமர்ந்திருந்த போது பறையூர் கூத்தச் சாக்கையன்

என்பவன் தன் மனைவியுடன் வந்து இருவரும் சிவபெருமான், உமையவள் போன்று வேடம் புனைந்து கொட்டிச் சேதம் என்ற ஆடலை ஆடிக் காட்டினர் என்று குறிப்பிடப்படுகின்றது.

'உமையவள் ஒரு திறனாக ஓங்கிய
இமையவள் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்து.'

சிலம்பு நடுகற் பக். 74–77.

இங்கும் சாக்கை பற்றிய விளக்கம் கிடைக்கவில்லை. ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து பற்றி சோழர் கல்வெட்டு களில் நமக்குக் குறிப்புகள் கிடைக்கின்றன.

### தமிழ்க்கூத்து

முதற்குலோத்துங்கன் காலத்தில் சித்திரை திருவிழாவில் ஐந்துமுறை விக்கிரமாதித்தன் முது குன்றன் என்பவன் மானம்பாடியில் தமிழ்க்கூத்தை ஆடினான் என்று அங்குள்ள கல்வெட்டு தெரிவிக் கின்றது.[9]

### ஆரியக்கூத்து

"அடலையூர்ச் சாக்கை",[10] "திருவெள்ளறை சாக் கை"[11] என்ற இருவூர்களின் சாக்கை கூத்துகள் சோழர் காலத்தில் புகழ் பெற்றிருந்தன. அடலையூர்ச் சாக்கை முதற்பராந்தகன் காலத்தில் புகழ் பெற்றிருந்தது தெரிய வருகின்றது.[12] திருவெள்ளறைச்சாக்கை இரண்டாம் ஆதித்தனின் நாலாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில்

முதன்முதலில் குறிப்பிடப்படுகின்றது[13] இதுவே முதல் ராஜராஜன் காலத்தில் மேலும் புகழ்பெற்றுத் திகழ்ந்தது.

சாக்கைக்கூத்து என்பது ஆரியக் கூத்திலிருந்தும் வேறுபட்டதல்ல. ஆரியக் கூத்திலேயே அடங்குவதாகும். ஆரியக் கூத்தாட திருவெள்ளறைச் சாக்கைக்கு நிவந்தம் விடப்பட்டது[14] என்றும் ஆரியக் கூத்தாட சாக்கைக்காணி விடப்பட்டது[15] என்றும் குறிப்பிடப் படும் கல்வெட்டுச் செய்திகள் இம்முடிவைவலியுறுத்து கின்றன.

### அடலையூர்ச் சாக்கை

முதலாம் பராந்தகன் காலத்தில் கீழப்பழுவூர் திருவாலந்துறை நல்லூரில் ஐப்பசி அஸ்வதித் திருவிழா வில் சாக்கைக் கூத்தாட அடலையூர்ச் சாக்கைக்குப் பொன் கழஞ்சரையும், நெல் முக்கலமும் கொற்று கொடுக்கப் பட்டன. இதில் மூன்று அங்கம் மட்டுமே ஆடப் பட்டது.[16]

### திருவெள்ளறைச் சாக்கை

திருவெள்ளறைச் சாக்கை பற்றித் திருவெள்ள றைக் கல்வெட்டில் குறிப்பு ஒன்றும் காணப்பட வில்லை.

இரண்டாம் ஆதித்தன் காலத்தில் திருவிடை மருதூரில் திருவெள்ளறைச் சாக்கைக் கூத்து ஆடப் பட்டது. இதற்காக ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரி

கள் சிற்றிங்கண்உடையான் கோயில் மயிலையான பராந்தக முவேந்த வேளாரும், திரைமூர் நாடுடையாரும் திருவிடைமருதில் நகரத்தாரும், தேவகன்மிகளும் நாடகசாலையிலிருந்து கீர்த்தி மறைக்காடனான திருவெள்ளறைச் சாக்கைக்கு நிவந்தமாக பறைச்சேரி பத்து உட்பட நிலம் வேலியும் கொடுத்தனர். இந்த நிவந்தத்தைப் பெற்றுக் கொண்ட கீர்த்திமறைக் காடன் தைப்பூசத் திருநாளில் நிருத்தமாடின பிற்றை நாள் தொடங்கி பிரபந்தக்கூத்து, நங்கியார்கூத்து, கூடியாட்டம் என்று முன்னர் சொல்லப்பட்ட மூன்று கூத்துகளையும் ஆடினான். இதையே வைகாசித் திருநாளின் பிற்றை நாளிலும் ஆடினான், சாக்கைக் கூத்துகளின் 72 அங்கங்களில் ஏழு அங்கத்தை மட்டுமே இவன் இங்கு ஆடினான். தஞ்சைப் பெரிய கோயிலில் முதல் இராசராசன் காலத்தில் சாக்கைக் கூத்து நிகழ்த்தப் பட்டது. இதற்காக மறைக்காட்டுக் கணபதியான திருவெள்ளறைச் சாக்கைக்கு இராச ராசன் நிவந்தம் அளித்துள்ளான்.[17]

இம் முதல் இராசராசன் காலத்திலேயே புரட்டாசித் திருவிழாவில் திருவாவடுதுறையில் ஆரியக் கூத்து ஏழு அங்கங்கள் ஆட குமரன் ஸ்ரீகண்டன் என்பவனுக்கு நிருத்தபோகமாக நிலம் அளிக்கப் பட்டது. அவனைச் சாக்கைக்காணியான் என்று கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[18] காமரசவல்லியில் மார்கழி, வைகாசி திங்களில் திருவாதிரை நாட்களில் சாக்கைமாராயன் என்று சாக்கைக் கூத்தால் சிறப்புப் பட்டம்பெற்ற விக்ரம சோழன் என்பவனுக்கு மூன்று

முறை சாக்கைக் கூத்து ஆட அவ்வூரார் நிலம் அளித்திருக்கின்றனர்.

முதல் குலோத்துங்கனுக்குப் பிறகு சாக்கைக் கூத்து தமிழகத்தில் அருகி, கேரளத்தில் பெருகியிருக்க வேண்டும். பிற்காலச் சோழர் கல்வெட்டுகள், அதற்குப் பிறகு வந்த கல்வெட்டுகள் முதலியவற்றில் சாக்கைக் கூத்தைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. ஆனால் 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சாக்கைக் கூத்தனின் சிற்பம் ஒன்று திருவொற்றியூர்க் கோயில் தூண் ஒன்றில் இருப்பதால் இக்காலத்திலும் தமிழகத்தில் சில இடங்களில் சாக்கைக் கூத்து ஆடப் பட்டு வந்திருக்கின்றது என்பது தெரிகின்றது. கேரளாவில் திருப்பறையூர் கோயிலில் கி. பி. 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நாரதன் வடிவம் புனைந்த சாக்கைக் கூத்தனின் மரச் சிற்பம் ஒன்று காணப்படுகிறது.[19]

---

1. Arts and Crafts of Kerala, pp. 202.
   —Dr. Stella Kramrisch.
   —Dr. J. H. Cousims.
   —R. Vasudeva Poduval B.A.
2. Caste and tribes, pp. 7.
3. கலைக்களஞ்சியம் p 537 தொகுதி 4.
4. கலைக்களஞ்சியம். p. 538 தொகுதி, 4.
5. Ibid, p. 578.
6. Ibid pp 168-69, தொகுதி 3.

7. Arts and Crafts, p. 205.
8. சிலம்பு அரும்பதவுரை அடியார்க்கு நல்லார் உரை. உ. வே. சா. பக். 89.
9. ARE 90 of 1932.
10. S.I.I. Vol. XIX No. 171.
11. S.I.I. Vol. V. No. 718.
12. S.I.I. Vol. XIX No. 171.
13. Ibid.
14. S.I.I. Vol. V. No. 718.
15. ARE 54 of 1906.
16. S.I.I. Vol. 19 No. 175.
17. தஞ்சைப்பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள், பக்கம் 19. இரா. நாகசாமி.
18. ARE 120 ot 1925.
19. Arts and cr afts of Kerala. plate No. XXVI.



## மேற்கோள் நூற்கள்


1. S.I.I. Vols.
2. A.R.E. Vols.
3. Dantivarman inscription at Tiruvellarai. Epigraphica Indica Vol. XI and XXXIV K. V. Subramania Iyyer.
4. Notes on Tiruvellarai inscription Pandit. Natesa Sastri. Indian Antiquery Vol. XI and XVIII.
5. A Topograplical list of inscriptions of the Madras Presidency Vol. II and III by Rangachariya.
6. Chronological list of Pudukottai State inscriptions.
7. Epigr aphical Report for 1936.
8. கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள், முதல்தொகுதி, நடன. காசிநாதன்.
9. கல்வெட்டு ஓர் அறிமுகம், இரா. நாகசாமி.
10. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், இரா. நாகசாமி.
11. தமிழ்சாசனச்செய்யுள்மஞ்சரி, மயிலை. சீனி. வேங்கடசாமி.
12. சாசனமாலை.
13. கல்வெட்டுகளால் அறியப்பெறும் உண்மைகள், தி. வை. சதாசிவபண்டாரத்தார்.
14. Political geography of the Chola country Y. Subbarayalu.
15. Colas. Vols. K. A. Nilakanda Sastri.
16. The Pallavas. G. Jouveau Dubreuil.
17. Administration and Sccial life under the Pallavas Dr. Minakshi.

18. The Role of Feudatories in the Pallava History M. S. Govindaswamy.
19. History of India-Elphinstone.
20. Forgotten Empire-Sewell.
21. பிற்காலச்சோழர் சரித்திரம், இரண்டு பகுதிகள். தி. வை. சதாசிவபண்டாரத்தார்.
22. பாண்டியர் வரலாறு. தி. வை. சதாசிவப்பண்டாரத் தார்.
23. பல்லவர் வரலாறு. மா. இராசமாணிக்கனூர்.
24. மதுரை நாயக்கர் வரலாறு. அ. கி பரந்தமானூர்.
25. தென்னிந்திய வரலாறு. (தமிழ்) K. A. நீலகண்ட சாஸ்திரி
26. தென்னிந்திய வரலாறு. (தமிழ்) K. K. பிள்ளை.
27. ஆய்வுத்தேன். கட்டுரைத் தொகுதி.
28. The Pallava Antiquities by G. Jonveau Dubreuil Vol. I and II.
29. Elements of Hindu iconography T. A. Gobinatha Rao.
30 முற்காலச்சோழர்கலையும்சிற்பமும். S R. பாலசுப்பிர மணியம்.
31. Early Chola Art-Vol I. S. R. Balasubramaniyam.
32. Early Chola Temples Vol II. S. R. Balasubramaniyam·
33. Temples of South India. K. R. Srinivasan.
34. 'The Last of the great Chola temples-Journal of the Indian Society of Oriental Art. XVI (1643).
35. Some aspects | of relig ion as revealed by early monument and literature of the South by K R. Srinivasan.
36. Archaeological Remains Monument and Museum New Delhi 1954

37. தமிழகக்கோயிற்கலைகள். இரா. நாகசாமி மா. சந்திர மூர்த்தி.
38. Mohenjo-Daro and the Indus civilization Sir. John Marshall.
39. Swastica-T. Wilson.
40. Tribal coins A study-New Delhi-1972 M. K. Sharma.
41. Sun worship in Ancient India-V. S. Srivasava.
42. Old Records of the India office London Sir. George Birdmond.
43. Castes and tribes of Southern India-Thurston.
44. Encyclopaedia of Religion and Ethic Vol. IV.
45. Tamil Lexicon Vol II part III.
46. Tiruchirapoly District Manual-Mr. Loris Moore.
47. Tiruchinopoly Gazatter.
48. Notification in Fort. St. George-Gazatter part I dated 19th Feb 1918.
49. Census of India Report of 1901 and 1971.
50. Census of India 1971 Madras Vol 9 part 8 village survey Monograph-Tiruvellarai.
51. Alwargal Kalanilai-M. Raghava Iyengar.
52. Arts and crafts of Kerala. Dr. Stella Kramrisch and others.
53. கலைக்களஞ்சியம், மூன்று, நான்காம் தொகுதிகள், தமிழ் வெளியீட்டுக் கழகம் தமிழ்நாடு அரசு.
54. தமிழகம் ஊரும் பேரும். ரா. பி. சேதுப்பிள்ளை.
55. தமிழிலக்கிய வரலாறு. E. S. வரதராச அய்யர்.
56. தமிழிலக்கிய வரலாறு. 10. 11. 12-ஆம் நூற்றுண்டு தொகுதிகள் மு. அருணசலம்.
57. வைணவ வினா. விடை.

58. இராமாநுசர் சரித்திரம். ஸ்ரீனிவாச அய்யங்கார்.
59. சமணமும் தமிழும், மயிலை. சீனி. வேங்கடசாமி.
60. கோயிலொழுகு.
61. பூம்புகார், ஆசிரியர், அறுவர்.
62. செந்தமிழ் தொகுதி, Vol. 41.
63. திருவெள்ளறை ஸ்தல வரலாறு.
64. திருவெள்ளறை மகாத்மியம்.
65. நாற்றெட்டுத்திருப்பதி கலித்துறை. வங்கிபுரத்தாய்ச்சி சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.
66. அட்டப்பிரபந்தம். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்.
67. நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதி-உ. வே. சா. நூலகம் ஓலைச் சுவடி எண் 1030.
68. திருப்பதிவண்ணவிருத்தம்-உ. வே. சா. நூலகம் ஓலைச் சுவடி எண் 222.
69. நூற்றெட்டுத்திருப்பதி வெண்பா. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் R. 1498.
70 நூற்றெட்டுத்திருப்பதி தாலாட்டு-சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.
71. நூற்றெட்டுத்திருப்பதி திருப்புகழ்-சென்னை கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.
72. நூற்றெட்டுத்திருப்பதிக்கோவை-சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.
73 நூற்றெட்டுத்திருப்பதியடைவு-சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம்.
74 நூற்றெட்டுத்திருப்பதி பெருமாள் திருப்பள்ளியெழுச்சி. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.
75. நூற்றெட்டுத்திருப்பதி விவரம். சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம்.
76. நூற்றெட்டுத்திருப்பதிக் கோவை B. சுப்பராயபிள்ளை 1942.

77. நூற்றெட்டுத்திருப்பதியகவல் அனந்தாழ்வான் 1908.

78. நூற்றெட்டுத்திருப்பதிதுதி சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம்.

79. நூற்றெட்டுத்திருப்பதி தோத்திரம். சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

80. திருவெள்ளறைப் புண்டரீகாட்சப் பெருமாள் சந்நிதி சிலாசனம். சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் சுவடி எண் R 1645.

81 திருவெள்ளறைக் கைபீயத்து. சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம். சுவடி எண் D. 2899

82. திருவெள்ளறை கைபீது சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம். சுவடி எண் D. 3538.

83. திருச்சனுப்பள்ளி-சுபா-லால்குடி தாலுக்கா திருவளர் ஸ்தனம் கைபீயத்து. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் சுவடி எண் D. 2690

84. திரிச்சிராப்பள்ளி (இ) லாலுகுடி தாலுக்கா திரு வெள்ளறை ஸ்தல(வரலாறு) கைபீயத்து. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் சுவடி எண். 1646.

85. புறநானூறு

86. அகநானூறு.

87. நற்றிணை.

88. கலித்தொகை.

89. பரிபாடல்

90. மதுரைக்காஞ்சி.

91. சிறுபாணாற்றுப்படை.

92. சிலம்பு - அரும்பதவுரை - அடியார்க்கு நல்லார் உரை. உ. வே. சா. பக்கம் 89.

93. திருமுருகாற்றுப்படை.

94. தொல்காப்பியம்.

95. நாலடியார்.
96. தேவாரம்.
97. நாலாயிரத்திவ்யப்பிரபந்தம்.
98. சேந்தன் திவாகரம்.
99. நந்திக்கலம்பகம்.
100. பெரியபுராணம்.
101. கம்பராமாயணம்.
102. சங்கர சோழன் உலா.
103. தமிழ் விடு தூது.
104. கலிங்கத்துப்பரணி.
105. பாண்டி மண்டல சதகம்.





1. பல்லவமன்னன் தந்திவர்மன் காலத்தில் அமைக்கப்பட்ட கிணறு. சுவத்திக வடிவில் உள்ளது. மாற்பிடுகு பெருங்கிணறு, கி.பி. 800. (133-ஆம் பக்கம் பார்க்க)



2. கிணற்றின் உள்ளே இறங்க அமைக்கப்பட்டுள்ள படிகள். (133-ஆம் பக்கம் பார்க்க)



3. சிவாலயத்தின் புறத்தே உள்ள பல்லவர் கால நந்தி கி.பி. 800.



4. பாறைச் சிற்பம் கணபதி.



5. பாறைச் சிற்பம் திருமால்.

(குடைவரைச் சிவன் கோயிலில் உள்ளவை. 111-ஆம் பக்கம் பார்க்க)



6. பல்லவர் கால சப்தமாதர் சிலைகள்.
சிவன் கோயிலுக்கு அருகில் உள்ளன. (பக்கம் 154)

